விலை : ரூ. 40

தோஷம் - சிறுகதைகள் ◆ ஆண்டாள் பிரியதர்ஷினி ◆ உரிமை - ஆசிரியருக்கு ◆ முதல் பதிப்பு - 2001 ◆ ராகவேந்திரா வெளியீடு. 163/2 பொன்விழா அடுக்ககம். பாடிக்குப்பம் சாலை, அண்ணாநகர். சென்னை - 600 040. ✆ 626 7044, 621 3293 ◆ மின்னஞ்சல் : laddu@eth.net ◆ முகப்பு ஓவியம் - மகேஸ் ◆ ஒளி அச்சுக்கோவை - ஏகம் கம்ப்யூட்டர்ஸ், சென்னை -5 ✆ 852 9194 ◆ அச்சாக்கம் . சபரி பிராசஸ், சென்னை - 14

◆ ராகவேந்திரா வெளியீடு எண் 2

DHOSHAM - Short Stories ◆ Andal Priyadarshini ◆ First Edition - 2001 ◆ Size : 1/8 Demy ◆ No. of Pages : 120 ◆ Paper used for text : 11.6 Maplitho ◆ Printing Type . 11 Points ◆ Publisher : Ragavendra Veliyeedu, #163/2, Golden Jubilee Apartments, Paadikuppam Road, Annanagar, Chennai - 600 040. ✆ 626 7044, 621 3293. ◆ e-mail : laddu@eth.net ◆ Typeset at : Yegam Computers, Chennai-5. ✆ 8529194 ◆ Printed at : Sabari Process, Chennai - 14

**Price : Rs. 40**

# வலது கையில் ஆறு விரல்...

வாழ்க்கை ஒரு வரம் - படைப்பாளிக்கு.

சுயமான ஒற்றை வாழ்க்கைதான் மற்றவருக்குச் சாத்தியம். படைப்பாளிக்குப் பல வாழ்க்கை.

விதிக்கப்பட்டதை விடவும் - ஒரு நூறு வாழ்க்கையை மனசில் வாழ்ந்து பார்க்கும் கொடுப்பினை, பேனா பிடிப்பாளருக்கு உண்டு. எழுத்தில் ததும்பும் சகல உணர்வும், சகல ஜீவனும் படைப்பாளியே வாழ்க்கைப்பட்டு வசப்பட்டதுதான்.

ராமன், ராவணனும், சீதை சூர்ப்பனகையும் எனப் பலவாய் வாழ்பவன் கம்பன் ஒருவன்தானே? நல்ல விலை கொண்டு நாயை விற்போரிடையே தானும் நாயாக நைந்து, மாடாகத் தொழுவினில் நொய்ந்து பட்ட கஷ்டமும், தனியொருவனுக்கு உணவில்லாமல் ஜகம் அழிக்கத் துணிந்த இஷ்டமும், ஆணுக்கிங்கே பெண் இளைப்பில்லை என்று போர்க்கொடி தூக்கியதும், பெண்மை வாழ்கென்று ஆணாதிக்கத்தைத் தாக்கியதும், எந்தையும், தாயும் மகிழ்ந்து குலாவி இருந்ததைச் சிலாகித்ததுமாய் - பாரதியோடு - படைப்பாளிகள் சகலரும் கூடுவிட்டுக் கூடு பாய்பவர்கள்தானே?

இந்தத் தொகுப்பும் எனக்கு வாழக்கிடைத்த அடுத்தவர் வாழ்க்கையாகக் கொள்ளலாம். இவற்றை எழுதி முடித்த இந்த 39 வயசுக்குள் 60 வயசு வாழ்ந்த அனுபவ நிறைவு. என்னுடைய ரோஜாப்பாதை உலகத்திலிருந்து மாறுபட்டு இத்தனை பேரின் சரளைக்கல் வாழ்க்கையிலும் உடனிருந்த உணர்வு. அவர்களின் கைபிடித்துக் குடிசைக்குள், மாளிகைக்குள், கோயிலுக்குள், கோர்ட்டுக்குள், பள்ளிக்கூடத்துக்குள், மருத்துவமனைக்குள், காவல்நிலையத்துக்குள், படத்தொகுப்பு அறைக்குள், ஒண்டுக் குடித்தனத்துக்குள், கள்ளுக் கடைக்குள், நெருப்புக்குள், மழைக்குள், மலைப்பாதைக்குள், புல்வெட்டியாக, மரமாக, கோரைப்புல்லாக, மாட்டு வண்டியாக, பிண ஊர்தியாக, கழுத்து நெறிக்கும் ஜாதகக் கட்டமாக - எல்லாமும் எனக்குள் வியாபிப்பு.

பூமி என்பதே மண்தானே? கிராமத்து மண் வாசனைக்குச் சிம்மாசனமும், நகரத்து மண்வாசனைக்குச் சிலுவையும் யார் வகுத்த நியாயம்? எல்லாக் காலடி மண்ணிலும் புழுதி உண்டு. புனிதமும் உண்டு. கதை உண்டு. காயம் உண்டு. களங்கம் உண்டு. காவியமும் உண்டு. சேறு பூத்த காலைப் போலவே, தார்பூத்த காலும்

வணக்கத்துக்குரியதே. எல்லா இடத்திலும் கருவறை வாசம் ஒன்றுதானே?

நமது சமூகம் குறித்த என் கேள்விகள், கோபங்கள், கனவுகளாலான இத்தொகுப்பில் சகல மண்வாசனையும் உண்டு.

உயிர்ப்புக்குச் சுவாசம் சம்பிரதாயமாகுமா?

அர்த்தமே அதுதானே? அதுபோலத்தான் நன்றியும்.

இந்தப் பெண்பிள்ளையைப் பெற்றெடுத்த பெரியாழ்வார் என் அப்பா கவிஞர் நெல்லை ஆ. கணபதி, அம்மா சுப்புலட்சுமிக்கும், நான் தேடியெடுத்த இலக்கியப் புதையல் என் நேசஇணை கவிஞர் பால. இரமணிக்கும், நாங்கள் தேடியெடுத்த குழந்தைப் புதையல்கள் ஸ்ரீவிஷ்ணுவர்தன், ஸ்ரீசக்தி அபிராமி இருவருக்கும் பிரிய நன்றி.

தாமிரபரணித் தண்ணீருக்குத் தமிழ் நன்றி. எனக்குள் அக்கினியைப் பாய்ச்சிய பாரதி கவிதைக்கு ஜென்ம நன்றி.

வெகுஜன இதழ்களிலும் - இலக்கிய ரசனையை மேம்படுத்தும் பத்திரிகைகள் பல. அவற்றில் முத்திரைக் கதைகளாகவும், பரிசுக் கதைகளாகவும், சிறப்புக் கதைகளாகவும் எவ்வித மாற்றமும், சேதாரமுமின்றி வெளியான இந்தப் படைப்புகளுக்குக் கிடைத்த அங்கீகாரமும், ஆசீர்வாதமும், எதிர்ப்பும், ஏச்சும் எனக்கு உரம். என்னை ஊக்கப்படுத்தும் இவர்களுக்கு இலக்கிய நன்றி. வாசிக்கும் உங்களுக்கு உயிர் நன்றி.

என் படைப்புகள் பண்டித ஒற்றைப்பாதையாக இருப்பதை விடவும், பயன்பாடு மிகுந்த ராஜபாட்டையாக இருப்பதே என் விருப்பம். கடைசிவரை - எழுத்து அக்கினி - எனக்குள் கனன்றெரிய வேண்டும். நகர்தலற்ற மரக்கட்டை இருப்பை விடச் சருகாகவேனும் காற்றோடு நகர்வதில்தானே வாழ்க்கை உயிர்த்திருக்கிறது?

எங்கள் அம்மாவுக்கு இடது கையில் ஆறுவிரல். எனக்கு வலது கையில் - பேனாவாய். இந்த ஆறாவது விரலால்தான் என் ஜீவிதம் சாத்தியமாகிறது. சத்தியமாகிறது.

பேனாவுக்கு என் வந்தனம்.

என்றென்றும் அன்புடன்,

சென்னை - 40
6-11-2001

ஆண்டாள் பிரியதர்ஷினி

# இந்தச் சிறுகதைகளைப் பிரசுரித்த பத்திரிகைகளுக்கு நன்றிப் பூங்கொத்து

- சரஸ்வதியின் ஏடு தொலைந்து போனது - தினமணிகதிர், நவம்பர் 2000
- கற்பெனப்படுவது - தினகரன் ஜூலை, 2000 (ரூ.500/- பரிசு சிறப்புச் சிறுகதை)
- கவிதையைத் தின்று பசியாறி - தினமணிகதிர், பிப்ரவரி 2001
- சரஸ்வதியைக் கரைத்த பனிக்கட்டி - தினமணிகதிர், ஆகஸ்ட் 2001 (தினமணி, நெய்வேலி புத்தகக் கண்காட்சி சிறுகதைப் போட்டியில் இரண்டாவது பரிசு ரூ.3000/- பெற்றது)
- சந்தோஷம் விற்பவன் - இதயம் பெண்மலர், நவம்பர் 2001, தீபாவளி சிறப்பிதழ்
- இரவல் முகமும் கடன்வாங்கிச் சுவாசமும் - அம்பலம் மின்னிதழ், மே, 2000
- கோரைப் புற்களின் கோரைப்பற்கள் - ஸிஃபி டாட் காம், மின்னிதழ் ஆகஸ்ட் 2000
- சரஸ்வதி தாரை வார்த்த 33 வருஷங்கள் - தினமணி கதிர், மே, 2001
- அப்பா வாசனை - அம்பலம் மின்னிதழ், செப்டம்பர், 2001
- தீ நாக்குகள் சரசுவைத் தின்றபோது - தினமணிகதிர், ஆகஸ்ட் 2000
- அக்டோபர் 2 - விஜயபாரதம், நவம்பர் 2001 தீபாவளி சிறப்பிதழ்
- மரத்தைக் கர்ப்பம் சுமந்தவள் - கலைமகள், நவம்பர் 2001, தீபாவளி சிறப்பிதழ்
- கரீஷ்மா - ஆனந்த விகடன், பவழவிழா ரூ.5000/- பரிசு, முத்திரைச் சிறுகதை, ஜூன் 2001
- தோஷம் - ஆனந்த விகடன், பவழவிழா ரூ.5000/- பரிசு, முத்திரைச் சிறுகதை, நவம்பர் 2001

# அட்சதைக் கடிதங்கள் சில...



*28-8-2000*

*10 போரூர் தெரு,*
*கிழக்குத் தாம்பரம்,*
*சென்னை - 600 059.*

*அன்புள்ள ஆண்டாள் பிரியதர்ஷினி,*

*வாழ்த்துக்கள் - தங்கள் கவிதை (சிறுகதை)யை நேற்று தினமணி கதிரில் படித்தேன்.*

*படைப்பாளிப் பெண்ணின் பேனாவைப் பொசுக்கிய தீயும், அவளுடைய முகங்கள் ஒவ்வொன்றாக அறுபட்டதில் வடிந்த குருதியும், அவள் சுமந்த சுமைகளின் அழுத்தமும் நெஞ்சோடு ஒட்டிக் கொண்டன.*

*ஆனால், கரண்டியே பேனாவாய், முகங்களில் இருந்து வடிந்த குருதியே மையாக, சுமையின் அழுத்தங்களே எழுதுபுலனாக, ஆற்றாமையே ஆற்றலாய், சோகங்களே சுகமாகப் பரிணமிக்கச் செய்த மகிழ்ச்சி பிடிபடவில்லை. எதிர்நீச்சலுக்கு அஞ்சாத படைப்பாளிப் பெண்ணே, நீ வாழ்க! வானோங்கி வளர்க! வையப்புகழ் கொள்ள வெல்க!*

*அன்பும் பூரிப்புமாக*
*ராஜம் கிருஷ்ணன்.*



*27-02-2001*

*'எழுச்சியகம்*
*96 சீனிவாசநகர் 3ஆம் வீதி,*
*புதுக்கோட்டை - 622 004.*

*பெருமதிப்பிற்குரிய சகோதரி ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கட்கு,*

*கதிரில் வந்த உங்களின் மென்மையும், நுட்பமும் நிறைந்த கதைகளையும் படித்திருக்கிறேன். மிகச்சமீபத்தில்... 'கவிதை...' பற்றிய கதையும் கூட அருமை. அதில் வரும் (கஷ்டம் மட்டும் தவிர்ந்த) இஷ்டம் நிறைந்த இலக்கிய இணை நீங்கள் இருவரும் என்பதறிந்து மகிழ்கிறேன்.*

*அன்புடன்,*
நா. முத்து நிலவன்.



30/10/2001

இடம் : ஒட்டப்பிடாரம்
தூத்துக்குடி 628 401

**கல்யாணலட்சுமி (தோஷம் - சிறுகதை)**

*கு.ப.ரா. தந்த 'விடியுமா?'வில் வரும் பாத்திரமா...?*

*புதுமைப்பித்தன் 'காஞ்சனை'யில் நடமாடவிட்ட உறுத்தலா? ப.சீனிவாசனின் 'திருமணம்' கதையின் கதாநாயகியா? தி. ஜானகிராமனின் 'யமுனா'வின் பிரதிபலிப்பா...? அம்பையின் 'சிறகுகள் முறியும்' தெறித்த சிறகா? நடையில் பாரதியா...?*

*நளினத்தில் சுஜாதாவா?*

*சிந்தனையில் அம்ருதா ப்ரீதமா...?*

*துணிச்சலில் கிரன் பேடியா...?*

*எதனின் வார்ப்பு கல்யாணலட்சுமி...?*

*அல்லது ஆண்டாள் பிரியதர்ஷினியின் கைவிரல்*

*நழுவிய மகிசாசுர மர்த்தினியா...?*

*பள்ளம் நோக்கி ஓடும் மானின் ஓட்டத்தை*

*''மெதுவாக... மெதுவாக...'' எனச் சொல்லத் தோன்றுகிறது...*

*'சோதிடம் தனை இகழ்' என்ற பாரதியின் வரியைக் கை கோர்த்து உமிழும் லாவகம்... பெண் வெளியேறினால் சோற்றில் மண்விழும் என்ற பெற்றோரின் நப்பாசை...*

*தனக்குத் தானே தாய்மை சுமந்து... குழந்தை பெற்றுக் கொள்ளத் துடிக்கும் 'டெஸ்ட்டியூப்' தாகம்...*

*ஒன்று புரிகிறது. பெண்மையால் மட்டுமே சிந்திக்கும் 'பேறு'ச் சிந்தனையை இத்தனை காலம் எத்தனை பெண் எழுத்தாளர்கள் சூல் கொண்டார்கள்? எப்போது அவர்கள் தங்கள் 'கரு'வைக் கதறக் கதறக் கதைகளின் வழி பிரசவித்தார்கள்? சொல் புதிது - சுவை புதிது - என்றானே பாரதி...? உங்கள் கதையின் நடைபுதிது, மொழி புதிது, சொல்லும் விதம் புதிது. எத்தனை Bold Attempt?*

*'இது கலாச்சார அதிர்ச்சி?' என்று துவங்கி 'குளோனிங்'குக்குத் தாவும்... சிந்தனை... பாரின் விழிகளைக் கொஞ்சம் உயரவைத்து... வியக்க வைக்கக் கூடியது.*

*அந்த எட்டுப்பக்கக் கதையில் முக்கால் பக்க மொழு... மொழுப்புப் படம் போக உள்ள எழுத்து எரிமலையில் 185*

இடங்களில் சிவப்புமையால் அடிக்கோடிட்டு எனக்குப் பிடித்த வரிகளாக உழவு போட்டிருக்கிறேன்.

ஆனால் உங்கள் வற்றாச்சுனையிலிருந்து கிளம்பிய வார்த்தைக் கொப்பளிப்புக்குப்பின்... இனி மேலும் உங்களின் மொழிவளம் என்ன அமுத சுரபியா...? அள்ள... அள்ளக் குறையாமலிருக்க? இன்னும் எந்த வரி உங்களிடம் சூல் கொள்ளக் காத்திருக்கிறது...? என் கைச் சொடக்குக் கெல்லாம் செவி சாய்க்கும் சாகித்திய அகாடமியாக இருந்தால், இந்த ஆண்டுக்கான சிறுகதைக்குரிய பரிசை உங்கள் 'தோஷம்' படைப்பிற்கே வழங்க வைத்திருப்பேன்.

வாழ்த்துக்கள்! என்றால்... வறட்சியின் செவிலி வரிகளாக இருக்கும்.

பாராட்டுக்கள்! என்றால் பசப்பின் மொழிபெயர்ப்பாக இருக்கும்.

மெத்து... மெத்தென்ற புஷ்டிப்பூனையின் முதுகைத் தடவிக் கொடுப்பது போல்... என் எழுத்துத் தூரிகையால் வருடிக் கொடுக்கிறேன்.

தோஷம் விளக்கிய தோஷம் வாழ்க!

தோஷம் விலக்கிய தோஷம் வாழ்க!

எல்லே இளங்கிளியே! எழுத்துரிமை ஆண்டாள் பிரியதர்ஷினியே! இனிய வாழ்த்துக்கள்.

அன்புள்ள,
இளசை அருணா



5/11/01

மேலாளர், ஸ்டேட் பாங்க்
ஆப் இந்தியா, RMH ரோடு,
தஞ்சாவூர் 613 001

மேடம் வணக்கம்,

சென்ற வார ஆனந்த விகடன் இதழில் 'தோஷம்' என்று நீங்கள் எழுதிய கதையை படித்தேன். ஒரு பெண்ணின் குமுறல்களை இவ்வளவு வெளிப்படையாக, யதார்த்தமாக யாருமே வெளிப்படுத்தியிருக்க மாட்டார்கள். நல்ல நடை, அறிமுகம் இல்லாத அந்த பெண்ணுக்காக, (உங்கள் கற்பனை பாத்திரம்) என் இதயம் கண்ணீர் வடிக்கிறது. என் மனதை இந்தக் கதை மிகவும் பாதித்து விட்டதால் இக்கடிதம் எழுதுகிறேன். பாராட்டுக்கள்.

அன்புடன்,
மொஹமத் முஸ்தஃபா



நாள் : 6-5-2001

எண் 48 (பழைய எண் 1314),
ஆவது மெயின் ரோடு, திருவள்ளுவர் நகர்,
திருவான்மியூர், சென்னை - 600 041.

அன்புள்ள எழுத்தாளர், கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்களுக்கு வணக்கம். இன்று தினமணி கதிரில் வெளியான தங்களின் சிறுகதையைப் படித்து மெய்சிலிர்த்துப் போனேன். கைதேர்ந்த சிற்பி வடித்த அருமையானதொரு சிலையைப் போல உங்களின் படைப்பு மிளிர்ந்தது.

உள்ளடக்கம், உத்தி, நடை அனைத்திலும் மிகப்பெரிய எழுத்தாளுமை சுடர்விட்டுப் பிரகாசித்தது. எல்லாவகையிலும் விட்டுக் கொடுப்பதும், தியாகம் செய்வதும் பெண்களுக்கு மட்டுமே நேருகிறது என்பதை மிக எதார்த்தமாகப் படம்பிடித்திருந்தீர்கள்.

இனி மனிதர்களின் இறுதிப் பயணப் பல்லக்கை எங்கு நான் காணநேரிட்டாலும் அதில் ஜனித்திருக்கக் கூடிய உறவுகள் பற்றியும் - தங்களின் என்றுமே மரணிக்காத அந்த இலக்கிய வரிகளையும் நான் நினைப்பேன். இலக்கியம் என்பது உயிர்களுக்குள் உயிர்வாழ்வது என்பதை மிக அழுத்தமாக மீண்டும் ஒருமுறை நிரூபித்திருக்கிறீர்கள். தங்களின் கதாநாயகியின் பெயர் எப்போதுமே சரஸ்வதிதானா? நல்லது. அப்படியே இருக்கட்டும்.

தங்களின் சிறுகதைகளுக்கான தலைப்புகள் சற்று நீளமாக இருப்பதாக நான் உணர்கிறேன். அடிக்கடி பேசப்படவும், விவாதிக்கப்படவும், குறிப்பிடப்படவும் வாய்ப்புள்ள தங்களின் கதைகளுக்குத் தலைப்பு சுருக்கமாக இருப்பது மிகவும் நல்லது. என் கருத்து குறித்துப் பரிசீலியுங்கள்.

ஆக்கப் பூர்வமாகவும், அனுபவப்பூர்வமாகவும் தாங்கள் மேற்கொண்டுவரும் இலக்கியப் பயணம் மேலும் மேலும் புதிய தடங்களைப் பதிக்க என் நெஞ்சார்ந்த நல்வாழ்த்துக்களை என் துணைவி மற்றும் குழந்தைகளுடன் சேர்ந்து தெரிவித்து மகிழ்கிறேன்.

தங்களைக் குறித்த நினைவுகள் எனக்குப் பெருமிதம் தருகிறது.

அன்புடன்.
ஜெயபாஸ்கரன்



22/11/2000

கண்ணம்மா இல்லம்,
மனை எண் - 4, ஏரிப்பார்வைத் தோட்டம்,
இராமநாதபுரம், சேலம் 636 008.

அன்புடையீர், வணக்கம்.

19.11.2000 தினமணி 'சரஸ்வதியின் ஏடு தொலைந்து போனது' சிறுகதை படித்தேன். தங்களையன்றி வேறுயாரும் இவ்வளவு இயற்கையாக, ஆழமாக, திருத்தமாக, உள்ளார்ந்த சினத்துடனும், துயரத்துடனும், கவலையுடனும், வெட்கத்துடனும், இயலாமையுடனும் மலையூர்ப் பெண்களின் வாழ்க்கை அவலங்களைச் சிறப்பாகப் பதிவு செய்து தர இயலாது என்றே கருதுகிறேன்.

ஒரு சரஸ்வதியின் ஓர் ஏடு தொலைந்துபோன நிகழ்ச்சி பெரும் பாறையடியில் சிக்கிக்கொண்டாற் போன்று மிகுந்த கனத்துடன் அழுத்திக் கலங்கச் செய்தது.

யுகமகாகவி பாரதி விடுதலை பெறும் இந்தியா பற்றிக் கண்ட உயர்கனவுகளை எல்லாம் 50 ஆண்டுகளுக்கு மேலாகச் சிதைத்துத் தள்ளி மிதித்து விட்டோம்... மலைப்பகுதிகளில் மட்டுமல்ல, சமவெளிகளிலும் இத்தகைய ஊர்களும், மக்களும் இன்னமும் லட்சக்கணக்கான அளவில் சொல்லொணாத் துன்பத்தில் காலம் தள்ளி வருகிறார்கள். அவர்களைக் கடைத்தேற்ற ஆட்சியைப் பிடித்தவர்கள், பிடிக்கத் துடிக்கிறவர்கள் பலர் கோடிகோடியாக மக்கள் செல்வங்களைத் தட்டிப் பறித்து, தேவைக்கு மேல் எல்லையில்லாச் சொத்துக்களைக் குவிப்பதே இந்திய மக்களாட்சியின் பிற்கால இலக்கணம் ஆகிவிட்டது.

மலையாள, ஒரிய, வங்க இலக்கியங்களையும் செயற்கை இன்மைக்காக விரும்பி நான் படிப்பதுண்டு. அவ்விலக்கியங்களின் வரிசையில் தமிழிலும் ஓரிடம் ஏற்படுத்தியுள்ளீர்கள். நன்றி.

தலித் அல்லாத தாங்கள் தலித் இலக்கியம் படைப்பதைத் தலித் அல்லாத நான் பாராட்டுகிறேன்.

எத்தனையோ சரஸ்வதிகள் இப்படி எத்தனையோ ஏடுகளைத் தொலைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். சிலமணிநேரம் மனம் வலிக்கச் செய்தீர்கள். பெண் விடுதலை, பெண் உரிமை, பெண் கல்வி பற்றி 37 ஆண்டுகளாகத் தீவிரமாகப் பேசியும், எழுதியும் வந்துள்ளேன். சரஸ்வதிகளை நினைத்துப் பார்த்து ஏதாவது எழுதுகிறவர்களைப் பாராட்டுவதற்கு அதுவே என் தகுதி.

அன்புடன்,
கி. இளங்கோ



18/9/2K

R12. 65ஆவது தெரு, 10ஆவது செக்டர்,
கே.கே.நகர் வெஸ்ட், சென்னை - 600 078.

அம்மையாருக்கு வணக்கம்.

இராமாயணத்தையும் பாரதத்தையும் எப்பொழுது வேண்டுமானாலும், எந்தக் காலத்திலும் படிக்கலாம். அவ்வளவு சுவையும் சுவாரஸ்யமும் உண்டு. அதேபோல 27.8.2000ல் தினமணிகதிரில் வெளியான 'தீ நாக்குகள் சரகுவைத் தின்றபோது' என்ற காவியத்தை இன்று தான் படிக்க நேர்ந்தது.

ஆண்டாள் பார்ப்பதற்குப் பிரியத்தை வாரியிறைக்கும் தர்சனியாகத் தோன்றுவாளேயன்றி அவளுடைய எழுத்துக்கள் என்றுமே ஜ்வாலையுடன் இருக்கும். என்றோ பாடிய உலக மாகவி பாரதியின் செங்கதிர் பாடல்கள் இன்றுதான் கிளைத்தெழுகின்றன ஆண்டாள் வடிவில்!

''இந்த ஜன்மத்துக்கு இம்புட்டுதான். விட்டுத்தள்ளு... போ...'' என்ற எழுத்துக்கள்... அடேயப்பா ஒரு காவியமல்லவா எழுதி இருக்கிறீர்கள்.

அன்புடன்,
புனர்வசு



5/11/2001

எரிச்சநத்தம் PO
வழி - விருதுநகர்.

மதிப்பிற்குரிய திருமதி. பிரியதர்ஷினி அவர்களுக்கு வணக்கம்.

இவ்வார 'ஆனந்தவிகடன்' இதழில் நீங்கள் மறுமுறையும் ரூ.5000த்துக்கான பரிசுக் கதையை எழுதியதை நான் படித்த போது மிக்க மகிழ்ச்சியடைந்தேன். ஒரு அபூர்வமான கதாபாத்திரத்தை நல்ல technique உடன் வெற்றிகரமாக எழுத்தில் கொண்டுவந்திருப்பது மிகவும் பாராட்டுக்குரியது.

அன்புடன்,
மாறன்

29/9/00

3 இ.பி. காலனி விரிவு.
கோவை 641 041.

அன்புடையீர்,

வணக்கம்.

தினமணி கதிர் இதழில் தங்களுடைய 'தீ நாக்குகள் சரசுவைத் தின்றபோது...'' என்பதான சிறுகதையை வாசித்து விட்டு, பாராட்டி, தங்கள் முகவரி தெரியாததால், இதழின் பொறுப்பாசிரியர் மேற்பார்வையில் Redirect செய்யும் படியாகக் கேட்டுக் கடிதம் எழுதினேன். Redirect செய்வார்கள் என்ற நம்பிக்கை இல்லை. அக்கடிதம் தங்களுக்குக் கிடைத்திருக்கலாம்; கிடைக்காமலும் போயிருக்கலாம். கடிதம் எழுதினால், சில எழுத்தாளர்கள் பதில் எழுதுவார்கள்; பலர் எழுத மாட்டார்கள்.

தங்களுடைய சிறுகதையைப் படிக்குமாறு பல நண்பர்களுக்கும் கடிதம் எழுதினேன். சிலரிடம் நேரிலும் சொல்லி, அவர்களை அதிர்ச்சியோடு கூடிய வியப்பு பெறச் செய்தேன். நண்பர் தி.க.சி.க்கு எழுதியதில், அவரும் பாராட்டியதோடு நில்லாமல் தங்களைப் பற்றிய விவரங்களையும் தந்திருந்தார். அவருடைய நண்பரான கவிஞர் நெல்லை ஆ. கணபதியின் மகள் என்றும், கவிஞர் பால. இரமணியின் மனைவி என்றும் தெரிவித்திருந்தார். மன்னிக்கவும். இன்றும் ஆண்களைக் குறிப்பிட்டுத்தான் பெண்களை அறிமுகப்படுத்த வேண்டிய நிலை இருக்கிறது. தங்கள் முகவரியும் கொடுத்திருந்தார்.

மீண்டும் கூறுகிறேன். அற்புதமான ஒரு கதையைத் தந்திருக்கிறீர்கள். இந்த நூற்றாண்டின் முத்தாய்ப்பான சிறந்த சிறுகதை எனக் கூறலாம். 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் - எங்கள் இறைவா' என்றார் பாரதி. அவற்றில் ஓர் இன்பம் தங்களுடைய சிறுகதை. கதையின் உள்ளடக்கம் இயல்பாக, சிறப்பானதான நடையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறது. கதையை ஹைதராபாத் சாந்தாதத் அம்மையாருக்கு அனுப்பினேன். அவரும் புளகாங்கிதமுற்று எழுதினார். பாராட்டுக்கள். வாழ்த்துக்கள்.

அன்புடன்,
ம.ந. ராமசாமி

'ஆண்டாக் கண்ணு'

என்று வாத்சல்யமாய் அழைத்து

என் எழுத்தில் பூரிக்கும்

எங்கள் சித்தப்பா

**தச்சநல்லூர் பு. தியாகராஜனுக்கு...**

## வாசிக்க வசதியாக...

# சரஸ்வதியின் ஏடு தொலைந்து போனது...

காலை அகட்டி அகட்டி நடந்தாள் பவுனு. லேசாக உராய்ந்தாலும் சுரீரென்றது. நெருப்புக் கங்கினால் தீய்த்த மாதிரி எரிந்தது. உடல் உபாதை.

புத்தகச் சுமை ஒரு கையில். காலைத் தடுத்ததால் தூக்கிப் பிடித்த பாவாடை ஒரு கையில். நழுவிய தாவணியையும் சேர்த்துப் பிடித்தாள். அடுத்த அடி எடுத்து வைக்கக்கூடக் கஷ்டமாயிருந்தது. நடக்க முடியாமல் ரெண்டு தொடையும் உராய்ந்து உராய்ந்து தீயாய்க் காந்தியது. தோல் வழண்டு போயிருந்தது.

''சீக்கிரம் வாயேண்டி... மப்பா இருட்டிட்டு வருதுல்ல....?''

பச்சையம்மா ஓட்டமும் நடையுமாயப் பத்தடி முன்னே போய்க் கொண்டிருந்தாள். ஒரு பர்லாங் போல நடந்து ஏலமலை மேடு ஏறி இறங்கினால்-சைக்கிளோடு அவளின் அண்ணன்காரன் நிற்பான்.

''வெரசா நடடி. ஆட்டங் காட்டுதியே. அண்ணங் கத்தும்...'' பதறினாள் பச்சையம்மா.

ம்ஹூம். பவுனுவால் முடியவில்லை. கால் ரெண்டும் காலையிலேயே இற்றுப் போயிருந்தன. முட்டியில் பாறாங்கல்லைக் கட்டின மாதிரி பாரம். நீட்டவும் முடியாமல், மடக்கவும் முடியாமல் வாதை. கூடவே இந்த வலி வேறு ஊசியாய்க் குத்தியது.

பச்சையம்மா இன்னமும் பெரிய மனுஷியாகவில்லை. இந்த மாதிரிப் பிரச்சினையெல்லாம் அவளுக்குச் சொன்னாலும் புரியாது.

'ஏந்தான் பன்னண்டு வயசுலேயே பெரிய மனுஷியானேன்னு தெரியல்ல.... நடக்கக்கூட முடியல்ல. ரெண்டு மாசம் முந்தி கூடக் காத்துமாதிரி வெரசாப் போவேன். மூணுமணி நேரம்னாலும் மூச்சைப் புடிச்சிட்டு நடப்பேன். பத்தே நிமிஷத்துல ஆத்துல நீந்தி அந்தாண்ட

போயிடுவேன். வீடும் இஸ்கோலும் வெளையாட்டா வந்து நிற்கும். இப்பம் நாலஞ்சு மணி நேரமாவுது...'

இதற்கு மேலும் பிரச்னையை யோசிக்கக்கூடத் தெம்பில்லை. மனசு தொய்ந்து போயிருந்தது.

அன்றைக்கொருநாள் - தனியாய்க் கொட்டகையில் உலக்கைக்கு அந்தப் பக்கம் கொட்டுக் கொட்டென்று ரெண்டுமூணு நாளாய் உட்கார்ந்த போது பவுனு பரிதவித்துத்தான் போனாள்.

'பொஸ்தவப் பையக் குடு சின்னாத்தா. பக்கத்தைப் பொரட்டிட்டாவது உக்காந்திருக்கேன். கொடி ஏத்தறப்ப நானு பேசணும். வாத்தியார் எளுதிக் குடுத்தாரு. கேக்குறியா? பெண்கள் படித்தால்தான் நாடு முன்னேறும். அவர்களின் கல்விமேம்பாட்டுக்காக அரசாங்கம் பல கோடிகளைச் செலவு செய்கிறது. திட்டங்கள்தீட்டுகிறது. செயல்படுத்தியும் வருகிறது. கிராமப்புற மேம்பாட்டுக்காகப் பல திட்...''

''அடி வெளக்குமாறால. தூக்கிப் போடு அந்தக் களுதய. இனிமே என்னாத்துக்குப் பள்ளியோடம்? வீட்டோட குந்தி ஆக்கிப் போடு. எவன் கைலயாச்சும் புடிச்சுத் தர்ற வரைக்கும் வயக்காட்டுக்கு வா. கூலி வேலை பாரு. நாலு காசு சம்பாரிச்சுத் தா. தம்பி தங்கச்சிங்க கஞ்சிகாவும்...'

'ஐயோ சின்னாத்தா. நா படிக்கோணும். டீச்சர் ஆவோணும். ரொம்ப ஆசையா இருக்காத்தா. வகுப்புல நாந்தான் மொதலு. படிக்கறத நிறுத்திப்புடாதேன்னு வாத்தியாரு சொல்லிருக்காரு.'

'அட... எவடி இவ பைத்தாரியாட்டம் பெனாத்தறா? ம்? இம்புட்டுத் தொலவு நெதமும் நடக்கக் கழியுமா? எதித்தூட்டுப் பாண்டிம்மா பாரு. எப்படா உக்காருவம்னு காத்திட்டிருந்த மாதிரி பட்டுன்னு பள்ளியோடத்துலேர்ந்து நின்னுட்டா. ஆசக்கிளி மவ நடக்க ஏலாதுன்னு பொஸ்தவத்தத் தூக்கிப் போட்டிருச்சு. அதுங்க கூடை மொடையுதுங்களே... நீயும் போ. படிச்சுக் கிளிச்சு என்னாத்தப் பொரட்டுவே? பெரிய படிப்பு படிச்சா எவங் கட்டிப்பான்? பொட்டியிலே இடிச்சுட்டுல்ல ஓடுவானுவ?'

சின்னாத்தாவின் புலம்பல்- அந்த உலக்கையைத் தாண்டிப் பவுனுவின் காதில் ஏறினால்தானே?

'சனி ஞாயிறு நானும் மொடையறேன் சின்னாத்தா. நாலு காசு சம்பாரிச்சுத் தாரேன். ஆனா மத்த நாளு பள்ளியோடம் போவணும். டீச்சர் படிப்புப் படிக்கணும். ஆறாப்புலத்தான் இங்கிலீசு சொல்லித்

தராரு வாத்தியாரு. சிஎடி கேட், பிஎடி பேட்டு... நல்லாருக்கா சின்னாத்தா...?''

'க்கும். சாணிக்கணக்கா இருக்கு...'

'கோச்சுக்காத சின்னாத்தா. அன்னிக்கு வெள்ளை வேட்டிக்காரரு கூடச் சொன்னாரே...'

'என்னாத்தச் சொன்னாரு?'

'க்கும். 'ஆ'ன்னு வாயப் பொளந்து அம்புட்டு ஜனமும் நாங்கள கேட்டுச்சு. பொண்ணுங்க படிக்க வாரதாலத்தான் பஸ்ஸு விடுறோம், ரோடு போடுறோம்னு. கோடி ரூவா வந்துருக்காமே மலை மேல ரோடு போட...'

'ஆமாமா... மண்டை மண்டையாக் கருங்கல்லு வாரிக் கொட்டினாவ. அதான் ரோடுன்னாவ. பஸ்ஸுக்காரன் மக்கா நாளே நின்னுட்டானே... இப்பியும் சுத்துப் பாதைல நடந்து உள்ளங்காலுதான தேயுது...'

'ஆமாத்தா. நா டீச்சரானவுட்டு பஸ்ஸு வுடச்சொல்றேன். நெதமும் வரணும். ரோடு நல்லாப் போடணும். நம்மூரு பொண்ணுங்க கஷ்டப்படாமப் படிக்கணும் சின்னத்தா...'

பவுனுவின் கெஞ்சலா, 'சரி விட்டுப்பிடிக்கலாம்' என்ற நினைப்போ- சின்னாத்தா ஒன்றும் சொல்லவில்லை அன்று.

ஏலமலைக்கு இந்தப் பக்கம் ஓராசிரியர் பள்ளிக்கூடம். அந்தப் பக்கம் பள்ளத்தில் சோத்துமலை கிராமம். இருநூறு குடும்பம் இருக்கும் ஊர். எதற்குமே மைல்கணக்கில் நடக்க வேண்டிய அளவுக்கு ஒதுக்கப்பட்ட மலைக் கிராமம். ஒரு குடம் நீருக்கு - ஊற்றுப் பாறைக்கு அஞ்சு மைல். எஸ்டேட் கூலி வேலைக்குப் பத்துமைல். மருத்துவ மனைக்குப் பதிமூணு மைல். ரேஷனுக்குப் பதினைஞ்சு மைல். பள்ளிக்கூடத்துக்குப் பன்னிரண்டு மைல். இப்படி நடந்தே தீர வேண்டும் என்று விதிக்கப்பட்டவர்கள். மின்சாரமும் சாலையும் எதுவுமே இல்லாத கிராாமம். இந்தக் கையகல ஊருக்காகவும் படிக்காத சனங்களுக்காகவும் கவலைப்பட யார் இருக்கிறார்கள்?

'கள்ள ஓட்டு குத்துய்யா.... நூறு ஓட்டுக்காக யார் மலையேறுவா? அங்கன போயிட்டாலும் ரோடு போடு, லைட்டுப் போடுன்னு ரவுசு பண்ணுங்க பன்னாடை நாய்ங்க...'

இப்படிச் சகலராலும் சபிக்கப்பட்ட இருப்பு அவர்களுடையது. மலைப் பாதையில் வெறும் காலால் நடப்பதற்குள் கல் குத்திக் குத்திக் கன்னிப் போகும். ரத்தம் கசியும். பாதம் வீங்கிப் போகும். இத்தனை

வருஷமும் இதே பாதைதான், பாதை என்றால் கருங்கல், தார் என்றில்லை. வெறுமனே கல்பாதை. சிறிசும் பெரிசுமாய்ச் செம்மண் உருண்டைகளும், குருணைக் கல்லுமாய்ப் போட்டு நிரப்பிக் கணக்குக் காட்டின பாதை. ரேஷன் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் முழுசாய்ப் பதினைந்து மைல் நடந்து போய், 'ஸ்டாக் இல்லை' என்று ரேஷன் காரன் சுளுவாய்க் கைவிரித்தால் அந்த ஏமாற்றம்கூட ஜீரணித்து விடுவார்கள். வீசின கையும் வெறும் கையுமாய் மறுபடியும் பதினைந்து மைல் திரும்ப வேண்டும். இன்னொரு நாளும் ரேஷனுக்காக இதே நடை விதித்திருக்கும் என்றால் காலிலா ரத்தம் கசியும்? கண்ணில் ரத்தம் கொட்டும். மருத்துவமனைக்குப் போகும் வழியிலேயே உயிர்விட்டவர்கள், பிரசவத்தை மலை மேலே முடிக்கும் ஆயாவால் செப்டிக் ஆக்கப்பட்டுச் செத்தவர்கள், குடிநீருக்காகக் குடத்தைத் தூக்கி அஞ்சு மைல் நடந்து போய் - கிடைக்காமல் கண்ணீரை நிரப்பிக் கொண்டு வந்தவர்கள்... இப்படி இந்தக் கிராமத்தின் கஷ்டராமாயணம். இதன் தொடர்ச்சிதான் பவுனு.

"வெரசா வா பவுனு. மேகம் துரத்திட்டு வருது. மழை கொட்டும் போல இருக்கு. நீ எப்படிப் போவ?"

"நீ வெசனப்படாத பச்சை. நா நடந்துருவேன்..."

காலை அகட்டி அகட்டி நடந்தாள் பவுனு.

'ஒண்ணாப்புலேர்ந்து இதே பாதைலதான் வாரேன். முந்தீல்லாம் அக்கம்பகத்துப் பொண்ணுங்க பத்துப் பேரு கும்பலா வருவோம். ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொருத்தியா நின்னுட்டா. பெரியவளா யிட்டா படிப்பு அம்பேல்தான்... நா மட்டும் ஏன் பிடிவாதமா வாரேன்? தம்பி தங்கச்சிகூட முத வகுப்புலயே நின்னாச்சு. கால் வலி. நடக்க ஏலல்லேனுட்டு... நா இன்னம் எத்தினி நாளு வருவேன்?'

நடக்கும்போது ஏராளமான நினைவுகளும் கூடவே நடந்தன. மலைப்பாதை இருட்டிக் கொண்டு வந்தது. காட்டுப் பாதை. மரங்கள் - மழைக்காற்றில் பேயாய்த் தலைவிரித்து ஆடின.

ஏற்கெனவே கல்லும் முள்ளுமான [illegible]யில் - காலையிலிருந்து பெய்த மழையால், சேறும் சகதியுமாய்க் கணுக்கால் வரை புதைந்தது. வெளியே இழுத்து இழுத்து, வழுக்கி விழாமல் ஜாக்கிரதையாய் அடுத்த அடி வைப்பதற்குள் வலியின் உச்சம். உடம்பு வலி, வயிற்று நோவு, கால் வலி, தொடை உராய்வு எல்லாவற்றையும் ரெண்டு மாசமாய்ப் பல்லைக் கடித்துப் பொறுத்துக்கொள்கிறாள் பவுனு. மழைக்காலத்தில் தான் இத்தனைப் பிரச்சினையும் பேயாட்டம் போடுகிறது. வெயில்

காலம் வந்துவிடும். அப்போது இந்தப் பிரச்னையெல்லாம் இல்லாமல் போய்விடும்... நம்பிக்கை நெசவுகள் பவுனுக்குள்...

'சின்னாத்தா...'

''என்னட்டி கொழையடிக்கறே?''

''சீலை ஏதாச்சும் தாயேன். ராவுல நல்ல மழையா? நேத்து அலசிப் போட்டும் முழுசுமாக் காயல்ல. கெழக்கால சூரியன் வந்தாச்சு. இப்பமே கௌம்பினாத்தான் ஒம்பது மணிக்குள்ளாற பள்ளியோடம் போவச் சரியாயிருக்கும்'

'போடு தொடப்பக் கட்டையால. பொட்டை நாயி. சீலை கேக்குதியே சீலை... ஒந்துணிக்கு வீணாக்கவா சீலைய வச்சிருக்கேன்? காஞ்சப்பறம் எடுத்து வச்சுக்க. அவசரமாய்ப் பள்ளியோடம் போயி என்னத்தை வாரிக்கொட்டப்போற? ம்?''

'கால் பரிச்சை சின்னாத்தா... அடுத்த வாரம் கொடியேத்தம். நா பேசணும்...வாத்தியாருக்குப் பேசிக் காட்டணும்...'

'அடத் தட்டுவாணி. அடுப்புக்கு வச்சிருந்த சீமெண்ணய சிம்னில ஊத்திப் படிக்கணும்னு பசப்புற. கும்பிக்குக் கஞ்சி இல்ல. ஒனக்கு மாசத்துணி கேக்குதா? வூட்டோட கெட. துணி இல்ல. சோறாக்கு. பொட்டச்சிக்கு அதான் சாசுவதம்...'

காலையில் தாக்கூச் சென்று கத்தின சின்னாத்தா, கூலிக்குக் கிளம்பினதும் தேடிப் பார்த்தாள் பவுனு. ராத்திரி மழையில் நனைந்த குடிசையில் நனையாத பொருளேதுமில்லை. உடம்பில் போட்டிருந்ததைத்தவிர, கையகலத் துணிகூட வீட்டில் இல்லை.

பரீட்சைக்குக் கிளம்பும் அவசரம். வேசான ஈரத்துணியை - வேலிக் கொடியிலிருந்து உருவி மடித்து வைத்துக் கிளம்பி விட்டிருந்தாள். சரியாய்க் காயாததால் - அப்போதிருந்தே நாற்றம். பொசபொசவென்ற அரிப்பு. தாள முடியாத எரிச்சல். குடைந்தெடுத்துவிட்டது.

இந்தமாதிரிச்சமயத்தில் - ஆற்றில் இறங்கிநனைய முடியாதென்பதால் காட்டுப்பக்கமாய்ச் சுற்றுப்பாதையில் ரெண்டு மைல் ஜாஸ்தியாகக் காலையில் நடந்து - கால்வலிவேறு. ஆனாலும் திடீரென்று அடித்த மழையில் பாதி வழியிலேயே தொப்பலாய் நனைந்து விட்டாள் பவுனு. பள்ளிக்கூடத்தில், கால் மடக்கித் தரையில் உட்கார முடியவில்லை. உட்கார்ந்தாலும் அசிங்கமாகி விடும். எல்லாமே ஈரமாயிற்றே.

ஜன்னல் கம்பியைப் பிடித்துக் கணக்கு நோட்டை அவசரமாய்ப் புரட்டினாள் பவுனு. எந்நேரமும் வாத்தியார் வந்துவிடலாம். கணக்கில்

நாற்றுக்கு நாறு வாங்க வேண்டும். 'என்னட்டி? நின்னுக்கிட்டே தவம் பண்ணுதியா? உக்காரேன்.'

'இருக்கட்டும் பச்சையம்மா. இதான் சவுகர்யம்...'

'என்னமோ பச்சை வாடை வருதில்லா? கண்றாவி நாத்தம்..'

- பையன்களிடமிருந்து தள்ளியே நின்றும்கூட வகுப்பே மோப்பம் பிடித்தது. அவமானத்தில் சுருண்டாள் பவுனு. உள்ளுக்குள் இருக்கும் அரிப்புக்குச் சொறியக்கூட முடியவில்லை. மறைப்பான கழிப்பறை மாணவிகளுக்கு இல்லாதகால் - சிறுநீர் சேர்ந்து சேர்ந்து அடிவயிறு கனத்தது.

அத்தனைக் கஷ்டப்பட்டும் என்ன பிரயோஜனம்?

வாத்தியார் வரவில்லை. மழைக்குப் பயந்திருப்பார். பாவம். அவரும்தான் என்ன பண்ணுவார்? பட்டணத்து மனுஷன். அத்துவானக் காட்டுப் பள்ளியில் ஒட்ட முடியுமா என்ன? ஒருநாளைப் போல் தினமும் மலையடிவாரலாட்ஜ் அறையிலிருந்து பத்து மைல் கரடுமுரடு சேற்றுக் குழம்புச் சாலையில் சைக்கிள் மிதிப்பதென்றால் சும்மாவா? பலநாள் வரும்போதே - பங்க்சராயிருக்கும் சைக்கிளை உருட்டிக் கடுகடுவென்றே வருவார். இன்றைக்கு ஆளே வரக் காணோம்.

மழையில் உடனே கிளம்ப முடியாததால் - பவுனும் பச்சையம்மாவும் வகுப்பறையிலேயே இருந்தார்கள். உரலில் ஒன்னு ரெண்டாய் இடித்துக் கல்லுப்பு தூவிக் கொண்டு வந்திருந்த புளியங்காய்களை நறபுறவென்று கடித்துத் தின்றார்கள். மதியத்துக்கு மழைநீர் ரெண்டு வாய் பிடித்துக் குடித்தாள் பவுனு.

'பெண்கள் கல்வி; அரசாங்கத் திட்டம்' பேச்சை மனப்பாடம் செய்து பேசிக் காட்டினாள்.... அடுத்த வாரம் கொடியேற்ற வருபவர் பாராட்டினால் - ரோடு போடச் சொல்லிக் கேட்கலாமே என்று நம்பிக்கை மிச்சமிருந்தது இன்னமும்.

மூணரைக்குத்தான் கிளம்ப வசதியாய் மழை நின்றது. கிளம்பின நேரத்திலிருந்துதான் பவுனுக்கு இந்தப்பாடு.

''ஏய் பவுனு... பச்சைப் புள்ளையாட்டமா நடைபழகறியா? நடந்த எடத்திலயே நடக்கறே?''

முன்னால் போன பச்சையம்மா, காற்றைக் கிழித்துக் கூவினாள்.

ம்ஹூஉம். முடியவில்லை. இதுநாள்வரை சந்தோஷமாய் நடந்த அதே பாதைதான். வழியெல்லாம் பாட்டும், கிண்டலுமாய், சிரிப்பாணியாய் நடந்த அதே பாதைதான். வழியிலேயே முள்விறகு பொறுக்கிக் கொள்ளும் பாதைதான். கோவைப்பழம் பறித்துத் தின்னும்

பாதைதான். வள்ளிக்கிழங்கு தோண்டி ஊற்று நீரில் கழுவிக் கடித்துத் தின்னும் பாதைதான். விடுகதை, பழமொழி என்று சின்னப் பிள்ளைகள் சிரிப்புக்கு வழியா இல்லை நடக்கும் பாதையில்? புத்தகப் பையைத் தலையில் கட்டி - ஆற்றை நீந்திக் கடக்கப் பந்தயம் போடுவார்கள். நிமிஷமாய்ப் பாவாடை காய்ந்து விடும். கஷ்டமேயில்லாத பிள்ளைப்பருவம் அது. பெரியவளானப்புறம்தானே பிரச்னை. அந்த நாள்களில் நீந்த முடியாத பிரச்னை. சுற்றுப்பாதையில் காலையிலும் மாலையிலும் நடக்க முடியாத பிரச்னை. படிக்க ஆசைப்பட்டதால் - முளைக்கும் பிரச்னை. படிப்பே பிரச்னை.

''வெரசா வா பச்சை... இருட்டினாப்புல- எஸ்டேட்டு பாதைல காட்டு மிருகம் வந்துடும்...''

அண்ணன்காரன் கோபித்துக் கூவியதில் பாய்ந்து சைக்கிளில் ஏறி நகர்ந்தாள் பச்சையம்மா.

சரசரவென்று கண்முன்னே இருள் கவிழ்ந்தது. தூறல் பலத்து மழையாய்க் கொட்டத் தொடங்கியது. நிலவும் பயந்துபோய் ஒளிந்து கொண்டது.

அத்துவான மலைப்பாதையில் தனியாய் அகப்பட்டுக்கொண்டாள் பவுனு. கண்ணைச் சிமிட்டி இருட்டுக்குப் பழகினாள்.

இருபதடி தொலைவில் ஆறு - வெள்ளமாய்ச் சுழித்தோடியது. எப்படி நீந்த? சுற்றுப்பாதையில் எப்படி நடக்க? காலில் பலமே இல்லையே. அப்படியே ரெண்டு காலையும் கழற்றித்தனியே வைத்து விடலாம் போல உயிர்போனது வலி. உராய்ந்த தொடைகளை எவ்வளவுதான் அகட்டி நடக்க?

நெருப்புக் கங்காய் எரிந்தது.

ஆடுசதை வீங்கியிருந்தது.

இடுப்பு உளைந்தது.

சேற்றிலும் தண்ணீரிலும் ஊறிப் பித்த வெடிப்பில் பிளந்திருந்தது பாதம்.

ம்ஹூம்.

ஓரடி கூட எடுத்துவைக்க முடியாமல் நொய்ந்தாள். குழைந்தாள். வயிற்றைப் பிடித்து மடங்கினாள். முட்டி ரெண்டும் தனியே உருண்டு விழுவது மாதிரி லொட லொடத்தது. நாற்றத்தின் அருவருப்பில் மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன.

இத்தனை நேரம் அடக்கி வைத்திருந்த அரிப்புக்கும் எரிச்சலுக்குமாய்ச் சேர்த்துப் பரபரவென்று சொறிந்ததில் ரெண்டு பக்கமும் வழண்டு தீயாய்க் காந்தியது.

உள்ளும் புறமும் முழுசுமாய் நனைந்ததில் - கால் வழியே மழைத்தண்ணீர் சிவப்பாய் வழிந்தோடியது. வீடு போய் இதை அலசிப் போட்டாலும் - மாற்றுத் துணி ஏதுமில்லை. காய்ந்த துணி கிடைத்தாலும் கூட, நாளைக்கும் இத்தனை மைல்தூரம், மலை ஏறிக் காட்டுப் பாதை சுற்றி நடந்து பள்ளிக்கு வர முடியுமா? பன்னிரண்டு மைல் வீடு திரும்ப - நடக்க முடியுமா?

உடம்பில் ஒரு சின்னத் துளிகூடச் சக்தியில்லை. எதிர்நீச்சல் போடத் தெம்பில்லை. சுற்றுப் பாதையில் நடக்கவும் திராணியில்லை.

'ப்ளக்' என்று சேற்றுக் குழியில் கால் மாட்டிக்கொள்ள, சேற்றோடு சேறாய்ப் புதைந்து விழுந்தாள் பவுனு. புத்தகப்பை மழைநீரில் அடித்துப் புரண்டோடியது. கூடவே- பெண் கல்வி பற்றி எழுதி வைத்த நீளமான தாளும்..... அதைப் பிடிக்க நீட்டின பவுனுவின் கையில் சிக்காமல் தண்ணீரில் வழுக்கியது தாளும், அவளின் கனவுகளும்.....

●

# கற்பெனப்படுவது...

"ஏய்... இந்தா... எழுந்திரு..."

- அவனின் கையிலிருந்த அசுர பலத்தின் வியாபிப்பு சரகவின் உயிர் உள்மூலம் வரைக்கும் உலுக்கியது. மந்திரம் போட்டது மாதிரி கண் திறங்கியது. கருவிழிக்குள் நெசவு செய்த தூக்கம் அரை குறையாய் அறுத்தது.

அரக்கப் பரக்க அலங்கமலங்க எழுந்தாள் சரக.

"கொஞ்சம் டீ போடு. நாவல் முடிச்சாகணும். போட்டி - நாளைக்குக் கடைசி நாள். கோந்து போட்டு ஒட்டின மாதிரி கண்ணு இறங்குது."

டீ?

மணி என்ன? ராத்திரி ஒன்றரையா? இந்த அகாலத்திலா?

பன்னிரெண்டுக்குத்தான் அவளைப்படுக்கவே அனுமதித்திருந்தான் - 'இது இருந்தாத்தான் எழுத வரும்...' என்று.

அடுப்புப் பற்ற வைத்தாள். வெளியே மழைச்சத்தம் குறைந்த பாடில்லை.

இப்போதெல்லாம் வேலை-ஜாஸ்தியாய் உளுக்கெடுத்துவிடுகிறது. கும்பல் கும்பலாய் நண்பர் வட்டம். பத்திரிகை பத்திரிகையாய்ப் படித்ததை ஊர்ஜிதம் செய்ய, இவர்களின் தாம்பத்யத்தை எட்டிப்பார்க்க, மூக்கை நுழைக்க, இவளை-அருகில் நோட்டம் விட, இவளை - ரெண்டெட்டில் நேருக்கு நேராகப் பார்க்கும் ஆசையில், அப்படி என்ன இருக்கிறது இவளிடம் என்று பார்வைச் சோதனை பண்ணும் சில்மிஷத்தில் வரும் கும்பல். பேசிப் பேசியே துகிலுரியும் கும்பல். வார்த்தையாலேயே இடுப்புச் சேலையை உருவும் கும்பல். அவனைப் பீடத்தில் ஏற்றி வைக்கவும், கிரீடம் சூட்டிக் குதூகலிக்கவும், தியாகத்தை நினைவுபடுத்திச் சிம்மாசனத்தில் உட்கார்த்தி வைக்கவுமாய் வரும் கும்பல். அவனை மெல்லும் கும்பல். அவளை மெல்லும் கும்பல்.

"ஏய்..."

''.........''

''நினைச்சுப்பாரு. இந்த நேரத்துல நடந்துருக்குமா?''

''.........''

உதட்டை அழுத்திக் கடித்தாள். உதடு வலிக்கவில்லை. மனசுதான் வலித்தது. டமடமவென்று இருபது வினாடி தொடர்ச்சியாய் இடி இடித்தது. கண்ணாடி ஜன்னலை ஊடுருவி மின்னலின் படையெப்பு கண்ணைப் பறித்தது.

பிரிஜ்ஜைத் திறந்தாள். குளிர்ச்சியாயிருந்த பாலை விட அவனின் கேள்வி நரம்பைச் சுண்டி வெட்டியிழுத்தது. இறுகிப் போயிருந்தது. இறுக்கியது. உறைந்திருந்தது. உறைய வைத்தது.

''அவ்வளவா வசதியாயிருக்காது இடம். இல்லையா? போலீஸ் ஸ்டேஷன் ரூமெல்லாம் இதுக்குத் தோதாவா கட்டி வச்சிருக்கானுவ? ஏதோ அரைகுறையா அந்த நேரத்து வெறிக்குத் தீனியா, கன்னா, பின்னான்னு முடிச்சிருப்பானுவ. சரியா?''

''.........''

கத்தரிக்கோலால் வெட்டினாள். கெட்டியாயிருந்த பாலைக் 'கௌக்' கென்று பாத்திரத்தில் சரித்தாள்.

''மறந்துட்டியா?''

''.........''

''நினைவுபடுத்திப் பாரு. மறக்கக் கூடிய விஷயமா இது?''

ம்... ம்... மறக்க முடியாத விஷயம்தான். மறக்க நினைத்த அந்த ராத்திரி இப்போதெல்லாம் இவனால் தினமும் நினைவூட்டப்படுகிறது. அவனின் சாக்கடை மூடியைத் தினசரி திறக்கிறான். அவளை மூழ்க வைக்கிறான். அடியில் தங்கியிருக்கும் கசடு, கழிவு, மலம், கண்றாவியெல்லாம் கையில் அள்ளுகிறான். அவளிடம் கசடு இல்லை. கழுவிச் சுத்தப்படுத்தியாயிற்று என்றால் கூட நம்பிக்கை இல்லை. தன்னிடம் தங்கியிருப்பது மாதிரியே அவளிடமும் இருக்கும் என்று நினைக்கிறான். நம்புகிறான்.

''சொல்லு... சொல்லு...''

என்ன சொல்ல? மாரி வெகுளி. உத்தமன். பொய் சொல்லத் தெரியாதவன். ஏமாற்றத் தெரியாதவன். முதலாளி-சரகுவை அனுப்பச் சொன்னதற்கு மறுத்து, ஒருவனுக்கு ஒருத்தி என்று தத்துவ வியாக்கியானம் பேசியதால் வந்த வினைதான் சகலமும். பணம் பேசியது. ஏதோ ஒரு 'குற்றச்சாட்டு பதிவு செய்தார்கள். தரதர வென்று

இழுத்துப் போனார்கள். அவளைத் தேடி இவள் போனாள். நேரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய்த் தள்ளி விட்டாள். மதியம் வந்தது. சாயங்காலமும் வந்தது. மாரி தான் வரவில்லை.

'இப்ப வந்துருவான். கையோட அழைச்கட்டுப் போயிடு... என்றார்கள்.

சூரியன் போனது. நிலவு வந்தது. அவனைக் காணோம். திடீரென்று, கண் இருட்டைத் துளைத்துப் பாளம் வெட்டியது பளீர் வெளிச்சம். கண் விழித்தாள். எதிரில் கையும் காலும், வாயும் கட்டப்பட்டு மாரி. உடம்பெல்லாம் ரத்த விளாறு. நிற்க முடியாத தடுமாற்றம். கண்கள் பேசின.

''ஐயோ... ஏன் வந்தே? போ? போயிரு புள்ள...''

கண்கள் பரிதவித்தன.

''வாய்யா போயிறலாம். ஐயாமாரே... கட்டு அவுத்துவுடுங்க. ராவானாலும் பரவால்ல. போயிறலாம். வாய்யா...'' பரபரத்து எழுந்தாள் சரசு.

''ம்... ம்... அவுக்கத்தான் போறம்...' ஐந்து பேரும் பல் இளித்தார்கள். பார்த்துக் கொண்டிருந்த மாரியின் கண்கள் துடிதுடித்தன. தெறித்தன. துவண்டன. பதறின. கதறின. கலங்கின. மயங்கின. எரிந்தன. தவித்தன. நிலைத்தன. வாய்க் கட்டை மீறிக் கத்த முடியாமல் காட்சியின் கோரத்தில் கண்கள் பிதுங்கி வெடித்தன. மாரி நொறுங்கிப் போனான்.

கிழிந்து போய் வந்தாள் சரசு.

தற்கொலை என்று அவன் கேஸ் மூடப்பட்டது.

காற்று போய்ச் சேதிசொல்ல-பத்திரிகைகளில் தீப்பொறி பறந்தது. மாதர் சங்கங்கள்-ஊர்வலம், போராட்டம், மறியல், மனிதச் சங்கிலி என்று சகலமுமாய் வரிந்து கட்டின.

முதலில் மோப்பம் பிடித்து எழுதி நெருப்பைப்பற்ற வைத்தவன் இவன்தான். முகமெல்லாம் அனுதாபப்பார்வை. சரசுவை நோகடிக்காமல் விஷயத்தைக் கறக்க வேண்டுமென்ற பூரண ஜாக்கிரதை உணர்வு. வார்த்தைகளில் மென்மையைப் பூசி, வருத்தத்தைத் தடவினான்.

'பெரிய ஸ்கூப் நியூஸ் இது. தொழில்ல எனக்கொரு கிரீடம்' பறந்துபறந்து பரிதவித்தது பத்திரிகையாளன் புத்தி. செய்தித்தாளுக்கும், போலீஸுக்கும், நீதிமன்றத்துக்கும் நடந்த யுத்தம், முடிய முழுசாய் ஒரு வருஷமானது. போலீஸுக்கு வேலை போயிற்று. கிராமத்துக் காற்றில்

கேலிப்பேச்சும், கிண்டல் பார்வையும் நெய்யப்பட்டன. சரசு நடந்த பாதையெல்லாம் கூட இளக்காரத்தின் தடம்.

'இனிமே என்ன? வரவா? பழக்கம்தானே?' என்றார்கள்.

'ஒரு நாளுக்கு - இல்ல... இல்ல... ஒரு ராத்திரிக்கு அஞ்சு பேர்னாக்கூட நல்ல சம்பாத்தியம் தான்...' என்றார்கள்.

இந்த ஜாடைப் பேச்சிலிருந்து தப்பிக்கத் துடித்த போதுதான் - பாராட்டு விழாவில் சமூக சேவகி அம்மா போட்டு உடைத்தாள். அவனுக்கு விருதும், சந்தனமாலையும், பொன்னாடையும் பரிசும் கொடுத்து வேண்டுகோளையும் பூங்கொத்தில் செருகினாள்.

'நவகாளியாத்திரையில் சீரழிக்கப்பட்ட அத்தனை பெண்களுக்கும் மறுவாழ்வு தரச்சொன்னார் காந்தியடிகள். இன்றும் அதே வேண்டுகோள். பத்திரிகையில் வெளிச்சமிட்டுக் காட்டியதோடு கடமை முடிவதில்லை. விஷயத்தைச் சட்டத்தின் பார்வைக்குக் கொண்டு போய் நீதி கிடைக்கச் செய்ததோடு கடமை முடியவில்லை. அனாதையாகி, சமூகத்தால் அவமானப்படுத்தப்படும் இவளுக்குத் துணையாகி, மறுவாழ்வும் தர வேண்டும்...'

பலத்த கைத்தட்டலை வாங்கிக் கொண்டு, மூசுமூசென்று நாற்காலியில் போய் உட்கார்ந்தாள் சமூகசேவகி.

'நல்ல ஆள். லட்சிய மனுஷன். தெய்வமே உனக்கு வழிகாட்டிருக்கு. பண்ணிக்க. உன் பிரச்சினை புரிஞ்சவரு. உன் மேல எந்தத் தப்பும் இல்லேன்னு தெரிஞ்சவரு...

'நீங்கதான் தம்பி தெய்வம். ரோல் மாடல். லட்சியப் பத்திரிகைக்காரர். இளைஞர்கள் இப்படித்தான் இருக்கணும்...'

-வார்த்தை கிரீடம் சூட்டி வேப்பிலை அடித்ததில் பாராட்டு மேடையே கல்யாண மேடையானது. நிர்ப்பந்தச் சூழலால் நிமிஷ உந்தலில் தலையசைத்தான். லட்சியப்பத்திரிகையாளர் என்ற உணர்வு கேலிக்குள்ளாகுமோ என்ற நிர்ப்பந்தம். அதனால் வந்த பந்தம். பாதுகாப்பும், கௌரவமும் தேடின கல்யாணம் இன்று சிரிப்பாய்ச் சிரிக்கிறது.

''இந்தப் பத்திரிகைல விலாவாரியா நம்ம மேட்டர் கவர் பண்ணிருக்கான். பார்த்தியா?''

தலையசைத்து மறுத்தாள்.

''மத்தியானம் கேட்டியே? இதையே பேசணுமா? பேட்டி குடுக்கணுமா? இன்னமும் வெட்ட வெளிச்ச மாக்கணுமா? அது இதுன்னு?''

''..........''

''நீவேற... கொலைக்குத்தம், ஊழல்னு ஏதாச்சும் பண்ணியாவது பேப்பர்ல போட்டோ வராதான்னு கும்பலா அலையறானுக போக்கத் தக்கப் பசங்க. நா-நிஜமாவே நல்லது பண்ணிருக்கேன். எவன் பண்ணுவான் இந்தக் காலத்துலல்லாம்? கைபடாத கன்னிதான் வேணும்னு கண்டிஷன் போடறானுக. என்னோடது பெரிய தியாகமாச்சே... இன்னம் பாக்கி இருக்கற பத்திரிகை, டி.வில்லாம்கூட வரச் சொல்லிருக்கேன். நடந்ததைப் பதிவு பண்ணிடணும். இந்த நாவல்கூட அதுக்குத்தான். என் தியாகம் நிரந்தரமாயிடும்...'' கனவில் மிதந்தான் அவன்.

''ஏய்... கேக்கறியா? நினைவுபடுத்திப் பார்க்கறியா? நினைச்சுப் பாரு. அதே வார்த்தைகள் வேணும். அதே எக்ஸ்பிரஷன் வேணும். பெஸ்ட் ரிப்போர்ட்டர்னு பரிசு வாங்கின மாதிரி-இந்த நாவலுக்கும் பரிசு வாங்கணும்...''

முகத்துக்கு நேராய்ப் புகைவிட்டான். மூச்சடைத்தது அவளுக்கு. மழைக்குளிர்ச்சியை மீறிய தகிப்பு. இடியும், மழையும், மின்னலும் அவனுக்குப் போட்டியாய் ஊரைத் துவம்சம் பண்ணிக் கொண்டிருந்தது.

''என்ன யோசிக்கறே? முந்தி சொன்ன சேதியெல்லாம் போதாதான்னு நினைக்கறியா? அப்ப-நிருபர் நான். மேட்டர் ஆப் ஃபாக்ட் மாதிரி விஷயத்தை, சம்பவத்தை மட்டும்-நேர்மையா எழுதறது பத்திரிகைக்கு முக்கியம். நாவலுக்கு வார்த்தைகள் முக்கியம். கற்பனைல நானே எழுதிடலாம். ஆனா, சம்பந்தப்பட்ட நீயே சொன்னா நல்லாயிருக்கும். சின்னச் சின்ன நுணுக்கம், சேதி, விபரம், ஒரிஜினல் டயலாக்கோட எழுதினா-நாவல் வலிமையா வரும். புரியுதா?''

அருவருப்பாயிருந்தது அவளுக்கு. மனசுக்குள் முட்டின அந்த அஞ்சு முகங்களை விடவும்-இவனின் முகம்தான் மிருகத்தனமாயிருந்தது.

''ம்.., ம்... சொல்லு. எப்படி-வலிச்சுது சொல்லு. அத்தனை பேரும் வெறியிலே என்ன சொன்னானுக- என்ன உளறினாங்க? வார்த்தை வார்த்தையாச் சொல்லு. நீ என்ன சொல்லி அழுதே? எப்படித் தடுத்தே? தடுத்தியா- என்ஜாய் பண்ணினயா? ம்?'' அவனின் பல்லிளிப்பு அசிங்கமாயிருந்தது.

''சரி. சீக்கிரமா டீ எடுத்துட்டு வந்து சொல்லு. எப்படி நடந்துச்சு. ஒவ்வொருத்தனா ஷிப்டு மாதிரியா? இடை வெளிவிட்டா? நாய்ப்பாய்ச்சல் மாதிரி ஒரே நேரத்துல பாய்ஞ்சானுவளா? ம்? உம் புருஷன்-ஓ... சாரி... உன் முத புருஷன் எப்ப உயிரை விட்டான்?

எல்லாரும் பண்ணதைப் பார்த்தப்புறமா? முதல்லியேவா? க்ளைமாக்ஸ் எழுதணும். ரொம்ப ஸ்ட்ராங்கா வந்து விழணும். வார்த்தைகள். புரியுதா? இந்த நாவலாலே எனக்கு இன்னொரு கிரீடம் கிடைக்கணும்.''

அவனின் ஒவ்வொரு வார்த்தையும்-சரசுவின் காதுகளில் தீக்கங்கைச் செருகியது. அந்த இரவில் கொந்தளித்ததை விடவும், இந்த ராத்திரியில் அதிகக் கொந்தளிப்பு, உடல் வலியை விட வார்த்தை வலி அளலாய்த் தகித்தது. இவனின் குரூரச் சிந்தனை ஆக்கிரமிப்பை விடவும் அவர்களின் பௌதீக ஆக்கிரமிப்பு சாதாரணம்தான். பாலும், டீத்தூளும் தரதர வெனக் கொதித்தன. கட்டின பொண்டாட்டிக்குக் கஷ்டம். தன்னால் ஒன்றுமே பண்ண முடியவில்லை என்றதும் சகிக்க முடியாமல் உயிர்விட்ட மாரி எங்கே? தினமும் அதையே பிரகடனப்படுத்துகின்ற இவன் எங்கே?

ஜன்னல் வழியே பார்த்தாள் சரசு, இருட்டு. ஆழமான மையிருட்டு. மழை மட்டும் சீராக... பலமாக...

''எவ்ளோ நேரம் யோசிப்ப? அதுக்குள்ள மறந்துட்டியா?ம்?''

ஹால் கதவு திறந்து வராந்தா கதவையும் திறந்தாள்.

''ஏய்... திறக்காத. மழை உள்ளாற அடிக்குது பாரு. இருட்டுல எங்க போற? பழைய ஞாபகமா?''

ச்சே... எந்த மழையும் கழுவிவிட முடியாத அழுக்குமலை.

இருட்டாயிருந்தால் பரவாயில்லை. இன்னுமொரு தரம் இழக்க இதென்ன கையா? காலா? கண்ணா? அரூபம். மனசைத் தவிர வேறெங்கும் இருப்பதாய்ப் புள்ளி குத்த முடியாதது. இவளை விடவும் அதிகமாய் இவன் போல ஆண்கள் இழந்திருக்கிறார்கள்-வார்த்தையில். மனசில். செயலில்.

மழை நீர் கரைத்துவிட-கற்பு களிமண் உருண்டையா?

கொதித்துக் கொண்டிருந்த டீ வாசனை துரத்தியது.

ம்ஹூம். தாங்காது. கடைசிச் சுவாசம் வரை-இவனின் சாக்கடை நாற்றம் தாங்காது. மாரியின் விதவையாய் இருப்பது சுகம். சௌகர்யம். தினம் தினம் வார்த்தையால் வக்கிரமாய்த் துகிலுரியப்படுவதை விடப் பழைய அவமானம்-பேரானந்தம்.

படியிறங்கிச் சாலையில் கால் வைத்தாள்.

டீ வாசனை துரத்தியது. கூடவே டீத்தூள் வழிந்து நெருப்பு அணைந்து கசியும் காஸ்வாசனை.

மழை நீரில்-சரசுவின் நெற்றிக் குங்குமம் கரைந்தோடியது. ●

# கவிதையைத் தின்று பசியாறி...

அந்தக் கடிதம் ஒரு வாரமாய் அவனின் பையில் உட்கார்ந்திருந்தது. பாறாங்கல்லின் கனத்தோடு. ரொம்பவே யோசித்தலுக்கு அப்புறம்தான், 'சம்மதமா?' என்கிற கட்டத்தில், 'சரி' என்று எழுதினான். ஒரே நாள் கருத்தரங்குதான். வேளாவேளைக்கு டீயும், காபியும், மதிய உணவும் உண்டு. மாலை சிற்றுண்டி தரப்படும். போக்குவரத்துப் பயணப்படியும் உண்டு என்பதெல்லாம் கூடுதல் கவர்ச்சிக்காகச் சேர்த்த வாசகங்கள் மாதிரி இருந்தன. விளக்குப் பொறி வைத்துப் பூச்சி பிடிக்கும் சாமர்த்தியம் தொனித்தது.

படித்ததும் சரசு கூட இதைத்தான் குறிப்பிட்டுச் சொன்னாள். 'ஒரு நாளாவது நல்லாச் சாப்பிடு ஜீவா...'என்று. அத்தனை வலித்தது பசி. தனியாளாய் இருந்தபோதுகூடக் கவிதையும் நாயர் கடை டீ, பன்னுமாய் நாளைத் தள்ளிவிடலாம் என்ற நம்பிக்கை இருந்தது.

கவிதையில் கிறங்கி, கவிஞனை நேசித்துச் 'சகலமும் நீயும் உன் கவிதையும் தான்' என்று வேரடி மண்ணை உதறிவிட்டு, சரசு இணைந்தபோதும் கூடப் 'பசிக்கிறது' என்று வாய் திறந்து சொல்லவில்லைதான். ஆனாலும் கவிதையைச் சுவாசிப்பவனுக்குப் பசிமுகத்தை அடையாளம் காண முடியாதா என்ன? சரசுவின் கண்ணில் மின்னலடித்த வயிற்றுப் பசி அவனைக் கிள்ளியது. காது பஞ்சடைத்தது. தலை சுற்றியது.

இவனை மாதிரி இல்லையென்றாலும் மூனு வேளைச் சோறு ஒழுங்காய்ச் சாப்பிட்ட குடும்பம் அவளுடையது. 'உன் கவிதையே போதும்' என்று பிரேமை வசனம் பேசினாலும் வயிற்றுக்குக் கவிதை போதுமானதாக இல்லையே. கவளச் சோறு கேட்கிறதே...

முழு நேர எழுத்து என்பது தலைக்குக் கிரீடம் இல்லை. முள்கிரீடம். பசியும், பட்டினியும் ரெண்டு கண். பேனா பிடிக்கக்கூட முடியாத மாதிரி கை வெடவெடக்கும். நடுங்கும். வயிற்றில் அக்னி எரியும் போது வார்த்தைகளை வசப்படுத்த முடியாமல் பொகங்குகிறது. கண்ணில் பூச்சி பறக்கும் போது கற்பனை நொண்டியடிக்கிறது.

பெண்ணாயிருந்தால் எழுத்தைத் தொழிலாக்கலாம். புருஷன்காரன் 'சம்பாதித்துப் போட - ''இந்த வாரம் கதை வந்துச்சு. அடுத்த வாரம் நாவல் வருது. அவங்க அனுப்பற சுண்டைக்காய் பணத்தை வச்சு நாக்கு வளிக்கவா முடியும்?'' இப்படிப் பந்தாவாய்ச் சொல்லி நகரலாம். அப்படி அலட்சியமாய் நகர முடியாத மாதிரி சரசுவையும் தோளில் சுமக்க வேண்டியிருக்கிறது. ஊர்விட்டு ஊர் வந்தபோது, பண்ட பாத்திரம், துணிமணி, நகைநட்டு, கையிருப்பு சகலமும்- மனசில் சுமந்து வந்த நம்பிக்கை மட்டும்தான்.

இருபது ரூபாய் வாடகை ஒண்டுக்குடித்தனத்தில் ஒண்டினார்கள்.

''கால் ஊனிடலாம் சரசு.''

''ம்... நிச்சயமா ஜீவா.''

''கையில சத்தியமான எழுத்து இருக்கு...''

கால் ஊன்றி நிலைக்கச் சத்தியமான எழுத்து மட்டும் போதாதென்று மெதுவாய்த்தான் புரிந்தது.

கவிதைக்கு 75-ம், 100-ம் வந்தால்தான் சோறு. பல சமயங்களில் பத்திரிகைகள், 'உன் எழுத்தைப் பிரசுரிப்பதே உனக்குச் செய்யும் கைங்கர்யம்' என்பது மாதிரியான முதலாளித்துவ மனோபாவத்தில் இருந்ததால் அந்தப் பணமும் வராது. பிரதியும் வராது.

'சினிமாக்குப் பாட்டெழுதினா, ஒரே ராத்திரில கண்ணதாசனா ஆயிடலாம்...' உசுப்பேற்றிய கனவுகளோடு இசையமைப்பாளர்களின் ராட்சஸ இரும்புக் கதவுகளைத் தட்டுகிறான். விடியல் வரும் என்ற நம்பிக்கையில் கவிதை நோட்டுகள் கனமாகிக் கொண்டிருக்கின்றன.

போதாதென்று பத்திரிகை அலுவலகப் படிகளையும் ஏறி இறங்குகிறான்.

''அவங்க பீரோவிலே எவ்வளவு ட்ரெஸ் இருக்குன்னு ஒரு மேட்டர் எழுதிட்டு வாங்க. புடவை எத்தனை? சுரிதார் எத்தனை? டி ஷர்ட், ஜீன்ஸ் எத்தனை? பிரா எத்தனை? ஜட்டி எத்தனை? ரொம்பப் புடிச்ச டிரஸ் எதுன்னு சகல விவரமும் எழுதுங்க. போட்டோ ரொம்ப முக்கியம்.''

- என்று புகைப்படக்காரரையும் அனுப்பி, நாலைந்து நடிகைகளின் உடைகள் பற்றி எழுதச் சொன்னபோது, வெந்துபோய், மூச்சடைத்து ராஜிநாமாக் கடிதத்தைத் தந்தான்.

இந்தக் கருத்தரங்குக்குப் போகத்தான் வேண்டுமென்ற கட்டாயத்தில்தான் வந்திருக்கிறான். சரசு கேட்டிருந்தாள்.

'பயணப்படி உண்டாமே ஜீவா?''

''ம்.... அப்படித்தானே போட்டிருக்கு....''

''அம்பது ரூபாயாச்சும் தருவாங்களா?''

''இருக்கலாம்.''

''கவிதைப் புத்தகம்வேணும். பாரதியாரோடது. ஊர்லயே விட்டுட்டு வந்துட்டேன். தினமும் படிக்காம மனசு வெறுமையா இருக்கு ஜீவா.''

தேவையைச் சொல்லியிருந்தாள். மனிகை கேட்காமல் கவிதைப் புத்தகம் கேட்கும் ஜீவன்.

வந்தவர்களை - ஒரு ரிஜிஸ்டரில் பெயர் - முகவரி எழுதிப் பதிவு செய்யச் சொன்னார்கள். ஒரு தோல்பையையும் கத்தை கத்தையாய்க் கருத்தரங்கு பற்றிய முன்குறிப்புத் தாளையும் கொடுத்தார்கள். உள்ளே போனான். மூணு நட்சத்திர ஹோட்டலின் கருத்தரங்கு அறை. ஏஸி குளுமை. அழகழகான அலங்காரச் சர விளக்குகள். அமைப்பாளர்களின் வழக்கமான பரபரப்பு.

''தமிழ் இலக்கிய ஜாம்பவான்களை ஒரே குடையின் கீழ் கொண்டு வந்திருக்கிறோம். 'கிராமப்புறப் பெண்களுக்கான வாழ்க்கையின் விழிப்புணர்வு - இலக்கியம் மூலமாக' என்கிற கருத்தே இன்றைய விவாதப் பொருள்....''

இந்த ரீதியில் துவங்கினது அறிமுகப் படலம். மேடையில் ஆறு படைப்பாளிகள். ஒவ்வொருத்தரும் அதீத இறுக்கமாய், சர்வ நிச்சயமான அரூபக் கொம்பு முளைத்த ரீதியில். ஒருவரையொருவர் படித்ததற்கான, வாசித்தலுக்கான சலனமேயில்லை. மற்றவரெல்லாம் மண்ணுருண்டைகள் என்கிற நினைப்பு. நானே சர்வ வல்லமையுள்ள படைப்பாளி. சகலமும் அறிந்தவன். பீடத்துக்கு உரியவன். அர்ச்சனைக்கு உரியவன் என்பதான தோரணை. 'மத்தவனெல்லாம் எழுதவா செய்கிறான்கள்? குப்பை' என்கிற தீர்மானமான நினைப்பும்.

இடம் தேடி அமர்ந்தான். பொதுவாக இது மாதிரியான கருத்தரங்கத்தைத் தவிர்த்து விடுவான் அவன். பேசு மொழி - கேட்பவர்களின் புரிதலுக்கும் ஆர்வத்துக்கும் அப்பாற்பட்டதாகத் தோன்றும். மைக் பிடிப்பவர்கள் லத்தீனும் கிரேக்கமும் பேசுவதாய்ப் பிரமை ஏற்படுத்துவார்கள். அவர்களின் படைப்புகளில் இல்லாத புரியாத தன்மை. காதுகளை நிறைக்கும் வார்த்தைப் பிரயோகங்கள். 'நான் உசத்தி, நீ தாழ்த்தி' 'என் அறிவைப் பார்த்தாயா?' 'என் சிந்தனையின் வீச்சைப்பார்த்தாயா?' என்றெல்லாம் பிரகடனப்

படுத்துவதாய்த் தோன்றும். இது மாதிரியான வார்த்தைகளுக்கெனத் தனி அகராதி ஏதாவது இருக்கிறதோ என்றும் தோன்றும்.

படைப்பாளிகள் எல்லோருமே பைஜாமா, குர்தா, ஜிப்பா, ஜீன்ஸில் வந்திருந்தார்கள். எழுத்தாளன் என்பதற்கு முக்கிய அடையாளமோ அது? ஜிப்பா போட்டால் எழுத வந்துவிடுமோ? புரியாமல் வேடிக்கை பார்த்தான் ஜீவா. பாதி வளர்ந்த, வளரும், வளர நினைக்கும் படைப்பாளிகள் ரொம்பவே ஆர்வமாய் இருந்தார்கள் எழுத்தளார்களின் பேச்சைக் கேட்க. அது மாதிரி உச்சாணிக் கொம்பில் தாங்களும் ஏறவேண்டும் என்கிற தாகமும் அவர்கள் கண்ணில்.

முதல் எழுத்தாளர் பேசும் முன்பு - டீயும் பிஸ்கட்டும் விநியோகிக்கப்பட்டது. வாயின் ருசி மொட்டுகள் அத்தனையும் நிமிஷமாய் உசுப்பேற, மெதுவாய் உறிஞ்சினான். டீயா? இது டீயா? இப்படிக்கூட ருசியாய் இருக்குமா? திக்கான பாலும் பொன்னிற டிக்காஷனுமாய்க் கமகமத்தது. சீனி சேர்த்த வென்னீர்தானே நாயர் கடையில் டீ என்று பெயர் பெறும்? சரசு இது மாதிரி குடித்திருப்பாளா? அவளுக்கும் ஒரு முறை நல்ல டீ வாங்கித் தர வேண்டும். ஏதாவது கவிதைக்கான சன்மானத்தோடு இந்த ஹோட்டலுக்கு சரசுவை அழைத்து வந்து டீ மட்டுமாவது வாங்கித் தர வேண்டும்....

உரைகள் ஆரம்பித்தன.

எழுத்துக்களில் தெரியும் மனிதநேயம், பணிவு, மென்மை இதெல்லாம் தவிர்த்த பேச்சு. பாறாங்கல் இறுக்கம். என் எழுத்தே இலக்கியத்தின் உயிர்மூச்சு. என்னால்தான் தமிழ்த்தாய் உயிர்த்தெழுந்தாள். என்னோடு தமிழ் இலக்கியத்தின் முகவரி முற்றுப்பெறும். உச்சக்கட்ட இறுமாப்பின் வெளிப்படையான பேச்சு. என் எழுத்துதான் சமுதாயத்தையே புரட்டிப் போட்டது. புரட்சியை விதைத்துப் போட்டது என்றெல்லாம் வார்த்தைகள் புனிதம் இழந்து நாற்றமெடுத்து வழிந்தோடி அறையின் நீள அகலத்தை நிறைத்ததாக உணர்ந்தான். உதட்டிலிருந்து ஜனிக்கும் முன்பே நரகலைச் சுமந்தன. ஆணவத்தைச் சுமந்தன. அரிப்பை, எரிச்சலை, குற்றச்சாட்டைச் சுமந்தன.

சாயங்காலம் வரைக்கும் எப்படித் தள்ளுவது? மலைத்துப் போய் மனசு ஒட்டாமல் உட்கார்ந்தவன், கையிலிருந்த தாளில் கவிதை எழுதி முடித்தான். முகமூடி அவதாரம்....

உணவு இடைவேளை.

அப்போதாவது எல்லாரும் சகஜமாவார்கள் என நினைத்த கணிப்பு பொய்த்துப் போனது. தலைமைக் கவிஞரிடம் போனான்.

''வணக்கம் ஐயா...''

கண்ணாலோ, கை கூப்பியோ வணங்கினால் மரியாதைக் குறைவு என்பதாய் அவர், காது கொடுத்துக் கேட்காத மாதிரி, தட்டை நிரப்புவதிலேயே கவனமாயிருந்தார்.

''நீங்கதான் எனக்குத் துரோணர் மாதிரி. உங்க கவிதை எல்லாத்தையும் கரைச்சுக் குடிச்சிருக்கேன்...''

''......''

''நானும் எழுதறேன். அம்பது அறுவது கவிதை பிரசுரமாயிருக்கு.''

அவனின் ஆர்வத்தை நொறுக்கினார் அவர். உன்னோடு பேசுவது என் வாழ்நாளை வீணடிப்பது என்பதான இறுக்கமாய் நகர்ந்து போய் விட்டார். ஒரே அறைக்குள் தனித்தனித் தீவாய்ச் சாப்பிட்டார்கள். குழுவாய்க் கூடினாலோ, ''அவனுக்கு எப்படி அந்த விருது கிடைச்சுது? ம்? என்னத்தை எளுதிக் கிளிச்சான்? நல்லா சோப்புப் போடுவான் நாயி...'' பூரி சன்னாவோடு எல்லாரையும் மென்றார்கள். சிற்றிதழ் படைப்பாளிகள் வானம் பார்த்த பார்வையோடு நடமாடினார்கள். ஜனரஞ்சக எழுத்தாளர்களை இலக்கிய நச்சுருவிகள் என நினைத்து ஒதுக்கினார்கள்.

சாப்பாடு விதம் விதமாய்ச் சுடச்சுட இருந்தாலும் அவனுக்கு உள்ளே இறங்கவில்லை. சரசுவுக்கும் இதே மாதிரி சாப்பாடு வாங்கித் தர வேண்டும். வெறுமனே ரசமும் துவையலும் நீர்த்த மோரும், நார்த்தங் காயுமாய்ச் சாப்பிட்டு மெலிந்தே போய்விட்டாள். இதுகூட ரெண்டு மூணு நாளுக்கொரு தரம்தான். மிச்ச நேரம் டீ, பிஸ்கட், பன் இதுதானே. ஒருவேளைகூட ஒழுங்காய்ச் சோறிடாத கவிதை என்ன கவிதையோ?

'சோறு இல்லேன்னா கூடப் பரவாயில்லை. தண்ணி, டீ, கஞ்சின்னு எதையாச்சும் சாப்பிட்டுக்கலாம். பட்டினியே கூடக் கிடந்துடலாம் ஜீவா. இது இல்லாமச் சமாளிக்கத் தெரியல்ல. வேற பயன்படுத்தினா பிரச்சினையாயிருது. புண்ணு, அரிப்பு, எரிச்சல்னு தோல் வியாதி வருது. மாசா மாசம் இதே பிரச்சினையால கஷ்டமாயிருக்கு ஜீவா. வாங்கித் தர்றியா? வேஸ்ட்டுன்னு சொல்ல முடியாத வேஸ்ட்டு இது' கண்ணில் லேசான நீரோடு சரசுவின் குரல் காதில் எதிரொலிக்க, சாப்பிட முடியாமல் கைகழுவினான். கவிதை பசி போக்கும். பிரச்சினை தீர்க்கும் என்றால் எல்லா ஏழைகளும் கவிஞனாகி விடலாமே.....

மற்றவர்கள் சாப்பிட்டு ஐஸ்கிரீமோடு உட்கார்ந்திருந்தார்கள். யாருக்கும் யாரும் நட்பாகவில்லை. யாரும் நட்பு கொள்ளும் முகம்

மாதிரியும் தெரியவில்லை. என்னை வணங்கு. என்னை ஆராதனை செய். என்னை வியந்து பார் என்ற பார்வையே அத்தனை பேரிடமும் தெரிந்தது. மூத்தவர்கள், இளையவர்களை எள்ளலாய்ப் பார்த்தார்கள்.

உணவு முடிந்ததும் மறுபடியும் கருத்தரங்கு. அதற்குள்ளாக அத்தனை பேரிடமும் உண்ட களைப்பு தெரிந்தது.

''இதுங்க பேச்சு தலைவலிக்குது.''

''நா போயி தம் அடிச்சுட்டு வர்றேன். நாலு மணிக்கு டீ டைம். அப்ப வந்தாப் போறும். கைல ரூபாயோட கிளம்பிடலாம்.''

நிறைய பேர் மெதுமெதுவாய் நழுவினார்கள். கழன்று கொண்டார்கள்.

காலை மாதிரி அரங்கம் முழுசுமாயில்லை. ஒளிநாடா, ஸ்லைடு என்று போட்டுக் காட்டி நேரத்தைப் போக்கினார்கள். எல்லோர் முகத்திலும் ஓர் ஆயாசம். எப்போதடா கிளம்பலாம் என்ற நிதானமின்மை.

'சரசு என்ன சாப்பிட்டாளோ? நொய் கூட இல்லை? இவங்க தரப்போற பணத்துல பாரதியார் கவிதை வாங்கவா? இல்லேன்னா சரசு ஹெல்த் பிரச்சினைக்கு அதை வாங்கவா? மளிகையா?'

யோசித்தபடியே சரசுவின் படத்தைக் கோட்டுச் சித்திரமாக்கியதில் அழகாய்ச் சிரித்தாள் அவள்.

காலையில் எழுதிய கவிதையை மேடையேறிப் படிக்கலாமா? அமைப்பாளரிடம் சொன்னான். அவர் மேடையில் கேட்பதும், தலைமை தாங்கிய மூத்த கவிஞர் முகம் சுளிப்பதும் தெரிந்தது.

''ஜாம்பவானெல்லாம் பேசற மேடையிலே சுண்டைக்காய்ப் பயலுக பேசறதா? ம்ஹூம். நா இறங்கினப்புறம் பேசச் சொல்லு.''

கர்ஜிப்பது நன்றாகவே கேட்டது. இவன் வருத்தப்படுவானோ என்று தயங்கி அமைப்பாளர் பக்கவாட்டில் மறைந்து கொண்டார்.

பரவாயில்லை. ஏதாவது பத்திரிகைக்கு அனுப்பினால் சன்மானம் கிடைக்கலாம். மளிகை வாங்கலாம்.

''சீக்கிரம் முடிங்கப்பா. வயசான காலத்தில் உக்கார முடியல்ல. மேடை கிடைச்சா போதும். அறுத்துடுவானுக.''

யாரோ குரல் எழுப்ப, மறுபடியும் ஒரு சுற்று டீ, காபி, வறுத்த முந்திரிப் பருப்பு வந்தது. அதைப் பாண்ட் பாக்கெட்டுக்குள் போட்டுக் கொண்டான். சரசுவுக்குத் தரலாம்.

''நான் எழுதியே திருந்தாத சமுதாயம், இந்தக் கூட்டத்தாலா திருந்திடும்? ம்ஹூம். ஏதோ ஒருநாள் ஏஸி ரூம், காபி, டீ, சோறு, ஐஸ்கிரீம், கைல ரூபாய்னு கழிஞ்சுது. அம்புட்டுதான்.''

ஜாம்பவான் கவிஞர் ரூபாய் வாங்கி நகர,

''கிழம் எங்கே போகும் தெரியுமா? நேராப் போயி பாட்டில் வாங்கி ஊத்திக்கும்....''

ஒரு கும்பல் ஆவலாதி பேசியது.

அவ்வளவு நேரம் வெளியே போயிருந்தவர்களும் மூக்கில் வியர்த்த மாதிரி வந்துவிட, அவசரமாய்க் கையெழுத்திட்டு மொடமொட வென்று ரூபாய் நோட்டுகளை வாங்கிக் கொண்டார்கள்.

அவனால் நம்பவே முடியவில்லை. 200 ரூபாயா? ஒரே நாளைக்கா? இருப்பையும், காதுகளையும் தந்தது தவிர, சும்மா உட்கார்ந்து நாளை நகர்த்தியதற்கு இவ்வளவு ரூபாயா? பிரசுரமாகும் கவிதைக்குக்கூட இவ்வளவு கிடைப்பதில்லையே...

நேரே மருந்துக்கடைக்குப் போனான்.

''பேப்பர்ல சுத்தி கேரி பேக்ல போட்டுக் குடுங்க. பஸ்ஸுல எடுத்துப்போகணும்.''

எண்பது ரூபாயை முழுசாய்த் தின்றுவிட்டது அது.

ம்... பரவாயில்லை. சரசுவின் அடிப்படை வசதியைக் கூடத் தரவில்லையென்றால் கவிதை எதற்கு? தாம்பத்யம் எதற்கு?

''கவிதை பிரசுரமாயிருக்கு ஜீவா. இதோ பாரு...''

பூரிப்பாய் நீட்டினாள் சரசு. அடுத்த வரவு. சன்மானம் கிடைக்கும். பல்குத்தவாவது உதவும்.

''எப்படியிருந்துச்சு மீட்டிங்? நீ கவிதை வாசிச்சயா? கவிஞரோட பேசினயா? நட்பா இருந்தாரா? நானும் அவரோட ரசிகைன்னு சொன்னியா? ஒரு தடவை சந்திக்கணும் அவரை.''

கருத்தரங்கப் புத்தகங்களைப் புரட்டியபடிக் கனவுகளைக் கடைவிரித்தாள் அந்தப் பேதைப் பெண்.

''இந்தா சரசு. உனக்காகக் கொண்டு வந்தேன்.''

முந்திரிப் பொட்டலத்தை நீட்டினான்.

''முந்திரிப் பருப்பா? டாக்டரும் இதைத்தான் சொன்னாங்க ஜீவா. காலைல நீ கிளம்பினப்புறம் ஒரே தலைச் சுத்தல். வீட்டுக்காரம்மாதான்

அழைச்சிட்டுப் போனாங்க. சத்தானதா நிறையச் சாப்பிடணுமாம். டாக்டர் அட்வைஸ்.''

''ம்.... எனக்கும் ஆசைத்தான் சரசு. உனக்கு நல்ல சாப்பாடு தரணும்னு.''

''எனக்காக மட்டுமில்லை. நம்ம குட்டி பாரதிக்காக. ஆமா. இது என்ன பொட்டலம்?''

பிரித்தாள்.

''அட.... இது காச முழுங்கிருக்குமே?''

பொட்டலத்தை உள்ளே வைத்தாள்.

''இது வாங்கின வேளை. இன்னொரு பத்து மாசத்துக்கு அப்புறம் தான் இதுக்கு வேலை....''

பக்கத்தில் வந்தாள்.

''ஒரு வேளைச் சோத்துக்கே காசில்லாமப் பரிதவிக்கறோம். இப்பவே இது வேணுமா ஜீவா? நமக்கு வயசு இருக்கு. கால் ஊனி நின்னப்புறம் பார்த்துக்கலாமா? டாக்டர்கிட்ட சொல்லிடவா?''

''ஐயோ சரசு... அதெல்லாம் பண்ணிடாதே.''

படபடத்தான். அப்போதுதான் மனசு சமாதானமானது.

அடுத்த பத்து மாதத்துக்கு இது வாங்கும் செலவு மிச்சமாகும் என்பதாலா? தான் எழுதிய முதல் உயிர்க்கவிதை என்பதாலா?

மெதுவாய் சரசுவை அணைத்து வயிற்றைத் தடவிக் கொடுத்தான்... கவிதை கரு கொடுக்கும். கருவும் கவிதை கொடுக்கும்... மனசில் காப்பியம் ஜனித்தது. ◎

# சரஸ்வதியைக் கரைத்த பனிக்கட்டி...

அவனின் ஏக்கப் பார்வையின் இலக்கு - சரஸ்வதியைப் பின் தொடாவதாகவே இருந்தது. செய்தித் தாளின் புகைப்படத்திலிருந்து அவளைத் துளைத்தான் அவன். எங்கே போனாலும் எந்த இடத்திலும். எந்த நேரத்திலும். எந்த வேலையிலும். விழிக்கும்போதும். குளிக்கும் போதும். கம்ப்யூட்டரில் மூழ்கும்போதும். கோயிலில் கும்பிடும்போதும். மாருதி கியர் மாற்றும்போதும். அலுவலகக் காலை வணக்கத்துக்குத் தலையசைக்கும் போதும் - அவளின் கண்ணுக்குள் நுழைந்து உள்ளிறங்கி ஹிருதயத்தைத் துளைத்துச் சிம்மாசனமிட்டு அமர்ந்து கொண்டது அவனின் பார்வை. விலக்கிப் பார்த்தாள். விலகிப் பார்த்தாள். முடியவில்லை. காந்த ஊசி பிடித்துக் கொண்ட இரும்புத் துகளாய் ஒட்டிக் கொண்டிருந்தது. இப்போதும், இந்த நரக நிமிஷத்திலும் கூட அப்படித்தான்.

தனிமை வீடு. வீட்டின் தனிமை. வார்த்தைகள் பிரயோஜனம் இழந்து பரிதவிக்கும் பாலைவனத் தனிமை. நாலு சுவர்களோடு இறுக்கும் தனிமை. தன் ஒற்றை வயிற்றுக்கெனத் தானே சமைத்தலும், சமைத்ததைத் தன்னந்தனியாய் மொக்மொக்மொக்கென்று முழுங்குதலும் தான் நரகம். சப்பாத்தி. பருப்பு உள்ளே இறங்கச் சண்டித்தனம் செய்து தொண்டை அடைக்க - கையை உதறினாள். எழுந்தாள். குளிர்ச்சியான பனிக்கட்டிகளைக் கோப்பையில் சேகரித்தாள். குளிர்பானம் சுகம்.

தொலைக்காட்சியில் சப்தமில்லாத உருவங்கள் ஓடின. நடனமாடின. உருண்டன. புரண்டன. வதக்கின. வேக வைத்தன. ஓவியம் வரைந்தன. மரம் சுற்றின. காதலித்தன. காதலித்ததாய் நடித்தன. ஏதோ ஒரு சேனலில் அவன்? அவனா? அவன்தானா? அட.... ம். அவன்தான். அவனே தான். பத்து வருஷப் பிரிவுக்குப் பின் - காலை செய்தித்தாளின் புகைப்படத்துக்குப் பின் - நெருக்க தரிசனம்.

அவன்தான். மறந்து விடுமா என்ன? அதோ. நெற்றியில் அந்த மச்சம். உதட்டின் கீழ் குழிவான மோவாய். கறுப்பும் வெள்ளையுமாய்த்

தாடி. சப்தம் வைத்தாள். அவனின் குரல். கனத்த குரல். பத்து வருஷமாய்க் கேட்காத குரல். அடிவயிற்றிலிருந்து கிளம்பி, உயிரின் வேரை அசைத்துப் பார்க்கும் கம்பீரக் குரல். காதுகளில் பாகுக் கரைசலாய் வழிந்தது. அவளின் வயிறு குழைந்தது. மயிர்க்கால்கள் சிலிர்த்தன. புல்லரித்தன. ஹ்ருதயம் 'கப்'பென்று நின்று - துடிக்க மறந்து அப்புறம் இயங்கியது.

காமிரா அவனின் சிறு வீட்டைச் சுற்றி வந்தது. பெண் ஜீவிக்காத வீட்டின் அமளிதுமளியை வெளிச்சமிட்டது. வெறுமை. தனிமை. இதுதான் வீட்டின் சுவராகவும், சுண்ணாம்பாகவும், காற்றாகவும், கதவாகவும் இருந்தன. சிதறிக்கிடக்கும் ஆடைகளும், கலைந்திருந்த அடுப்படியும், குவிந்திருந்த புத்தகங்களும், காய்ந்த மலர்ச்சரங்களும், தேதி மறந்த காலண்டரும் - அவனின் நிகழ்காலத்தைப் பதிவு பண்ணின.

''ட்டேய்... நினைவிருக்கிறதாடா என்னை...?''

அவளின் குரல் தொலைக்காட்சித் திரையில் முட்டி, ஏக்கத்தைச் சிதறியது. ஒருவழிச் சலனம். இன்னமும் கூட அவனின் விலக்கப்பட்ட திருமதியாகத்தானே அறியப்படுகிறாள்? அறிமுகங்களிலும் கூட அவனின் பெயராலேயே சட்டெனப் புரியப்படுகிறாள். மின்னலெனப் பிறரின் முகத்தில் ஒரு வெளிச்சமும், உதட்டில் பிதுங்கும் புன்னகையும் அவனுக்கான அவளின் பழைய உறவில் - இன்னமும் மிச்சமிருக்கும் துளிகளின் சாயலாய்த்தானே அறியப்படுகிறது?

''சரசு... இது அவர்தானே? மெலிஞ்சிருக்காரு போட்டோல?''

''அவருக்குத்தானே அவார்ட்?''

இந்த ரீதியில் - அதே ஜாடை மொழிதான் - இந்த நிமிஷ முடிவுவரை தொடர்கிறது.

''வார்த்தைகளைக் கையாளத் தெரிந்த எனக்கு - உறவைக் கையாளத் தெரியவில்லை. கதைமாந்தர்களைச் சிருஷ்டிக்கிறேன். ஏற்கெனவே சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் சகஜீவனோடு அனுசரித்துப் போகத் தெரியவில்லை. இளமைத் திமிர். சூடான ரத்தம். விலகினேன். அவளையும் விலக்கினேன்.''

- ஊருக்கெல்லாம் - அவனின் வலியைக் காற்று சுமந்து போனது. அவனுக்கும் வயதில் பத்து கூடி, காதோர நரையின் அடர்த்தி ஜாஸ்தி ஆகியிருந்ததில் வார்த்தை வெப்பம் தணிந்திருந்தது. அனல் காடாய் இருந்தவன் - பூக்காடாய்க் குளிர்ந்த பேச்சுத் தொனி. மூங்கிலாய் இருந்தவனா? இவனா? முறிந்ததும் அதனால்தானோ? அவனின்

வார்த்தைகள் எரிமலையின் எடுபிடியாய் இருந்தது மறந்து போனாயா? ஊழிக்காற்றின் வேகத்தில் - உன் தன்மானத்தைப் பதம் பார்த்தது மறந்து போனாயா? ஈகோவின் உரசலில், வார்த்தைகள் ஊழித்தீயாய்ப் பரவி - வாழ்க்கையை எரித்தது மறந்து போனாயா? ப்ச... யாருக்குத்தான் ஈகோ இல்லை? நானும் தானே அக்னி நட்சத்திரமாய்ப் பொசுக்கினேன்? உக்கிரமாய்த் தகித்தேன்? இரண்டு பக்கத் தாக்குதலால்தானே சுக்கு நூறானது உறவு?

தொலைபேசி ஒலித்தது. அவனோடு பின்னத் துவங்கியிருந்த அரூப இழையை அறுத்து - தொலைபேசிக்குப் பதிலுரைக்க விருப்பமில்லை சரஸ்வதிக்கு. மணி அடித்து ஓய, தொலைக்காட்சிப் பெட்டியிலிருந்த அவனையே கண்சிமிட்டாமல் பார்த்தாள் அவள்.

''அது இளமைத் திமிரில் செய்த தவறு. அதனால் ஏற்பட்ட வெற்றிடத்தை இட்டு நிரப்ப - யாரையுமே நான் அனுமதிக்கவில்லை. அந்த வலி. அந்த வெறுமை. எனக்கு நானே சுமக்கிற சிலுவை. இந்தத் தழும்பு வேண்டும் எனக்கு...''

- வலியை வார்த்தையில் ஏற்றி, லஜ்ஜையில்லாமல் வெளிச்சமிட்டுக் காட்டினான் அவன், நான் வேறு. நீ வேறு. பிரபஞ்சத்தின் பிரிந்த புள்ளிகள். ஒட்டுறவு, பந்தம் ஏதுமில்லாத மூணாம் மனுஷன். மனுஷி. நீ யாரோ. நான் யாரோ. வெட்டிமுறித்துப் பிய்த்துக் கிளப்பினதில், தோல் வழண்டு, குருதி கொட்டிப் பச்சை மண் ஆறாமல் வலித்துக் கருகித் தழும்பாகி - எனக்கும்தானே வலிக்கிறது. நானும் அந்தத் தழும்போடுதானே ஜீவிக்கிறேன். பனிக்கட்டியைத் துழாவினாள் சரஸ்வதி.

இளமை வீர்யம் தந்த வெறி. புரிதலை விடவும் பிரிதலேவெற்றி என்று உக்கிரம் பேசியது. நீ இல்லாமல் நான் ஜெயிப்பேன் என்று வீம்பு பிடித்தது. ஜெயித்து நின்றாயிற்று. உட்காரலாமே என ஏக்கம் வருகையில்தான், உட்கார ஒரடி இடமும் இல்லை என்கிற நிஜம் உறைக்கிறது. யதார்த்தம் சுடுகிறது. வெறுமை, தனிமை, மூலை முடுக்கெல்லாம் படரும் வெம்மை. மடியமர்த்தி ஆசுவாசப்படுத்தி சொஸ்தப்படுத்த ஆளேயில்லாத அனாதை ஜீவனம் மனசை அரிக்கிறது. உச்சத்துக்குப் போனபின்தானே மேலேயும் வெற்றிடம்தான் என்பது புரிகிறது. ஆகர்ஷண சக்தி கீழிறக்கி - அவனின் மடியில் விழ வைக்காதா என ஏக்கம் துளைக்கிறது.

அவளைப் பின்னிய நினைவு இழையை அறுத்தெடுக்கும் நோக்கத்துடன் அலறிய தொலைபேசியால் - சரஸ்வதியின் உள்

ஸ்திரத்தைத் தொட முடியவில்லை. பனிக்கட்டியை வாயில் போட்டுக் குதப்பி உறைந்தாள் சரஸ்வதி.

வெற்றிடத்தில் ஜீவிக்கலாம் தான். ஆனால் தனிமை நரகம். உடல் தனிமை. மனசுத் தனிமை. ஹலோ சொல்லும், கை குலுக்கும், புன்னகைக்கும், நட்பு பாராட்டும் எல்லாராலும் மனசின் மர்மப் பிரதேசத்துக்குள் நுழைந்துவிட முடியுமா என்ன? நுழையத்தான் விடுவேனா? தனித்தவள் என்று தெரிந்ததும் இழையும், குழையும், நெளியும் நாய்கள் தானே அதிகம்? மசிந்துவிட மாட்டாளா? என்கிற எதிர்பார்ப்பு சுமந்த பார்வைதானே சுற்றிச் சுற்றி வருகிறது? ஒரே பார்வையில் படுக்கையில் தள்ளப் பார்க்கும் பார்வைகள். பனியாய் உருகி விடுவாள் என்று ஸ்திரத்தைக் குறிவைக்கும் அர்ஜுனப் பார்வைகள்.

ஒரு கோப்பை தேனீருக்காக - வரவேற்பறை வரை வருபவனுக்கும் கூட நப்பாசை. அடுத்திருக்கும் படுக்கையறைக்குக் கண்ஜாடையில் அழைத்துவிட மாட்டாளா என்று. தனிமைப் பறவை என்றால் எல்லாருமே கையில் வலையோடு வந்து நிற்கிறான்கள். பறவைக்குச் சிறகும் மனசும் இருப்பதை மறந்து போய். கழிசடை ஜென்மங்கள். இன்னமும் இந்த வீட்டுக்காற்று - ஆம்பளை வாசனை இல்லாத சுத்தமான அல்லிக் காற்றுதானே? தொலைக்காட்சிப் பெட்டிக்குள் மறுபடியும் நுழைந்து கொண்டாள் சரஸ்வதி.

''இன்னுமொரு பௌதிக, ரசாயன, மனோதத்துவ, தர்க்கப் பரிசோதனைக்கு நான் தயாராக இல்லை. சோதனைக்கூடமாகவே வாழ்க்கையை நகர்த்துவது நரக வேதனை. வேதியியல் பரிசோதனையை விடவும் வண்ணாத்திப் பூச்சி துரத்துதல் சுகானுபவம், கண்ணாடிக் குடுவையை விடவும் பளிங்கு நீர் பார்த்தல் சுகம். புதிதாய் இட்டு நிரப்பி, மறுபடியும் விலகும் வலியை விடவும் - பழக்கமான வெற்றிட வலி தாங்கக் கூடியதுதான்...''

தூரத்து வெற்றிடம் பார்த்துப் பேசினான் அவன். அந்தப் புன்னகை - வலியால் விளைந்ததாய்த்தான் தெரிந்தது. சந்தோஷக்கீற்றின் சாயல் இல்லாமல், வேதனையின் நிறத்தோடு இருந்தது.

நடிக்கிறானா? இதுவும் நடிப்பா? காமிராக் கண்ணுக்குக் காட்டாமல் முகத்திரை போட்டிருக்கிறானா? மனசில் முளைத்தவை அநாகரிகக் கேள்விகள் என்று வெட்டினாள் சரஸ்வதி. இருக்க முடியாது என்று நேர்மை கொப்பளிக்கும் அவன் பார்வை சொல்கிறதே. கண்ணில் தெறிக்கும் வலி நிஜம் பேசுகிறதே. உடைந்து நெகிழும் குரல்கூடச் சொல்கிறதே...

''டேய்... உன்னைப் பற்றிச் சொல்கிறாயா? என்னைப் பற்றியா? என் வலியை உன் வார்த்தையில் சுமக்கிறாயே. என்னைப் பிரிய எப்படியடா மனசு வந்தது உனக்கு? ராஸ்கல். லவபிள் ராஸ்கல்...''

ஒரு பனிக்கட்டியை விட்டெறிந்தாள் சரஸ்வதி. அது பட்டுத் தொலைக்காட்சிப் பெட்டி மீதிருந்த பூங்கொத்து கீழே சரிந்தது. என்ன செய்ய? புதுமைப் பெண் என்று கிரீடம் சூட்டிய தோழிமாரெல்லாம் தூவென்று துப்புவார்களோ? துப்பட்டுமே. இதோ இந்த முள்வினாடியில் நாலு சுவருக்குள் ஜீவ சமாதியாயிருக்கும் நிலையில் நான் தேடும் நிஜ ஸ்நேகத்தை யாராலும் தரமுடியவில்லையே...

தேடலின் உந்துதலில் தொலைக்காட்சி அருகில் போனாள் சரஸ்வதி. அவர்களின் உதட்டுக் குசல வார்த்தைகள் நுழைய முடியாத நெருக்க வேலிக்குள் - உன் பார்வை. உன் வார்த்தை இதோ நுழைகிறதே. அவர்களின் கரிசன வார்த்தைகள் வருட முடியாத குருதிப் புண்ணை உன் குரல் வருடுகிறதே. உன் புன்னகை உயிர்ப்பிக்கிறதே... மடிந்து உட்கார்ந்து திரையில் கண் சிமிட்டின அவனின் முகத்தை வருடினாள். அந்தக் கண்ணை, மூக்கை, வாயை, மீசையை, தொண்டையை, தோளை மென்மையாக வருடினாள் சரஸ்வதி.

அவள் அவனைத் தேடுவது - மனசுக்கா? உடம்புக்கா? சரி உடம்புக்கேயானாலும் என்ன தப்பு?

தண்ணென்று தகிக்கும் மார்பும், பிருஷ்டமும், குழையும் வயிறும், தளதளக்கும் தொடையும், சூடாகும் உள்ளங்காலும், அவன் ஸ்நேகித்தவைதானே? அவனின் வருடல் தவிரக் காற்றுக்கூடப் பட்டிருக்காதவைதானே?

''இது - போருக்கான பருவம் இல்லை. போர் நிறுத்தப் பருவம். சமாதானம் யாசிக்கும் பருவம். இது - தோல்வியா? சரணடைதலா? பின்வாங்குதலா? ம்ஹூம். எதுவுமில்லை. யுத்தப் பிரகடனத்தை விடவும் சமாதானப் பிரகடனம்தான் கடினம். வலு தேவைப்படுவது. மனோதைர்யம் தேவைப்படுவது. எழுத்தாளன் என்பதை விட மனிதன் என்ற பதத்துக்கு என்னைத் தகுதியாக்கும் தருணம். மன்னிப்பு தந்து, மன்னிப்பு வாங்கி, மனிதனாகப் பிரகடனப்படுத்தும் தருணம். கடைசிவரை - பாறை மனசோடு இருக்க விருப்பமில்லை. கனிய விரும்புகிறேன்...''

ஒப்புதல் வாக்குமூலம் சொன்னான் அவன்.

சரிதானே. செத்தால் அள்ளிப்போடக்கூட ஆளில்லாமல், அனாதைப் பிணமாய் அழுகி, நாறி, புழுத்து விச்சமடிக்கத்தான் வேண்டுமா?

அவனின் மார்பில் சரிந்து, முகத்தில் இழைந்து, வயிற்றில் குழைந்து, கண்ணை மலர்த்தினால் - சாவுகூடப் பூப்பல்லக்கில் வருமே.

''இந்த விருதுகூட அவளுக்குத்தான் சமர்ப்பணம். அவளின் பிரிவு தந்த வலி. பிண வாழ்க்கையின் வேதனை. இதுதான் இந்த நாவல். இந்த விருதை - உடனிருந்து சந்தோஷிக்க யாருமில்லாத வெறுமையின் கைதி நான். வெற்றிடத்தின் வாரிசு நான். தனிமையின் தத்துப்பிள்ளை நான்...''

காமிரா - அவனோடு நடந்தது. பூச்செடி அருகே தயங்கியது. ஊஞ்சலில் ஆடி நின்றது. உடைந்ததும், நெகிழ்ந்ததும் அவனின் குரல்தானா? வெண்கலமாய் ஒலிக்கும் குரலா - ஊதுபத்திப் புகையாய்க் குழைந்துவிட்டது? ஈகோ கழன்ற நிஜமுகம் இது. முகமூடியில்லாத சுயம் இது. ஒற்றைப் பனை மர வாழ்க்கையின் நரக ஸ்வாசத்தைப் பிரதிபலித்தது அவனின் நெகிழ்ந்த குரல். மூங்கில் குழைந்து நாணலாகியிருப்பது - என்னிலும் தானே நிகழ்ந்திருக்கிறது? சரஸ்வதிக்குள் பரபரப்பு - ஆக்டோபஸ்ஸாய்க் கிளை விரித்தது.

அவனின் கண்ணீரைத் துடைக்க வேண்டும். உதட்டால் ஒற்றியெடுக்க வேண்டும். சோகத்தை உறிஞ்சித் துப்புரவாக்க வேண்டும். மார்புள் புதைந்து மூச்சடைக்கச் சுகம் தர வேண்டும். கையும் காலும் பரபரத்தது.

இவ்வளவு வெட்கம் கெட்டவளா நீ? அலைகிறாயே... அவமானங்களையெல்லாம் துடைத்துப் போட்டு இணைய இவ்வளவு அவசரமா? மறந்துவிட்டாயா? அந்த கோர்ட் விவகாரம்? விவாதம்? பிரதிவாதம்? வார்த்தைத் துகிலுரிப்பு? பத்திரிகைகள் பரபரப்பாய்த் தீனி தின்றனவே? பக்கம் பக்கமாய்க் கதை எழுதினவே? இப்படி நெகிழ்ந்தால் - அதற்கும் கைகொட்டிச் சிரிக்காதோ? கையில் தண்ணென்று சில்லிட்ட பனிக்கட்டி அவளைக் கேட்டது.

ப்ச, சிரிக்கட்டும் போ. அவற்றின் பிழைப்பே இதுதானே? எலும்புக்கு அலையும் நாய்கள். பிரிவும் இணைப்பும் கண்ணீரும் காதலும் சறுக்கலும் தோல்வியும் தானே அவற்றின் தீனி? பாறையிலிருந்தும் கயிறு திரித்து, ஜாலவித்தை செய்தால் தானே - பணப்பெட்டி ரொம்பும். அப்போது தலைப்புச் செய்தியாயிருந்த என்னை - அப்புறம் எந்தச் சுடுகஞ்சி நினைத்தது? யார் கவலைப்பட்டது? பத்திரிகையா? நிருபரா? புகைப்படக்காரரா? நீதிபதியா? யாருமில்லையே. நானும் என் நாலு சுவரும் தானே நிதர்சனம்? கறுப்பு இரவுகளும் கண்ணீர் உறவுகளும் தானே என் வசம்?

சரஸ்வதியின் உள்மனப் பயணத்தின் வேகத்தைச் செங்குத்தாய்த் தடைசெய்தது தொலைபேசி. நாரசாரமாய்க் கூவியது. கத்திக்குத்தாக ஒலித்தது. உள்ளுக்குள் அறுந்து - தனியாய்க் கழன்று - நகர்ந்து வந்தாள் சரஸ்வதி.

''ஹலோ?''

''ம். சரசு... எத்தனை தரம் போன் பண்ணிட்டேன்... வீட்ல இல்லியா? வெளில போயிருந்தியா?''

தொலைபேசிச் சுருளாய்க் கேள்விச் சுருள்.

''ப்ச... என்ன? சொல்லு...''

''பதைபதைப்பாயிருக்கு.''

''.............''

''உன் பதில் வேணும். நல்ல ஹோட்டல். யாருக்கும் தப்பாத் தோணாது. சரின்னு சொல்லு...''

''............''

''ஹோம்லி அட்மாஸ்ஃபியர்னா - உன் வீடு, என் வீடு கூடப் பரவாயில்லை. என் ஒய்ஃப் ஊர்ல இல்ல...''

''............''

''உன் பிறந்தநாள் பரிசுன்னு வச்சுக்கோயேன். எத்தனையோ வருஷமா ஏங்கியிருப்பே. சொர்க்கத்தைக் காட்டறேன். சரின்னு சொல்லு.''

''த்தூ... வைடா போனை...''

ஆபீஸ் நாய். தெருப்பொறுக்கி நாய். எச்சக்கலை நாய். உரிமம் இல்லாததைத் திருட்டுத்தனமாய்த் தின்னப் பார்க்கும் கள்ளச் சந்தோஷத்தை அவனின் குரல் குடிவைத்திருந்தது. கம்ப்யூட்டர் என்ஜினியர் என்றால் என்ன? கழிசடையை மனசிலிருந்து கழுவவா முடியும்? வின்டோஸ், ஜாவா, என்டி, யூனிக்ஸ், ஸோப் என்ன இழவு படிப்பானாலும் என்ன? பாதாளச் சாக்கடை மனிதர்கள். மூடி திறந்தால் கப்பென்று முடை நாற்றம். கம்ப்யூட்டரால் கழுவ முடியாத குரூர நாற்றம்.

முதுகைத் துளைத்த ஜாடைப்பேச்சு, கிண்டல், கிசுகிசுக்கள், ஜாடைமாடை அழைப்புகள், மசியாததால் கிடைத்த உதட்டுச் சுழிப்புகள், குத்தல், குடையல், அநாகரிக விமர்சனங்கள் - இதையெல்லாம் தினசரி சமாளிப்பதுதான் குருக்ஷேத்திரமாயிருக்கிறது. பழைய உறவின் தணல்கூடப் பரவாயில்லை. வாழ்க்கை முழுசுமே

கோல் எடுத்து, நாய் விரட்டலிலேயே கழிக்கவா? இதற்கா ஜீவனம்? என் தேவைக்காக - என்னை விட அதிகமாய்க் கவலைப்படும் ஜீவன்களை வேலிக்குள் வரவிடாமல் துரத்திக் கண்காணிப்பதே தினசரிப் பணியாகிவிடுமா? மனசுக்குள் ஓட்டம், சரஸ்வதிக்கு.

ஊஞ்சலிலிருந்து எழுந்து நின்றான் அவன். தீர்மானமான முதுகு வளையாத நிமிர்ந்த அவனின் உருவம் திரையை வெளிச்சமாக்கியது.

''வெற்றிடத்தைப் பழைய தென்றல் நிரப்ப வந்தால், என் மனசு திறக்கும். இல்லையென்றால் நான் - உருகாத பனிக்கட்டி. உருக்க முடியாத பனிக்கட்டி....''

பழைய இளமை வேகம், ஆதிக்க மனசு எல்லாமே தொலைத்து - நிராயுதபாணியாய்க் காத்திருத்தலை அவனின் வார்த்தைகள் படம்பிடித்தன. நாலு சுவருக்குள் இல்லாமல் - நாலு திசைக்கும் கேட்கும்படிப் பாவமன்னிப்பு.

சிலுவை சுமந்த தோளுக்கு இளைப்பாறுதல் தர வேண்டும். அவனின் மீது கல்லெறிய - நான் மட்டுமென்ன பாவம் செய்யாதவளா? இமைக்காத சரஸ்வதியின் கண்கள் பனித்தன. இருவரின் பனியும் ஒருசேர உருகத் தொடங்கியது.

இரு கை விரித்து - அகலமாய்ப் புன்னகைத்த அவனிடம் காமிரா நெருங்கிக் காட்சி உறைந்தது. அந்தக் கைக்குள் தன்னைக் குறுக்கி, அவனுக்குள் இறுகிவிடத் தவித்தாள் சரஸ்வதி. அவன் கரத்தின் சூடு வேண்டும். சுகம் வேண்டும். கதகதப்பு வேண்டும். பாதுகாப்பு வேண்டும். பரிவு வேண்டும். வேண்டும். வேண்டும். சகலமும் வேண்டும். அவனின் புன்னகைக்குள் உறைந்தே போனாள் சரஸ்வதி. ஆழ்கடல் மனசில் இன்னமும் மிச்சமிருக்கும் பழைய நேசத்தின், பிரியத்தின், தேடலின் துளிகளைப் பரஸ்பரம் அட்சதையாய் விதைத்தது காற்று.

இருவேறு திசைப் பயணிகள் நீங்கள் என்ற கறுப்பு அங்கியின் நெருப்புக்கரங்கள் விலக்கினபின் - இது சாத்தியம் தானா? சரஸ்வதியைக் கேள்வி நசுக்கியது. இருதிசைப் பயணம்கூட ஓரிடத்தில் சந்திக்கும்தானே? கையிலிருந்த பனிக்கட்டியின் ஜில்லிப்பு சரஸ்வதியின் நரம்பைக் கிழித்து, நெஞ்சுப் புள்ளியை நிமிர்த்தியது.

மறுபடியும் தொலைபேசிக் கூவல்.

ப்ச... அந்த அலுவலக நாயா? முகத்தில் காறித்தான் உமிழ்ந்தாக வேண்டும்? செருப்படிதான் பதில். எரிச்சலின் உச்சத்தில் தாமதித்த சரஸ்வதியை இழுத்தது இடைவிடாத கூப்பாடு. எரிதழல் சூட்டை வார்த்தைக்குள் நுழைத்து அனுப்பினாள்.

''யாருடா அது நாயி...?''

''ம்... ம்... உன் செல்ல நாய்தான்...''

''ஹ... ல்... லோ...? யா... ரு...?''

''சரசு... நா... நான்தான்...''

''யாரு?''

''உ... உன் ராஸ்கல், நினைவிருக்கிறதாடா என்னை?''

''நி... நிஜமாவா? நீ... நீதானா லவபிள் ராஸ்கல்?''

''ம்... பிறந்தநாள் வாழ்த்துக்கள்.''

குரல். குரல். அவளுடைய அவனின் குரல். பனிக்கட்டியின் குளிர்ச்சியைத் தலையோடு காலாய்க் கொட்டியது அவனின் குரல். சரஸ்வதியின் கையிலிருந்த கோப்பையில் - பனிக்கட்டி - முழுசும் உருகிப் போனது.

# சந்தோஷம் விற்பவன்...

''என்னாச்சு...?''

''ஒண்ணுமில்லியே...''

''வார்த்தையெல்லாம் மறந்துட்டியோன்னு நினைச்சேன்...''

''.........''

''அருவி மாதிரி கொட்டுவியே... இப்ப என்ன? வறண்டு போச்சா?''

''ம்... வார்த்தையில்ல. மனசு...''

''ப்ச. என்னவோ போ. ஒவ்வொருத்தி என் சாதனைக்கு மேல விழுந்து ஈஷிக்கறா. கொஞ்சறா. குழையறா. வலைக்குள்ள மாட்டிற மாட்டாளான்னு பரிதவிக்கறா. நீ விட்டேத்தியா விலகற...''

இவளும் இருந்தவள்தானே? கண் முழுசும் கனவு. அருவியாய் நேசம். க்ரெடிட் லைனில் ஒளிப்பதிவு என்று அவனின் பெயரைப் பார்த்ததும் குழைவு. டீன் ஏஜ் கவர்ச்சி இல்லை இது என்று புரிந்து கொண்ட பின் நேசமானதால், இறுமாந்திருந்தாள் என்பதும் நிஜம்தான். அந்த நம்பிக்கையில்தான் சம்மட்டி அடி. காதல் - அடையாளம் தெரியாமல் நொறுக்கிப் போகுமளவுக்குக் கோர அடி.

''தொழில் பொறாமையா உனக்கு? ரிப்போர்ட்டிங் நீதான பண்ணினே? உனக்கு அங்கிகாரம் இல்ல. இவனுக்கு விருதா? அப்படிங்கற எரிச்சலோ?''

''யப்பா ஜீவா... என்னைப் பத்தின உன் அழுகல் அபிப்ராயம்லாம் இப்பத்தான் வெளில வருது. நல்ல வேளை. கடவுள் காப்பாத்தினார்...''

-கையெடுத்துக் கும்பிட்டாள். லேசாய்ப் பளபளத்த கண்ணைச் சிமிட்டிக் கண்ணீரை அடக்கினாள்.

மானிட்டரில் காட்சிகள் ஓடிக் கொண்டிருந்தன. மாஸ்டர் காஸெட்டின் சப்தத்தைக் குறைத்திருந்ததில் வெறும் காட்சிகளின் ஓட்டம்.

ஜீவா வருகிறான் என்று எடிட்டிங் அறையிலிருந்தே மோப்பம் பிடித்திருந்தாள் ஜமுனா. அவன் சுவாசித்த காற்றைக் கூட அடையாளம் காட்ட முடியும் அவளால். நினைத்தது மாதிரியே வந்து விட்டான். அரையடி தூரத்தில் நின்றாலும் கூட நெருக்கம் தோன்றவில்லை அவளுக்கு. மனசுக்குள் பனிக் கட்டித்திரை. தானாகவே வந்து விழுந்து விட்ட திரை. அதை உடைக்கவும் கூடக் கொஞ்சமும் பிரயத்தனப்படவில்லை ஜமுனா. அவனின் பக்கம்தான் பரிதவிப்பு. புரியாததால் பரபரப்பு. இன்னின்ன காரணத்தால் தான் திரைகட்டியது என்று விளக்கும் பொறுமையும் அவளிடம் இல்லை.

ஜீவா வந்ததும் எடிட்டர் - நாசூக்காய் எழுந்து போன நிமிஷத்தில் கோழியாய்க் கொத்தின சந்தேகத்தை அவளிடம் விதைத்தான். டோப் ஷீட்டில் குறித்து வைத்திருந்த ஷாட்டினை பிளேயர் காஸெட்டில் தேடினாள். கண்டு பிடித்ததும் ஷாட் ரீடிங் குறித்துக் கொண்டாள். அவளின் மௌனத்தில் தவித்தான் ஜீவா.

''விருது - எனக்கு வந்தா என்ன? உனக்குக் கிடைச்சா என்ன? ரெண்டும் ஒண்ணுதானே? ஏன் பிரிச்சுப் பார்க்கறே?''

-வளவளவென்று பேசாமல் அவன் நிற்குமிடம் - சட்டென்று வெற்றிடமானால் நன்றாயிருக்கும் போலிருந்தது. பேச ஒன்றுமே இல்லாமல் போனதைப் பற்றித் திரும்பத் திரும்ப யோசிக்க என்ன இருக்கிறது?

ப்ளேயர் வால்யூமைக் கூட்டினாள்.

''படிக்கறது எனக்கு ரொம்பப் புடிக்கும். பொஸ்தவம் தூக்கிட்டு இஸ்கோலுக்குப் போவணும். அனு டீச்சர் மாதிரி டீச்சராவணும். ஆனா - அம்மா சாணி தட்டி வறட்டியாக்கச் சொல்லுது. வயக்காட்டு வேலைக்குப் போவச் சொல்லுது. படிச்சா மட்டும் எல்லாம் சரியாயிடுமான்னு கேக்குது...''

- கிராமத்து மண் வாசனையைக் குழைத்துப் பேசினாள் அந்தப் பெண். விகல்பமில்லாத முகமும், முகமூடி போட்டுக் கொள்ளாத வார்த்தைகளும் மானிட்டரைத் தாண்டியும் முகத்தில் அறைந்தன.

''நா அவுட்டோர் போறேன். நாலு மணிக்கு வருவேன். பேசணும் நிறைய...''

''...........''

''வேற ஒண்ணும் பேச முடியாது. அம்மா சொல்லைத் தட்ட முடியுங்களா?''

- கிராமத்துப் பெண் வேதனை சொன்னது.

''சில விஷயங்களைத் தெளிவுபடுத்திக்கறது நல்லது ஜமுனா...''

''..........''

''படிக்கற ஆசை அடுத்த ஜென்மத்துக்குத்தான். தம்பி பொஸ்தவத்தைப் பொரட்டிப் பாத்துக்கலாம். பொட்டைக்குட்டி படிக்க ஆசைப்பட்டா கஷ்டம்தான்னு தெளிவாப் புரியுது எனக்கு...''

''ச்சி... இவ வேற கடுப்படிக்கறா. நிறுத்து இவ புராணத்தை...''

- பளாரென்று ஆல் ஸ்டாப் பட்டனைத் தட்டினான் ஜீவா.

சின்ன எடிட்டிங் அறையில் - தர்ம சங்கடத்தின் வியாபிப்பு. ஜமுனாவின் ஆழ்மன வார்த்தைகளைக் கொக்கி போட்டு இழுக்கப் பார்க்கும் ஜீவாவின் சாதுர்யம். மனசை இறுக்க மூடிக் கொண்ட ஜமுனாவின் பாறைத்தனம். அறையின் நீள அகலச் செவ்வகக் காற்றில் அவளின் விருப்பமின்மை துடித்தது.

''போகலாமா? ப்ரொட்யூசர் கூட வந்தாச்சு ஜீவா...'' - லைட்டிங் அஸிஸ்டண்ட் எட்டிப் பார்த்தாள்.

''ம்... ம்... இதோ வந்துட்டேன். ஜமுனா - நாலு மணி. ரெடியா இரு. ட்ரைவ் இன் போகலாம்...''

''நாலு மணிக்கு ரெடியாத்தான் இருப்பேன். ஆனா உன்னோட வெளில வர்றதுக்கில்ல...''

திரும்பவும் எடிட்டிங் மெஷினை 'ஆன்' செய்தாள்.

''பின்ன...?''

''பத்ரியோட வெளில போறேன்...''

''பத்... பத்ரி? யூமீன் நடு ரோட்டுல பொம்மை விக்கறவனா...?''

''............''

''கோமாளி மாதிரி ரோட்டுல கெடக்கறவன். பஃபூன். லாஃபிங் ஸ்டாக். உன் நட்புக்கும் ஹலோவுக்கும் கூடத் தகுதி இல்லாதவன்...''

''ஆனா - மனசை ரணப்படுத்தி அழ வைக்கற குணம் இல்லாதவன். மனிதாபிமானம் உண்டு அவனுக்கு...''

''ப்பூ... மனிதாபிமானத்தைக் கொண்டு நெருப்புல போடு...''

''கரெக்டாச் சொல்றியே ஜீவா...''

தட்தட்தட்டென்று கைதட்டினாள்.

''எதையுமே நெருப்புல போட்டு எரிய வச்சாத்தான் உனக்குப் புடிக்குமே... காமிராவும் கையுமாப் போயி 'ஷூட்' பண்ணுவ. என்

தைரியத்தைப் பார்த்தியான்னு மார் தட்டுவ. விருது குடுத்தா வாங்கி மார்ல குத்திப்ப. ஷோகேஸ்ல வச்சுப்ப...''

எடிட்டிங் டேபிளில் குனிந்து அழுதாள்.

கோழைக் கண்ணீரில்லை. வேதனைக் கண்ணீர். ரத்தக் கண்ணீர் பொங்கின நேரம் அது. மனசு களைத்துப் போன நேரம் அது. கைகால் துவண்டு போன நேரம் அது. சுவாசித்தலின் வேர்களும் நம்பிக்கையின் விழுதுகளும் பிடிமண் அற்றுச் சரிந்த நேரம் அது. சக ஜீவனைக் கண்முன்னே நெருப்பு வளைத்துச் சட்டமாய்த் தின்ற கொடூரம் அடிவயிறைப் பிசைந்து வதைத்த நேரம் அது. இவன் மட்டும் வெற்றிக் கொக்கரிப்பில்...

இந்த விநாடியில் கூட அவளுக்கு மனசு ஒரு நிலையிலில்லை. அந்தச் சூடு. நெருப்பு. உயிரின் ஆதி அந்தத்தை ஆசையாய்த் தேடிச் சுவைத்த அக்னி. முலைப்பால் தேடும் குழந்தையாய் - உயிரைக் குடித்த ஊழித் தீ. சொடக்குப் போட்ட நேரத்தில் காற்றில் நெருப்பு விதைத்ததும், சுகமாய் வீசின காற்றில் மரண ஓலமும், கூக்குரலும், கத்தலும், கதறலும் குடியேறி சூழலை நரகமாக்கியதும் - மறுபடியும் ஆக்ஷன் ரீப்ளே மாதிரி காதில் கேட்டது.

சூல் கொண்டிருந்த மறியல் போராட்டத்தைப் பற்றின செய்தி சேகரிப்புக்காக நோட்டும் பேனாவுமாய் உட்கார்ந்திருந்தார்கள் செய்தியாளர்கள்.

'இந்த ரீதியில் போனா - அவங்க எல்லாரையும் உள்ளே தள்ளப் புதுசுபுதுசா ஜெயில் கட்டவேண்டியிருக்கும்...''

''ம்... ம்... நல்லவங்க - அரசியல் வேண்டாம்னு ஒதுங்கினா - காட்டாட்சிதான் நடக்கும்...''

''பெஸ்ட் அமங் தி வொர்ஸ்ட்... இந்த சித்தாந்தம்தான் நம்ம அரசியல் முகத்தை நிர்ணயம் பண்ணுது...''

ஆளாளுக்கு கிண்டலடித்த நேரம்.

'இந்த மறியல்லாம் பழக்கமானதுதான...' - போவோர் வருவோரெல்லாம் அசுவாரஸ்யமாக அவரவர் பாடுபார்க்கப் போனார்கள்.

வேகம் குறைந்த வண்டிக்காரர்களிடம் போலீஸ்காரர்கள் அவசரப்படுத்தினார்கள்.

'சீக்கிரம் போயிடுங்க. மறியல்ல என்ன வேணா நடக்கலாம்...'

எந்த உள்ளுணர்வு அப்படிச் சொன்னது? தெரியவில்லை.

'நிஜமான மறியலை விடவும் - இந்த மாதிரியான அகஸ்மாத்தான காட்சிகள்தான் சுவாரஸ்யம். இல்லேன்னா - கோஷம் போடறவங்க காமிராவையே முறைச்சு முறைச்சுப் பார்த்துக் கத்துவானுங்க. என் மூஞ்சி தெரியுதா... நா ஷாட்டில இருக்கேனா?ன்னு திரும்பித் திரும்பிப் பார்ப்பாங்க. செயற்கையா இருக்கும்...'

- ஜமுனா சொன்ன மாதிரி ஜீவா - ஆட்லிப் ஷாட்ஸ் எடுத்துக் கொண்டிருந்தான்.

'பண்ணாதே... பண்ணாதே... அட்டூழியம் பண்ணாதே...'

'கைது செய்தால் கலவரம் வெடிக்கும்...'

இன்ன பிற மனப்பாட வசனங்கள் காற்றைக் கறையாக்கி அசிங்கப்படுத்தின. அரசியல் வசவுகளைக் காது கொடுத்துக் கேட்கத் தனி தைரியம் வேண்டும். அருவருப்பாயிருக்கும் - நடு ரோட்டில் துணி உருவின மாதிரி.

'தலைவர் வர்றாரு... தலைவர் வர்றாரு...'

தொண்டர்கள் படை - தேனீக் கூட்டமாய் அவரிடம் பறந்தது.

போலீஸ்காரர்கள் - கிருஷ்ண பரமாத்மா கை புல்லாங்குழல் மாதிரி - லத்தியோடு வேடிக்கை பார்த்தார்கள். யாரிடமிருந்தோ அரூபமாய் - ஏதோ அனுமதியும், உத்தரவும் கிடைத்த மாதிரி, எல்லோரும் சேர்ந்து கண் சிமிட்டின நிமிஷத்தில், எதிர்பார்க்காத நேரத்தில் வெடித்தது குண்டு. பிரளயம் ஏற்பட்ட ரீதியில் பூமி அதிர்ந்தது. சுற்றுப்புறம் நொறுங்கியது. காற்று உடைந்தது. அந்த பஸ் - கண்முன்னே கொழுந்து விட்டு எரியத் துவங்கியது.

'அடப்பாவிகளா... பப்ளிக் பஸ்ஸைக் கொளுத்தி வீரத்தைக் காட்டற பேமானிங்களா...'

''ஐயோ காப்பாத்துங்க. காப்பாத்துங்க...''

''தெய்வமே... எரியுதே. காப்பாத்துங்க. யாருமில்லியா?''

''நாப்பத்தி ஒண்ணு... நாப்பத்திரெண்டு... உள்ளாற இன்னும் ஸ்டூடன்ட்ஸ் இருக்காங்க... போலீஸ்... உதவுங்க...''

''அம்மா... அம்... ம்...ம்...மா...''

தீயின் நாவுகளும், தீனக் குரல்களுமாய், மனிதர்களின் வலியும் வேதனையும் காற்று சுமந்தது.

கையிலிருந்த பேனாவும் குறிப்பேடும் தூர எறிந்துவிட்டுப் பேருந்திடம் ஓடினாள் ஜமுனா.

''மேடம் போகாதீங்க... விட்டுருங்க. எரியட்டும்...''

''என்னய்யா போலீஸு நீ? வேடிக்கை பார்க்கவா யூனிபார்ம் மாட்டியிருக்கீங்க? பஸ்ஸுல ஸ்டூடண்ட்ஸ்... ஜீவா ஓடிவா. காமிராவை விடு ஜீவா. உசிரு முக்கியம். ஓடியா காப்பாத்து ஜீவா...''

முடிந்தவரை சிலரை வெளியே இழுத்துவிட்டாள் ஜமுனா. கையெல்லாம் தீயின் சுழற்றல். முகத்தில் நெருப்பின் தீற்றல். அவர்களின் கருகின இமை. தலைமுடி...காப்பாற்றப்பட்டதற்குப் பதிலாக உள்ளேயே முழுசுமாய் எரிந்திருக்கலாம் என்பது மாதிரி கோரம்.

ம்ஹூம். முடியவில்லை. எல்லோரையும் காப்பாற்ற முடியவில்லை.

''இன்னம் ஸ்டூடண்ட்ஸ் இருக்காங்க உள்ள...''

''ஐயோ... அம்மா... எரியுதே... எரியுதே... தாங்கலியே... அம்மா... அப்பா... மூச்சடைக்குதே... அம்மா கேக்குதா... எரி...யு...''

அபயக்குரல், அவலக்குரல். உயிர் ஓலம். அவர்களைக் காப்பாற்ற - எந்தக் கிருஷ்ண பரமாத்மாவும் அவதாரம் எடுக்கவில்லை.

''அநியாயம் இது. அட்டூழியம். நாசமாப்போக... மூணு பேரு மாட்டிக்கிட்டாங்க. என்ன பாவம் பண்ணாங்க ஸார்? யாருக்காக யாரு பலி...? மூணு பொண்ணுங்க எரிஞ்சுட்டாங்களே... கடவுளே...''

- பேராசிரியைகள் கண்ணீரைப் பிழிந்தார்கள்.

பிரயோஜனமில்லை.

வானைத் தொடுவது மாதிரி சுழன்ற தீநாக்குகள், உயிர் குடித்த திருப்தியில் அடங்கிப் புகையாய்க் கொப்பளிக்க, காற்று, எரிந்தவர்களின் மரண வாசனை சுமந்து, மனிதத்தின் மரண வாசனையைப் பிரகடனப்படுத்தியது.

மறியலுக்கு வந்த கும்பலைக் காணோம். போலீஸ்காரர்கள் வழக்கம் போல மெதுவாய் நடந்து வந்து சம்பிரதாயக் கேள்விகளை வீசினார்கள். கண் துடைப்பாய்க் கைது நாடகம் அரங்கேறியது.

காற்றுப் போன பொம்மையாய்க் கை கால் தளர்ந்து நடந்தாள் ஜமுனா. மூச்சு எரிந்தது. கண் எரிந்தது. மனசும் எரிந்தது.

நெருப்பின் அருகாமைக்கே எனக்கு இவ்வளவு காந்தல் என்றால் நெருப்புக்குள்ளிருந்த பூக்கள் எப்படித் துடித்திருப்பார்கள்? மொட்டைத் தலைக்கும், முழங்காலுக்கும் முடிச்சுப் போட்டு இளம் தளிர்களை எரித்த அநியாயத்தில் கண்ணீர் பாட்டுக்கு வழிந்தது. பார்வை விறைத்தது. துயரம், துக்கம், வலி, வேதனையின் ஆக்கிரமிப்பு. நொய்ந்து தொய்ந்து குழைந்து வந்தாள். உணர்வுகள்

முழுசும் மரத்துப்போயின... ஜீவா - அப்போதும் காமிராவின் லென்ஸிலிருந்து கண்ணெடுக்கவில்லை. இவளின் உடைந்த நடையை ஃபாலோ போகஸ் செய்து, நெருப்புப் புகை வழிந்த பஸ்ஸின் இரும்புக் கூட்டின் பின்னணியை டீஃபோகஸ் செய்து, அவள் ஷாட்டை நிறுத்தினான்.

''ச்ச்ச்... ஒண்டர்ஃபுல் எக்ஸ்பீரியன்ஸ்.''

புன்னகையும், பூரிப்பும், பெருமிதமும் துணைக்கு அழைத்துக் கை சொடக்கித் துள்ளினான். காமிராவை அழுத்திக் கட்டியணைத்து முத்தமிட்டான். தீயும், திகுதிகுப்பும், புகையும், மூச்சடைப்பும் இன்னமும், நாசியை அறைந்த நிமிஷத்தில் - அந்தச் சுவாதீனமே இல்லாமல் சந்தோஷமாய்ச் சிரித்தான்.

'காமிராவுக்கு நல்ல தீனி. ஸூம் இன் பண்ணிட்டேன். நெருப்பை, பஸ் கம்பியை, உள்ளாற இருந்தவங்களைக்கூட டைட் க்ளோசப்புல புடிச்சிட்டேன். உள்ளே மாட்டிக்கிட்டவங்க கூக்குரல், அந்த அழுகை எல்லாமே காமிரா மைக்குல பதிவாயிடுச்சு. ஜமுனா... ஐ ஹாவ் டன் இட். இந்த க்ளிப்பிங் என் தொழில் வெற்றி. பெரிய சவால். யப்பா... என்னா தீ... என்னா நெருப்பு... அபாரம். அபாரம். ரொம்ப சந்தோஷம் ஜமுனா...''

தனக்குத் தானே கிரீடம் சூட்டிக்கொண்டவனை அருவையாய்ப் பார்த்த ஜமுனாவின் கை கால் வெடவெடத்தது. மார்பு படபடத்தது. இதுநாள் வரைக்கும் கட்டியது வெறும் காற்றுக் கோட்டை. வெறும் மணல் கோட்டை என்பது புரியப் பொலபொலவென உதிர்ந்தன சகலமும்...

''ஜமுனா...''

மூங்கில் மாதிரி மெல்லிதான தோளை மெதுவாய்த் தொட்டான் ஜீவா. காமிராவைத் தொடுவது மாதிரியான பிரேமைக் காதல் தீண்டல் அவனுக்கு. செத்த பல்லியின் தீண்டல் மாதிரி, டி ஷர்ட்டினைத் தாண்டி அருவருப்பூட்டிய அவனின் கையைத் தட்டி விட்டாள்.

''பசிச்ச சிங்கத்தையும், புலியையும் அடிமைகள் மேல ஏவிவிட்டுக் கை தட்டி வேடிக்கை பார்த்த அந்தக் கால ராஜா - உன்னை மாதிரிதான் இருந்திருப்பாங்க...''

''நீ ரொம்ப ஸெண்டிமெண்டலாப் பேசற. தமிழ் சினிமா டயலாக் கேக்கற மாதிரி இருக்கு. சண்டை, போர், வெள்ளம், பூமி அதிர்ச்சி, எரிமலை வெடிப்பு - இந்த அழிவெல்லாம் காமிராமேனுக்கு அதிசயமாக் கிடைக்கற காட்சிகள். எந்தச் சலனமும் இல்லாம நாங்க

படம் புடிக்கணும். மனசு கலங்கக் கூடாது. கண்ணீர் விடவும் கூடாது. எமோஷனலாகறது தொழில் தர்மம் இல்ல...''

- அவள் கோபத்தின் நுனியைக் கண்டு பிடித்துப் பூசி மெழுகினான்.

''நம்ம கையை மீறின இயற்கைச் சவாலைப் படம் புடிக்கறது வேற. இது... இது... அப்படியில்லையே. கைக்கெட்டின தூரத்துல... இருபதடி, முப்பதடி தூரத்துல நடந்துச்சு. ஓடிப்போயி - நா கொஞ்ச பேரை வெளில இழுத்துப் போட்டேனே... அந்தப் பதைபதைப்பு ஏன் உன்கிட்ட இல்ல? வேதனை ஏன் இல்லாமப் போச்சு? தவிப்பு ஏன் இல்லாமப் போச்சு? ஷாட்டை விட, உயிர் முக்கியம்தானே? பத்திரிகையாளனும், காமிரா மேனும் இதயத்தைத் தொலைச்சுடணும்னு விதியா என்ன? தொழில் பக்தி - வேலையோட நியதிதான். ஆனாலும் என்னால ஜீரணிக்க முடியல்லே. நாளைக்கு எனக்கே இது மாதிரி நேர்ந்தாக்கூட - உன் காதலைவிட, காமிரா மேன் புத்திதான் ஜெயிக்கும்னு நினைக்கறேன். நா கருகிச் சாம்பலாகற வரை படம் புடிப்பே. பெஸ்ட் க்ளிப்பிங்குன்னு மெடல் குத்திப்ப...''

- அவனைப் பார்ப்பதுகூடத் தீட்டு மாதிரி பார்வை தவிர்த்து வேதனையில் குமைந்தாள் ஜமுனா.

''உன்னைப் பத்தி, என்னைப் பத்தி, நம்ம வாழ்க்கையப்பத்தி... அடைகாக்கற கனவைக் கலைக்காதே ஜமுனா. யாரோ பொண்ணுங்களுக்காக நாம பிரியணுமா? ரெடியாயிட்ட இன்விடேஷனை என்ன பண்ண?''

- இயலாமையின், ஏமாற்றத்தின் விளிம்பில் நின்று கேட்டது அவன் குரல்.

''உன் வழக்கப்படி நெருப்புல போடு...''

தீக்கங்கு வார்த்தைகள் பிறிட்டுக் கிளம்பின.

''எனக்கு ஈரம் வேணும் ஜீவா. கண்ணுல, மனசுல, சகலத்திலேயும். கண்ணுல விழுந்த மணல் மாதிரி உறவு உறுத்தக்கூடாது. மனுஷங்களோட வேதனையை, பரிதவிப்பைக் காமிரா கண்ணால ரசிக்கறவன் எனக்கு வேண்டாம். காமிராக் கண்ணுக்கு ஈரம் கிடையாது. பாலைவன ஆளோட - வாழ்க்கையைப் பங்கு வைக்க முடியாது. பத்தி - பொம்மை விக்கறவன்தான். ஈகோ காம்ப்ளக்ஸ் எதுவுமே இல்லாம நடுரோட்டுல நின்னு குழந்தைகளுக்குச் சந்தோஷம் விக்கறான். பஃபூனாவே இருக்கட்டும். ஆனா - கண்ணீரை விலை பேசாதவன். இதுதான் வேணும் ஜீவா. இந்த ஈரம்தான் நான் தேடறது. அவனைக்

கல்யாணம் பண்ணிக்கணும்னு அவசியமில்லியே... நட்பாவே தொடர்ந்தாலும் சந்தோஷம்தான். என் வாழ்க்கையிலே உன் காட்சி முடிஞ்சு போச்சு. அசுபமான சுபம்...''

ப்ளேயர் டெக்கினை ஆன் செய்து உயிரூட்டினாள்.

''பொண்ணுங்களை நல்லவிதமாப் படிக்க வைக்கற அரசாங்கம் வாணும். அதுவரைக்கும் நாங்க புருஷனுக்குக் கால் புடிச்சி விடத்தான் செய்யணும். அவங்க அட்டூழியத்துக்கு அடி பணியத்தான் வேணும்...''

- வருத்தமாய்ச் சிரித்தாள் அந்த கிராமத்துப் பெண்.

''கால் புடிக்க நான் தயாராயில்ல... அடிபணியவும் மாட்டேன் பொண்ணே...''

- சொல்லியபடியே ஷாட்டை ஃப்ரீஸ் செய்தாள் ஜமுனா. ◎

# இரவல் முகமும் கடன் வாங்கிச் சுவாசமும்...

"வா மடியில் உக்காரு போட்டு விடறேன்."

"ப்ச..."

ஆசையாய் இழுத்தவனின் கையைத் தட்டிவிட்டாள். அவளின் அனுமதிக்காய்க் காத்திருக்காமல், தலையில், கழுத்தில், மார்பில், இடுப்பில் சகலத்திலும் அவன் விரல்களின் ஆக்டோபஸ் ஆக்ரமிப்பு.

"சந்தோஷமான நாளுன்னு சொன்னேனில்லையா? அப்புறம் ஏன் தள்ளிப் போற?"

மகிழ்ச்சி என்றால் முழுச் சாப்பாடு கேட்பான். உப்பு முதல் ஊறுகாய் வரை இலையில் பரப்பி, நீட்டி விஸ்தாரமாய்ச் சாப்பிடுவது மாதிரி-நீளமான நேரத்துக்கு விஸ்தாரமாய்க் கேட்பான். எதிர்பார்ப்பான். அவளின் பிரேத விறைப்பு புரியாமல், காரியத்தில் இறங்கி, இயங்கி, ஓய்ந்து படுப்பான். அவளுக்கு இதிலும் பெரிய விருப்பம் ஏதுமில்லை. எல்லாமே திகட்டி விட்டது. நூற்றுக்கணக்கில் நகை. புடவை. வாகனங்கள். வசதிகள். கொட்டிக் கிடக்கும் பணம் இவற்றோடு இதுவும்.

அவளின் சந்தோஷத்தின் வெளிப்பாடாக வாங்கியிருந்தான் வைர அட்டிகையும், கங்கணங்களும், புது மோஸ்தர் நகைகளும்.

பணம் அதீதமாயிருந்தால், பரிசுகளின் மடங்கும் விலையும் பெரிதாய்த்தானே ஆகும்? அவை படுக்கையில் மின்னலடித்தன. இது மாதிரி அன்பளிப்புகளும்கூட அவளுக்குள் பெரிதாய் ஏதும் கிளர்ச்சியை உண்டு பண்ணுவதில்லை. நெகிழ்வையும், சந்தோஷத்தையும்கூட. வெறுமனே முறைத்துப் பார்த்தல், வங்கியில் சேர்த்தல் இப்படியாக அசுவாரஸ்யம்.

முகம் மறந்து போச்சே. என் முகம் மறந்து போச்சே. அடையாளமே இல்லாத முகத்துக்கு அட்டிகையா? முகமில்லாத முண்டத்துக்கு நகை அலங்காரமா?

''அட்டிகை புதுமாடல். ஆறு லட்சம். தேசிய விருது சந்தோஷத்துக்கு முன்னாடி இது என்ன ஜூஜூபி...?''

காலையில்தான் செய்தித்தாளும், வானொலியும், தொலைக்காட்சியும் சேதி சொல்லின. அதற்குள்ளாக வீடுமுழுகும் பூங்கொத்துகள். திடீர்ப் பூஞ்சோலை, வீடு கொள்ளாமல். லேசாய்ச் சுவரெல்லாம் நகர்த்தித் தள்ளிச் சந்தோஷத்தின் அரூப ஆக்கிரமிப்பு. வீட்டை நிறைத்த காற்றில் கூடத் துள்ளலின் விழுக்காடு ஜாஸ்தியாகத்தான் இருந்தது. ஊடகங்களுக்கு 'போஸ்' கொடுத்துச் சிரித்து, கட்டை விரல் உயர்த்திக் காலையிலிருந்தே மூச்சுவிட முடியாத சந்தோஷக் களேபரம் அவனுக்கு.

''அந்த ஆள் சொன்னதுக்கெல்லாம் மதிப்பு குடுக்காதே. கூண்டுக்குப் பழகின பறவையால வானத்துல பறக்க முடியாது.''

கிளிப்பிள்ளையாய் ஒப்பித்தான். பயமா? எரிச்சலா? அவமான எதிர்பார்ப்பா? புரியவில்லை.

''பொண்ணுங்க வாழ்க்கை அவ்வளவுதான். தாலி. புருஷன். குடும்பம் இவ்வளவுதான் அவ அடையாளம். புரிஞ்சுக்கோ. அக்கரைப் பச்சையா நினைக்காதே. இந்த விருதுகூட உனக்குத்தான்னு நினைச்சுக்க.''

மூசு மூசென்று இயங்கி, மயக்கத்தில் பேசினான். இவளின் மனசில் வெறுமைப் பள்ளத்தாக்கு. அவளுடைய பங்கு, உழைப்பு இல்லாதது அவனுக்குச் சாதனையா? எல்லா நேரமும் வீட்டில் வளைய வருவதும், அவனுக்குச் சௌகர்யமான நேரத்தில் படுக்கையில் குழைய வருவதும் சாதனையா என்ன? நாய் கூடப் பிழைக்குமே இப்பிழைப்பை.

லேசாய் நகர்ந்து எழுந்தாள். டி.வி.யில் ஒவ்வொரு சானலாய் மாற்றினாள். ராகினி ஏதோ ஒன்றில் பேசினாள்.

''ம்... ம்... சந்தோஷம்தான். சிறந்த நடிகைக்கான தேசிய விருது பலருக்கும் கனவு. எனக்கு அது நனவானது சந்தோஷம்தான்.''

சூரியனும் சந்திரனுமாய் முகத்தில் ஜொலிப்பு.

சோறு கிடைக்காத நேற்றைய பகல்கள். எதிர்கால பயத்தில் உறக்கம் தொலைத்த இரவுகள். சில்லரை கூட இல்லாத நாள்கள். இதெல்லாம் பார்த்த வாழ்க்கையின் வருத்தம் ஏதுமில்லை நந்தினியிடம். பூரிப்புதான் விகசித்தது.

இவளும் நந்தினியுமாய்த்தான் ஒன்றாய், வாய்ப்பு தேடும் நெருப்பில் குதித்தார்கள். தவமிருந்தார்கள். தண்ணீரைக் குடித்துக் காற்றைச் சுவாசித்து ஒற்றை அறையில் ஒடுங்கிப் படிப்படியாய் ஏறி இறங்கிய காலம் ஒன்று இருந்தது.

'ஏஜண்ட் வருவானா? க்ரூப் ஸீன் ஏதாச்கம் கிடைக்குமா? சூப்பர் ஸ்டாரோட ஸீன் கிடைச்சா நல்லாருக்கும். கைல காசு நிக்கும்' கனவு நெசவுகள். அங்கீகாரம் தேடும் தவம்.

க்ரூப்பில் அஞ்சாவது வரிசையில், ஆறாவதோ, ஏழாவதோ ஆளாய் முகமே தெரியாமல்தான் ஆடினார்கள். பாடினார்கள். ஓடினார்கள். நடித்தார்கள். அஞ்சுக்கும் பத்துக்கும் ஆலாய்ப் பறந்து அந்தர் பல்டி அடித்த நாட்கள். ரிஹர்சல், டேக் என்று முதுகெலும்பு முறியும்படி நாள் முழுசும் உழைத்துவிட்டுக் கையில் கிடைக்கும் இருநூறு ரூபாய் சந்தோஷத்தின் விலாசத்தைப் பிரகடனப்படுத்திய நாட்கள். கையில் காசு புரளாவிட்டாலும் கூடப் பரவாயில்லை. வாய்ப்பு கிடைத்தால் போதும் என்கிற தகிப்பு நிறைந்த நாட்கள். சாலையில், கல்யாணக் கும்பலில், இழவு அழுகையில், கிராமத்துப் பஞ்சாயத்தில் இப்படிக் கண்சிமிட்டுவதற்குள் காணாமல் போகும் காட்சியில் தலைக்காட்டினாலும் கூட, உழைப்பு அவளுடையது. வியர்வை அவளுடையது. களைப்பு அவளுடையது. களிப்பும் அவளுடையது.

இந்த விருது சந்தோஷம்தான்.

ஆனாலும் அவனின் மனைவி என்கிற முகமூடிக்காகத் தோளில் ஏறிநின்று கூத்தாடவா? ராவாப் பகலாய் அவள் உழைக்க, வேடிக்கை பார்த்துக் கைதட்டும் நான் வைரம் மாட்டிச் சந்தோஷிக்கவா?

புருஷன், பெண்டாட்டி என்றால் கற்பூரமும், காற்றுமாய்க் கரையத்தான் வேண்டுமா? திரியும், விளக்கும் மாதிரிகூட இருக்கலாமே? ஒன்றுக்கொன்று அத்தியாவசியம். ஆனாலும் தனித்தனி ஜொலிப்பு, தனித்தனி இருப்பு. தனித்தனி அர்த்தம். முகம். அடையாளம். எல்லாமே...

''வாயேன் டி.வி.யை ஆஃப் பண்ணு. அளக்கறா பாரு பத்தினி. தெரியாதா இவ கதை?''

சிகரெட்டை விட நாறின அவனின் வார்த்தைகள். இவளின் இடுப்பு நொறுங்கியது. மனசு முழுக்க காயம். வலி. வேதனை. ரத்தக் கசிவின் ரகசிய கர்ப்பம்.

''நேரத்தை வீணாக்காதே. வா''

''ப்ச. வேணாம். மூச்சடைக்குது''

''உடம்புக் கோளாறா?''

''ம்ஹீம். மனசுலதான்''

இப்போதெல்லாம் வீட்டுக்குள் உட்கார முடிவதில்லைதான். அக்னியின் அரூபத் தகிப்பு. அனலின் சுழிப்பு என் முகத்தைத் தின்றது

மாதிரி பரிதவிப்பு. உயிரோடு சமாதி கட்டிய மாதிரி மூச்சடைப்பு. என் இயக்கம் மட்டும் சுயமாய் இல்லாமல், அரூபச் சங்கிலிப் பிணைப்பில் கை, கால், சுவாசம் எல்லாமே ஸ்தம்பித்து, ஸ்மரணை இல்லாத வெற்று இருப்பு. ஜீவிதம் என்பதும் உயிர்ப்பு என்பதும் தொலைத்த இயக்கம். வேலிகள். நாலு பக்கமும் கல் அடுக்குகள். சுவர். சுவர். சுவர். சுவர். கண்விழிப்பதும், தட்டு நிறையச் சோறு தின்பதும், பட்டுப் புடவையில் மினுக்குவதும், நகை போர்த்தி, உடல் துணை தருவதும் மட்டுமா? இதுவா? இதுவா ஜீவிதம்?

அவனின் விருதுக்குப் பூங்கொத்தும், அடுத்த படத்துக்கு முன்பணமும் தந்த தயாரிப்பாளர் இவளைக் கும்பிட்டார்.

'இன்னொரு சாவித்திரியா, பத்மினியா நீ வருவேன்னு எதிர்பார்த்தோம். உன்கூட நடிக்க ஆரம்பிச்சவளுகள்லாம் விருது வாங்கறா. நீ மட்டும் வீட்டோட முடங்கிட்ட. இப்ப சரின்னு சொல்லு. வரிசையா மூணு படத்துல கமிட் பண்றேன். ரீஎன்ட்ரி சூடு தாயி. அடுத்த பத்து வருஷத்துக்கு நம்பர் ஒன் நீதான். ரெண்டு ரவுண்டு வரலாம். வா. வெளீல வா, ரிப்ளெக்டரு, க்ளாப் போர்டு, டேக், டப்பிங் குன்னு சகலமும் ஞாபகப்படுத்திப்பாரு. உன் உலகம், வீட்டோட முடியல்லேன்னு புரியும். இஷ்டம்னா சொல்லு. அடுத்த படம் உனக்குத்தான்...' அவரின் வார்த்தை உருவேற்றலில் காலையிலிருந்தே இவளின் மனசில் வண்டுக் குடைச்சல்.

''அவன் சொன்னதையே நினைச்சுட்டிருக்காதே. வேலையத்த ஆளுங்க. ஏதாச்சும் உளறுவானுக. நடக்கறதைப்பாரு. வெளில போனா நடுத்தெருவுலதான் நிக்கணும். அடுத்த வேளைச் சோத்துக்கே நாறிடுவ.''

கை உயர்த்தி எச்சரித்தான்.

ம்.ம். பரவாயில்லை. அந்தச் சவால்தான் சுகம். அந்த நிச்சயமின்மைதான் ஜீவனத்துக்குச் சுவை. சுவாசத்தின் அர்த்தம்.

''விருது வாங்கிட்டீங்க. எப்பக் கல்யாணம்? கல்யாணத்துக்கு அப்புறமும் நடிப்பீங்களா?''

தொலைக்காட்சிக் கேள்விக்குப் பெரிதாய்ச் சிரித்தாள் ராகினி. ''என்னால நத்தையாய்ச் சுருங்க முடியுமான்னு தெரியல்ல. சுவாசம் கூட மறந்துடும். நடிக்கறது மறக்காது. சாயங்காலமாச்சுன்னா சீவி சிங்காரிச்சுக் காப்பி கோப்பையோட புருஷனுக்காகக் காத்திருக்க முடியுமான்னு தெரியல்ல. உழைக்கணும், நடிக்கணும். நாயாப் பேயா, ராவாப் பகலா உழைக்கணும். அடிச்சுப் போட்ட மாதிரி கீழே விழற

வளர வளர்க்கணும். குடும்பத்தைக் கவனிக்கணும்னு கயிறு கட்டி இழுக்க என்னால முடியாது. புருஷன் புகழ்ல குளிர் காயறது, அவரோட பெருமைல என்னோட துன்பம் மறக்கடிக்கறது எனக்கு ஒத்துவராது. நெருப்புல குதிக்கணும். வெள்ளத்துல அடிச்சுப் புரண்டு மூச்சுக் காத்துக்குத் தத்தளிக்கணும். வெயில்ல கருகணும். மழைல நனையணும். சுகவாசியா வீட்டோட முடங்க என்னால முடியாது. அதனால கல்யாணம் பண்ணாலும் நடிப்பேன். இதுதான் என் இருப்பின் அர்த்தம். நடிக்காதேன்னு சொல்ற புருஷன் என்னைப் புரிஞ்சுக்கலேயில்லன்னு அர்த்தம்.''

கடைசியான பதில். தன்னம்பிக்கைத் தெறிப்பு.

என்னோடு சேர்ந்து சுற்றினவள், உச்சியிலிருந்து வளைந்துவிட்டாள். குடும்பம், சோறு, வீடு இப்படிக் கரைந்துவிட்டேன் நான். உழைக்காத வாழ்க்கை பிரேத வாழ்க்கைதானோ? மகள் இருந்த இருப்பும் ஓர் இருப்பா? த்தூ.

'நடிக்கக் கூடாது. போடின்னு முகம் காட்டக்கூடாது. என் புகழே உனக்குப் போதும். வீட்டோடதான் இருக்கணும். குடும்பம் நடத்தணும். வீடுதான் சகலமும். புரியுதா?'

அப்போதிருந்த காதல் கிறக்கத்தில் தலையாட்டினாள். அவன் சொன்ன அமிலச் செதியின் வீர்யம் புரியவில்லை. இத்தனை மூச்சடைக்கும் என்று தெரியவில்லை. சுவாசம் பறிபோகும் என்றும் உணரவில்லை. அடித்தளம் கிடைக்கிறதென்ற நிம்மதியில் தலையசைத்தாள். வெற்றிடம்தான் வாழ்க்கை என்றாகி விட்டது. ஒவ்வொரு நாளும் இயக்கமின்மைதான் விடியலாகிறது.

'கல்யாணத்துக்கப்புறம் நடிக்க மாட்டேன். குடும்பத்தைக் கவனிக்கப் போறேன்.'

பூரிப்பாய்ப் புகைப்பட மின்னலில் சொன்னது அப்போ அந்தக் வேளைச் சோற்றின் நிச்சயமின்மை, கல்யாணத்தில் மயங்க வைத்ததோ? அடித்தளமே இல்லாத நேரத்தில், இவன் தந்த நத்தைக் கூடும் பிரம்மாண்டமாய் இருந்ததோ? இப்போதுதான் புரிகிறது. என் கால்களை வெட்டிவிட்டான். நாலு சுவரைத் தவிர வெளியேயிருக்கும் காற்றின் வாசம் தெரியவில்லை. வெளிச்சத்தின் விலாசம் தெரியவில்லை. நத்தைக் கூடு, என் முகவரியில்லையே.

படுக்கையறை தவிர, இவளோடு சேர்ந்து அவன் எங்கேயுமே போனதே இல்லை. ''இமேஜ் போயிடும்'' சால்ஜாப்பு.

கல்யாண வரவேற்பின் போது கைகுலுக்கின நந்தினி, 'குண்டுச் சட்டிக்குள்ள சேனம் கட்டி ஓடறது உனக்கு ஒத்துவராதுன்னு

அப்புறமாப் புரிஞ்சுப்ப. பரவால்ல. இரவல் வாழ்க்கைன்னாலும் சந்தோஷமா இரு' கிசுகிசுத்தாள்.

'ஹூம். பொறாமைடி உனக்கு. செட்டிலாகிட்டேன்னு ஏக்கம். ஒரு உருண்டை சோத்துக்கு நீ யுத்தம் பண்ணனுமேன்னு வருத்தம். புளியங் கொம்பை விட்டுட்டமேன்னு ஏமாற்றம். என் புருஷன் வாழ்க்கை, என்னுதும்தானே? இதுல எங்கேயிருந்துடி இரவல் வந்துச்சு?'

முகத்தைத் திருப்பியதுதான் தப்பு. அப்போது புரியாதது இப்போது புரிகிறது.

''சுகமா வாழ உன் உடம்பு பழகிடுச்சு. ஏஸி, காருன்னு இல்லாம உனக்கு மூச்சு நின்னுடும்''

கொஞ்சம் கொஞ்சமாய் விஷமேற்றுவது மாதிரி உருவேற்றினான். அப்போதுதானா மூச்சு நிற்கும்? இப்போதும் தானே நான் பிரேத வாழ்க்கை வாழ்கிறேன். இதுதான் இரவல் வாழ்க்கை. பர்தா வாழ்க்கை. பிரேத வாழ்க்கை. சவக்குழி வாழ்க்கை.

மூச்சு விடுதல் மட்டுமா ஜீவிதம்? முகத்தைத் தொலைத்து ஏது வாழ்க்கை? இருப்பை அர்த்தப்படுத்துதல் தானே அத்தியாவசியம். சுயம் இழக்காமல் கிரீடம் சுமப்பதுதானே வெற்றி.

''சந்தோஷமா இரு. புருஷனோட சாதனை உனக்கும்தானே?'' அவனின் இயக்கத்துக்கு அவளை இழுத்தான். அவன் பாட்டுக்கு ஒரே யோசனையோடு இயங்க, செயலற்ற உடம்பும், குழம்பிப் பரபரத்த உடம்புமாய் இவள்.

''இன்னொருத்தன் எம்பொண்டாட்டியத் தொடறது, கட்டிப் புடிக்கறதெல்லாம் வேணாம். எல்லாம் நாய்ப்பசங்க'' அழுத்தி முத்தினான்.

''வேணாம் விடுங்க. சுயவிமர்சனமா பண்றீங்க?''

தள்ளி எழுந்தாள்.

''நத்தையாய்ச் சுருங்க என்னால முடியாது. நான் வானம்'' பிரகடனம் செய்தாள் நந்தினி.

''ஆஃப் பண்ணித் தொலை அந்தச் சனியனை. பெரிய கண்ணகி. பேச வந்துட்டா. இவளை மாதிரி நாலுபேரு இருந்தாப் போறும். பொம்பளைங்க உருப்பட்டிருவாளுங்க. சாக்கடை ஜென்மம். கழிசடை மூதேவி''

சிகரெட்டோடு கோபத்தை நசுக்கினான்.

''நானும் இதுமாதிரி விருது வாங்கணும். பேட்டி குடுக்கணும். குடுப்பேன்.''

ஸ்பஷ்ட வார்த்தைகள். நம்பிக்கையை நாற்று நட்டன.

''என்ன கனவு காணறியா? திரும்பவும், நடிப்பு, மேக்கப்புன்னு ஆரம்பிச்சேன்னா என் மனைவியா இருக்க முடியாது. இந்த வீட்டுல ஒரு இஞ்ச்கூட உனக்குச் சொந்தமா இருக்காது.''

''ம்... ம்... இப்பவும் படுக்கைல தவிர உங்க மனைவிங்கற அடையாளம் இல்லாமத்தானே இருக்கேன். நான் யார்? என் முகம் எதுங்கற சுயமுகம் இழந்துதானே இருக்கேன். என் திறமையைக் கருக்கி எரிச்சுட்டுச் சாம்பலையே மனைவியா நீங்க நினைக்கறது தப்பு. இங்க என்னால பொருந்த முடியல்லே. வியர்வை வாசனை இல்லாத வாழ்க்கை. உழைப்புச் சூட்டுல வேகாத சோறு. தூக்கமே வராத படுக்கை. உதயமே இல்லாத நாள்கள். இதிலே என்னைப் பொருத்திக்க முடியல்லே. தரைல விழுந்த மீன் மாதிரி தத்தளிப்பு. உழைப்புங்கற மூச்சுக்காத்து வேணும். கஷ்டமோ, நஷ்டமோ எனக்கும் அந்தக் கடல் வேணும். அலை வேணும், கொந்தளிப்பு, சுழல், சுழிப்பு, பறிபோகற கால் மணலைக் காப்பாத்திக்கற பதைபதைப்பு, நுரையைக் கிரீடமாகச் சூட்டிக்கற கிளர்ச்சி வேணும். எந்தப் பிரயத்தனமும் தேவையில்லாத முடமான வாழ்க்கை வேணாம். உங்க புகழ்ல நான் குளிர்காய மாட்டேன். உங்க மூச்சுக் காத்தோட மிச்சத்தைத்தான் நான் சுவாசிக்கணும்கற கட்டாயம் வேணாம். உங்க சாதனை என் சாதனைன்னு கிளிப்பேச்சு பேச முடியாது. நானே தவறவிட்ட என் முகத்தைத் தேடப் போறேன்.'' பிரகடனம் பண்ணினாள் அவள்.

''மூணுமுடிச்சுங்கற தூக்குமேடையைவிட தொழில் வெற்றிங்கற சாதனை மேடைதான் வேணும். அதுதான் என் வாழ்க்கை.''

கைகுவித்து வணக்கம் சொன்னாள் நந்தினி.

''தூத்தேறி''

டி.வி. மீது ரிமோட்டை விட்டெறிந்தான் அவன்.

எழுந்து போய்த் தயாரிப்பாளருக்கு போன் செய்தாள்.

''வணக்கம் அண்ணே. முதல் ஷெட்யூல் எப்ப வச்சுக்கலாம்?''

இதுநாள் வரை வெறுமையாயிருந்த அறையை அணுஅணுவாய் நிறைத்தன அவளின் உயிர் வார்த்தைகள்.

●

# கோரைப் புற்களின் கோரைப் பற்கள்

திடீரென்றுதான் அந்தச் சப்தத்தைக் கவனித்தாள் சரஸ்வதி. ஒரேசீராக சர்க் சர்க்கென்று. கூடவே லேசாய், சன்னமாயப் பச்சைப் புல்லின் வாசமும். இதுநேரம் வரை வேலை மும்முரம். காபிக்கடை, டிபன், காலைப்புயல் என்று மூளை சேணம் கட்டி வேலை பார்த்தது. புளி கரைத்தது. பருப்பு வேகவைத்தது. இட்டிலி இறக்கியது. சட்னி அரைத்தது. புளிகொதிக்க வைத்துச் சாம்பார் வைத்தது. நாலைந்து தரம் காப்பி கலந்தது.

''சரசு. கோடி வீட்டம்மா கிளம்பறாங்க பாரு. ரெண்டு காப்பி கொண்டாறதுக்கு இம்புட்டு நேரமா?''

அத்தையின் வார்த்தைகள் அவசரத்தைச் சுமந்துவந்தன.

காலையிலிருந்து வந்தவர்களுக்கெல்லாம் எட்டாம் தடவையாய்க் காப்பி கலந்ததில் சரசுவே ஃபில்டராய் உருமாறியதாய் உணர்ந்தாள். தன்னிலிருந்து கிளம்பின காப்பிக் கடை வாசம் குமட்டியது.

இந்தக் கண்ராவியை எப்படித்தான் மனிதர்கள் குடிக்கிறார்களோ!

''சரசு... நேரமாவுது பாரு....''

''ம்... ம்... இதோ அத்தே...''

காப்பியோடு போய்க் கையில் கொடுத்து பவ்யமாய் வணக்கம் சொன்னாள் சரஸ்வதி.

அவளைத் தலையோடு காலாய்க் கிழித்து ஊடுருவும் பார்வையை அனுப்பினார் அந்தப் பெண்மணி. அஞ்சரை அடி உயரம், மஞ்சள் சரடு, கருநட்டைத் தலைமுடி, கறுத்த நிறம், நாட்டுக்கட்டைத் தோற்றமாயிருந்த சரசுவதியின் எதுவுமே அந்தப் பெண்மணியின் பார்வையிலிருந்து தப்பவில்லை. முகம், கண், கருவிழி, உடம்புத் தோல், எலும்பு என்று சகலத்தையும் ஊடுருவும் பார்வை. தராசுத் தட்டில் வைத்து நிறுத்துப் பார்க்கும் பார்வை.

இந்தக் குடும்பத்துக்கும், தாம்பத்யத்துக்கும் தோதுப்படுபவள்தானா என்று பரீட்சித்துப் பார்க்கும் பார்வை. மதிப்பெண் போடும் பார்வை.

''ம்... பரவாயில்லை. மருமவ லட்சணமாத்தான் இருக்கா. காப்பி கூடப்பரவால்ல. ஏதோ உன் அதிர்ஷ்டம். எனக்கு வாய்ச்சது மாதிரி எடக்குமுடக்கா அமையாம, நல்லதாக் கெடச்சிருக்கா. கைக்கு அடக்கமா - வீட்டோட கெடக்கற மருமவளாப் புடிச்சிட்டே...''

காப்பி ருசியின் மயக்கத்தில் வார்த்தை அட்சதைகளைத் தூவிவிட்டுக் கிளம்பினார்.

மறுபடியும் கர்க்கர்க்கர்க்கென்ற சப்தம். புல் வாசனை. சமையலறை பின்பக்க இரும்புக் கம்பியைப் பிடித்து எட்டிப்பார்த்தாள். தண்ணீர் டாங்க்கின் அருகில் புல்வெட்டிக் கொண்டிருந்தார் பெரியவர். பத்து மணிக்கே கொளுத்திய வெயிலில்- வியர்வை பொங்கிய உடம்பு. நரைமுடி வெயிலில் மின்னியது. அங்கே இங்கே கவனம் சிதறாமல் கர்க்கர்க்கர்க். காலையிலிருந்தே வேலை ஆரம்பித்திருக்க வேண்டும். புதர் புதராய் வெட்டின புல் குவியல்.

''என்ன வேடிக்கை?''

''புல்லு வெட்டறாரு. வயசான காலத்துல. பாவம்...''

''ஆமாமா... மாசாமாசம் இது ஒரு எழவு. கீழ் வீடுங்கறதால நாம தான் எழுதி வைக்கணும். புல்லுவெட்ட ஆளு அனுப்புன்னு. இல்லேன்னா கோரையா வளந்துடும். கொசு மண்டும். சாயங்காலம் புடுங்கி எடுத்துரும். அங்க கெடையாதோ இந்த சோலி?''

''ம்ஹூம். சாணித் தண்ணி தெளிப்பமே முன்னயும் பின்னயும்....''

''இங்க எங்க போவ-சாணிக்கும் தண்ணிக்கும்? சரி, நீ சாப்பிட்டு வேற புடவை மாத்திக்கோ, மேல் வீட்டு ஐயாவும் அம்மாவும் வருவாங்க...''

சேதி சொல்லிவிட்டு ஹாலுக்குப் போய்ச் சின்னத் திரைக்கு உயிர் கொடுத்தார். தொடர்ச்சியாய்ச் சினிமாப் பாடல்கள். காதலைப் போதித்து, செய்முறை விளக்கம் செய்து, காதலைத் தவமாக்கிக் காதை அறுத்தன. இத்தனைக் காலையிலேயே இந்தக் கொடுமையா?

''சரசு.... அவங்களுக்கு மசாலாடீதான் புடிக்கும். கலந்து வச்சிடு... நீயும் வேணா-சாப்பிடு...''

காற்று-வழக்கம் போலக் கட்டளையைச் சுமந்தது. சரஸ்வதிக்குப் பசிக்கவில்லை. காப்பி, பலகாரம் இப்படிக் கலவை வாசனையில் வயிறு குமட்டியது.

புல் வெட்டும் பெரியவரைப் பார்த்தால் பாவமாயிருந்தது. வியர்க்க விறுவிறுக்க வேலை பண்ணிக் கொண்டிருந்தார். அவள் பார்ப்பது தெரிந்தோ உணர்ந்தோ தலை நிமிர்ந்தார்.

''என்ன தாயி பார்க்கறே?''

''இவ்வளவு புல்லையும் ஒத்தை ஆளாவா வெட்டப் போறீங்க?''

''ம். நெதமும் இதான வேலை''

''கை விண்டு போயிடுமே...''

''ம். கை மட்டுமா? குனிஞ்சேயிருந்து முதுகு கூடத்தான் கழண்டுரும். தலை கிர்ருன்னு சுத்தும். அதைப் பாக்க முடியுமா? வயிறு கூவுமே...''

அவரின் கைவலி காற்றில் தவழ்ந்து சரஸ்வதியின் கைக்குள் நுழைந்தது புரிந்தது. தலைப்பாகையைக் கழற்றி அழுத்தித் துடைத்தார்.

''இத்தினி வயசுக்கும் - கஞ்சி ஊத்த ஆள் இல்லையா?''

''நாதியத்துப் போய்த்தானே வெயில்ல காயறேன். கைபாரு. மம்புட்டி புடிச்சிக் காய்ச்சிப் போச்சு...''

ரெண்டு கைகளையும் முகத்தில் அழுத்தித் தேய்த்து வியர்வையைத் துடைத்துக் கொண்டார்.

''தண்ணி வேணும் தாயி...''

பின்பக்க இரும்புக்கதவு திறந்து செம்போடு நீட்டினாள். ரெண்டு கையும் ஆசையாய் நீட்டி அள்ளிக் கொண்டார். அவர் குடிக்கக் குடிக்க சரஸ்வதியின் மனசு நனைந்தது. வயிறு குளிர்ந்தது.

''மசாலா டீ ரெடியா?''

உள்ளே வந்த அத்தை கேள்வியை முதலில் அனுப்பினார்.

''ம்... இதோ ரெண்டு நிமிஷம் அத்தே....''

பின்னாலிருந்து பெரியவர் 'ஏவ்' என்று ஏப்பமிட்டார்.

''இந்தா தாயி. நல்லாயிருப்ப...''

செம்பை வாசல் ஓரமாய் வைத்தார் பெரியவர்.

''கிழத்துக்குத் தண்ணி குடுத்தியா என்ன?''

''ம். டீ... அவருக்கும் ஒருவாய் தரவா?...''

''*தாராளமாக் குடேன். இப்ப டீ குடு. அப்புறமாச் சாப்பாடு போடு. சாயங்காலம் டிபனு குடு. ஆறுமணிக்குத் திரும்பவும் டீ குடு. வரிசையா விருந்து போடு - புல்லுவெட்டற நாய்க்கு... அனாதைப் பிசாசுங்க...*'' நக்கலாய் ஆரம்பித்து, கேலியை நோக்கி நகர்ந்தது அத்தையின் குரல்.

''*கீழ் வீட்டுல இது ஒரு கஷ்டம். மேல் வீட்டுக்காரங்க தப்பிச்சுடுவாங்க. நாமதான் வாரபோற பிச்சைக்காரங்களுக்கு அடைக்கலம். நிமிஷத்துக்கு நிமிஷம் கதவைத் தட்டுவானுக. தண்ணி கேப்பானுக. புல்லு வெட்டறவன், சித்தாளு, மேஸ்திரி, ஸேல்ஸ் பொம்பளைங்க, கீரைக்காரி, காய்க்காரனுவ, வாட்ச் மேன், மாடிப்படி பெருக்கறவ, குப்பை அள்றவன் அத்தினி பேருக்கும் தண்ணி குடுத்தே தாலியறுந்துடும்... சாப்பிட ஏதாச்சும் கேப்பானுக. அத்தனை மாடிக்கும் பொது வேலைக்குக் கூட நம்மளைத்தான் தொந்தரவு பண்ணுவானுக. சரியான கழுத்தறுப்பு கேஸுங்க. இந்த லட்சணத்துல நீயாவே கூப்பிட்டு டீ குடுக்கப் போறியாக்கும்? உருப்பட்ட மாதிரிதான்...*''

*சரம்சரமாய் அர்ச்சனையை அத்தை விளாசினார். ஸ்தம்பித்துப் போனார் பெரியவர். ரெண்டு நிமிஷம் வாய்திறக்காமல் கேட்டு, துண்டால் முகத்தையும் உடம்பையும் துடைத்தார்.*

''*ம்..ம்.. கஷ்டந்தாம்மா. வாஸ்தவமான பேச்சு..*'' *அவரின் வார்த்தைகளும் கிண்டலைச் சுமந்தனவா என்று கணிக்க முடியவில்லை.*

**ம**திய உணவுக்குள்ளாக நாலைந்து வீட்டு ஆட்கள் வந்து வந்து சரஸ்வதியைப் பார்த்துப் போனார்கள்.

புதிய மருமகள் எப்படி இருக்கிறாள்? எப்படிப் பழகுகிறாள்? எப்படிச் சமைக்கிறாள் என்று பலவிதமான எப்படித் தேர்வுகள். எல்லாமே டீ, காபி, பூரி, உருளைக்கிழங்கு, தோசை, கலவை சாதம் வகையறா துணையோடு.

முதுகெலும்பு நொறுங்கிப் போனது சரஸ்வதிக்கு. திரும்பத் திரும்பப் பரிமாறுதலும், சுத்தம் செய்வதும் பரிமாறுதலுமாய்ப் பம்பரச் சுழற்சியால் தலை சுற்றியது. ஈர்ப்போ, பிடித்தமோ இல்லாமல் முகஸ்துதிக்காக விருந்தோம்புதலில் மனசு துவண்டு களைத்தது.

''*மருமவளே. அப்படியே எனக்கும் தட்டுப் போட்டுரு. கைய நனைச்சுட்டுக் கட்டையச் சாய்க்கறேன். அடிச்சுப் போட்ட மாதிரி வருது...*''

தொலைக்காட்சியைக் கண்கொட்டாமல் பார்த்ததற்கும், வந்தவர்களோடு பேசியதற்குமே களைப்பு அவரைச் சுழட்டியடித்தது.

''நீயும் உக்கார்றியா?''

''பசிக்கலே அத்தே...

முழு இலைச் சாப்பாட்டை வழித்து உருட்டிச் சாப்பிட்டார்.

''பரவால்ல கிராமத்துப் பொண்ணுன்னாலும் வித்தியாசமா சமைச்சிருக்கே...''

இப்படிச் சான்றிதழ் கொடுத்துக் கை கழுவினார்.

''அத்தே...''

'ம்?''

''சாப்பாடு மிச்சமிருக்கே. புல்லுவெட்டற தாத்தாவுக்குக் கொஞ்சம் தரவா?''

''ம்ஹூம். ஒண்ணும் வேணாம். சோறு குடுத்தாப் போறும். கூடவே ஊறுகா வேணும்பானுங்க. குழம்பு ஊத்தும்பாங்க. தொடுகறி கேப்பானுங்க. சட்டமா உக்காந்து பொறங்கைய நக்கித் திம்பானுங்க. ருசி இல்லேம்பானுங்க. புதுப்பழக்கமெல்லாம் சொல்லாத. மிச்சமாச்சுன்னா குப்பைல கொட்டு...''

பெரிய கொட்டாவியைச் சுமந்து சுருண்டார் அத்தை. வீடு அமைதியின் ஆக்கிரமிப்பில். அத்தையோடு சின்னத்திரையும் உறங்கியது அசதியாய். தட்டுத் தட்டாய் மிச்சமிருந்தவற்றைக் குப்பை வாளியில் கவிழ்த்துப் பாத்திரங்களை ஒழித்துப்போடுகையில் சர்க்சர்க்சர்க் என்ற லயம் அமைதியை நசுக்கியது.

அடுப்புத் தணலாய் எரித்த வெயிலின் பொசுக்கும் தீ நாக்குகள் பெரியவரை ஒன்றும் பண்ணவில்லையா?

''தாத்தா...''

சர்க் சர்க் சர்க்

''பெரியவரே..''

''என்ன தாயி?''

நிமிர்ந்தார். முகமெல்லாம் இன்னமும் கறுத்து வியர்வை வெள்ளமாய் வடிந்து மூசுமூசென்று இரைந்தார். கண்ணில்- வெயில் கூச்சம் தாங்காமல் தாரை தாரையாய்த் தண்ணீர் வழிந்தது.

''சாப்பிட்டீங்களா?''

''ம்... ஆச்சும்மா...''

பரவாயில்லை கடவுளே. மனசு ஆறுதலானது சரஸ்வதிக்கு.

''எடுத்துட்டு வந்தீங்களா? வாசல்ல இருக்கற டிபன் கடைலயா?''

''எடுத்து வாவா? சமைக்க நாதி இல்ல. தூக்கு வாளில போட்டு விட நாதியில்ல. தின்னியான்னு கேக்கக் கூட நாதியில்லாத அனாதைம்மா நானு...''

வாழ்க்கையின் கடைக்கோடியில் தனியனாய் நிற்கும் தவிப்பை அவரின் குரல் எதிரொலித்தது.

''சாப்பாடு பலமோ...?''

''ம்...ம்.. ரொம்பப் பலம்தான். ரெண்டு ரூவா இருந்துச்சு. ஸிங்கிள் டீக்குப் பதிலாகப் டீ குடிச்சேன்.''

அவர்பாட்டுக்குப் பேச்சோடு சோலியைத் தொடர்ந்தார். அரிவாளால் வெட்டப்பட்டு விழுந்தவை புற்கள் மட்டுமா? அவரின் வார்த்தைகளும், நிதர்சனமும் வெட்டி வெட்டி சரஸ்வதியின் ஹ்ருதயம் அறுபட்டது. ஸ்வாசம் அறுபட்டது. கை, கால், காது, விரல்கள் என்று தனித்தனியாய் அறுந்து விழுந்தன.

நிஜமா? நிஜம்தானா?

வெறும் டீயா மதிய உணவு?

ஒரு கோப்பைத் தேநீரா சாப்பாடு?

''காலைலேருந்து புல்லுவெட்டி நெறயப் பசிக்குமே தாத்தா... வெறுமனே டீ போறுமா?''

'அதுக்கு என்னா பண்ண தாயி? வயிறு சோறுதான் கேக்கும். என்னா பண்ண? எங்கன போக? யாரு குடுப்பாக? வயிறு- நம்ம சொல்பேச்சு கேக்கணும் தாயி... அப்பத்தான் அடங்கிக்கெடக்கும்... இருக்கப் பட்டவங்களுக்குத்தா நாலு வெஞ்சனம் வேணும். என்னை மாதிரி ஆளுங்களுக்குப் பாதி நாளு தண்ணிதான் சோறு. டீ கெடைச்சா விருந்துதான் போ... சரி. நா சோலிய முடிக்கேன் தாயி..''

கேள்விகளால் என்னைத் தொணப்பித் தொந்தரவு செய்யாதே என்கிற தொனியில் பேச்சை நிறுத்த, சரஸ்வதிக்கான மூச்சுக்காற்று உறைந்த ரீதியில் அதிர்ந்தாள். அரிவாளும், கத்தரிக்கோலும் மதிய நிசப்தத்தோடு மறுபடியும் பேசின.

**நா**லரை மணிபோல் அத்தையின் தூக்கம் விடைபெற்றுப் போனது. எழுந்த நிமிஷமே தொலைக்காட்சியும் கண்விழித்தது.

''முகம் வாடியிருக்கே.. சாப்டியா மத்தியானம்?''

''ம்ஹூம் வயிறு சரியில்லை. சாப்பிடப் புடிக்கல்ல...''

'பட்டினி கெடக்காதே. மாமியார்க்காரி சோறு போடாமக் கொடுமை பண்றாள்னு பேசுவாளுங்க''

முகம் கழுவி வந்தார்.

''சரி. பால் காய்ச்சறியா? புது டிகாக்ஷன் இறக்கு. ஃப்ரெஷ்ஷா காப்பி வேணும். அதுக்கு முன்னாடி ரெண்டு தோசை சுடு. பொடி வச்சுக் காரமா சாப்பிடணும்...''

ஒன்றும் பேசாமல் செய்ய ஆரம்பித்தாள் சரஸ்வதி. மனசில் வலி இருந்தாலும் கைவேலை பாதிக்கக் கூடாதே.

''அத்தே. பெரியவருக்கு ரெண்டு தோசை தரவா? காலைலேருந்து ஒண்ணும் சாப்பிடலை அவரு..''

''அம்மா தாயே மருமவளே. திரும்பத் திரும்ப ஆரம்பிக்காதே. இந்த நாய்ங்கள்லாம் கிடைக்கற வரைக்கும் லாபம்னு பஞ்சப்பாட்டு பாடும். கண்டுக்காதே. அவரு இவருன்னு இதுங்களை அரியணைல உக்காத்தி வைக்காதே. அவன்னு சொல்றதே கூட ஜாஸ்தி.''

வார்த்தைகளில் கடுகடுப்பு காந்தியது.

''உன் புருஷனுக்குப பரோட்டான்னா ரொம்பப் பிடிக்கும். மாவு கலந்து வை. சூடாத் தந்தா நாலு சாப்பிடுவான். அவன் ஆபீஸ் ப்ரெண்ட்ஸெல்லாம் வருவாங்க. ராத்திரிக்குப் பால்பாயாசம் பண்ணு. முந்திரியும்,பாதாமும் தாராளமா ஒருகை அரைச்சு வுடு... அப்பத்தான் மதிப்பா இருக்கும்...''

சூடாய், முறுகலாய் நெய்தோசை மூணும், கள்ளிச் சொட்டுக் காப்பியும் சாப்பிட்டார். காலையிலிருந்து ஒன்றுமே சாப்பிடப் பிடிக்காமல் குமட்டியது சரஸ்வதிக்கு. விடாமல் தொடர்ந்தது கர்க் கர்க் கர்க் சப்தம்.

மறுநாள். வேறுயாரோ ஒருவர் வந்து காய்ந்த கோரைப் புற்களுக்குத் தீ வைத்தார். கனன்று கனன்று புகைந்தது. எரியும் புல்வாசனை சுகமாய் இருந்தது.

''பெரியவர் வரவில்லையா?''

''ம்ஹூம் இனிம வரமாட்டாரு...''

''ஏன்? நின்னுட்டாரா?''

''நேத்து ராத்திரி போய்ச் சேர்ந்துட்டாரும்மா.. நாதியில்லாத ஆளு. அனாதைப்பொணம். நாங்கதான் காரியம்செஞ்சோம்..''

அவர் பாட்டுக்குக் கிளறிவிட்டார் புகையை. சரஸ்வதியின் கண்ணில் பொங்கிய கண்ணீர்- கோரைப்புல் புகையால் என்று அத்தை நினைத்துக்கொண்டதற்கு என்ன பண்ண?

''இன்னிக்கும் - இந்த ஆளுக்கு டீ குடுக்கணும் டிபன் குடுக்கணும்னு ஆரம்பிக்காதே. எனக்குச் சாதம் போடு...''

விச்ராந்தியாய் உட்கார்ந்தார் அத்தை. அப்புறம் வந்த நாளிலெல்லாம் சாப்பிட என்று முதல் கவளம் போடுகையில் வயிறும் ஹ்ருதயமும், நெருஞ்சி முள்ளால் உரசி உரசிக் குருதி கசிந்தன சரஸ்வதிக்கு.

கோரைப்புற்கள் மறுபடியும் மறுபடியும் வளர்ந்தன. வீட்டைச் சுற்றியும், வீட்டுக்குள்ளும். நிரந்தரமாய் வெட்டமுடியாதில்லையா?

●

# சரஸ்வதி தாரைவார்த்த முப்பத்துமூன்று வருஷங்கள்...

மருந்து மாத்திரைக்குப் பதிலாக - மருத்துவர்கள் தத்துவம் தரும் பொழுதுகளும் உண்டு. அந்தச் சமயங்களில் வானத்தைச் சுட்டுவார்கள். ரெண்டு கையையும் விரித்து எல்லாம் அவன் செயல் என்று சொல்வார்கள். ஆத்திக மருத்துவர்கள், நாத்திக மருத்துவர்கள் என்று சகலரும் சரணடையும் சமயம் அது.

அது மாதிரியான அசந்தர்ப்பம் ஒன்றில் தான் தீவிரக் கண்காணிப்புப் பிரிவினுள் நுழைய சரசுவதிக்கு அழைப்பு வந்தது. அது நிமிஷம் வரைக்கும், வராந்தாவிலிருந்த நீளமான இருக்கையில் சரிந்து - முந்தானையை முக்காடிட்டு உட்கார்ந்திருந்த சரசுவதிக்குள் மின் அதிர்வை ஊடுருவ வைத்த அழைப்பு அது. காலடி மணலைச் சரசரவெனப் பறித்த அலைமாதிரி - அவளின் மனசை முழுசுமாய் மூழ்கடித்து மூச்சுத் திணற வைத்த அழைப்பாகவும் அமைந்தது அது. எதற்கு? எதற்கு அழைப்பு? எதைத் தெரிவிக்க? மூணுநாளாய்க் கண்ணாடி வழியான பார்வைதானே அனுமதிக்கப்பட்டிருந்தது. இந்த அழைப்பின் நோக்கம் தான் என்ன? கேள்விகளை முந்தானையில் சுமந்து எழுந்து போனாள் சரசுவதி.

அதுவரைக்கும் காற்றில் கலந்திருந்த இறுக்கத்தைச் சுவாசித்தவளுக்குச் சரேலென்று காற்றுப் பிரதேசம் காணாமல் போனது. மருத்துவமனை வாசனைதான் உயிர் வாசனையா? இந்த இடத்தில் மட்டும் அடையாளம் சொல்லி உலவும் வாசனையை வேறென்ன பெயரிட்டு அழைக்க? உயிர் ஊசலாடும், உயிரைக் காப்பாற்றப் பிரயத்தனப்படும் இடத்திலுள்ள வாசனை-உயிர் வாசனையாகத்தானே இருக்கக்கூடும்?

உயிரின் ஓட்டத்தையும், தப்பித்தலையும் தடுத்து நிலைநிறுத்தக் கூடிய கருவிகள் பலவற்றின் காட்சிச் சாலையாக இருந்தது அந்த அறை. சில்லென்ற குளிர் உயிர் நிலையைப் பிடித்து உறைய வைத்தது. தங்கள் நோயின் தீவிரம் உணராத 'கோமா' நிலையில் பலர் உறங்க - அவர்களின்

வருத்தமும் வலியும் வேதனையும் வெளியிலிருந்த உறவினர்களின் மனசுக்குக் கடத்தப்பட்டிருந்தது.

சரசுவதி உள்ளே நுழைந்ததும் நெருக்கத்தில் பார்த்து மலைத்துப் போனாள். ஆஜானுபாகுவாய்க் கையை உதறிப்போட்டுக் கம்பீரத்தின் மொத்தக் குத்தகையாய் நீளமாய்க் காலைவீசி நடக்கும் அவரா? அவர்தானா? ஐயோ கடவுளே... உள்ளே அழைக்காமலே இருந்திருக்கலாமே... கம்பீரமும் மூங்கில் நிமிர்வுமாய்ப் பார்த்த ஜீவனை - நாடி தளர்ந்து, நரம்பு குழைந்து, மூக்கில், மார்பில், வாயில், கையில், ஊசிகளோடும், கருவிகளோடும் பார்ப்பதென்பது நரகம். தலைகுப்புறத் தள்ளிவிடும் வலி. வேதனைக் களஞ்சியம். குருதிக் கசியல். ஆனாலும் என்ன பண்ண?

நாடி பற்றிச் சந்தேகம் சொன்ன நர்ஸ்-பக்கத்திலேயே நின்றிருந்தாள். இது மாதிரியான காட்சிகள் பலதைப் பார்த்திருந்த விட்டேத்தியான முகபாவனை. உணர்வுகள் தொலைத்த முகம் அவளிடம். மெல்லக் குனிந்தாள் சரசுவதி. கண்ணுக்குள் ஊடுருவிப் பார்த்தார் அவர். அத்தனை நீண்ட வருஷங்களும் அவளைப் பார்க்காமல் தவிர்த்த கண்கள். உலகத்தின் அத்தனை பொருளிலும் பார்வை பதித்தும் அவளின் இருப்பை அலட்சியம் செய்த கண்கள். நேருக்குநேரான இந்தப் பார்வைத் தீண்டலே அவளுக்குப் புதுஜனனம் தந்த மாதிரி போதுமாயிருந்தது. புனர்ஜென்மம் மாதிரி இருந்தது. பெண் பார்க்க வந்தபோது பார்த்த அந்தப் பார்வை. நேசம் கோத்த பார்வை. இத்தனை வருஷம் கழித்து மறுபடியும்... உடம்புக்கு வயசானாலும் பார்வைக்கு வயசாகாமல் அதே தீட்சண்யத்தோடு. உள்ளுக்குள் குளுகுளுவென்று நெகிழ்ந்து ஓடியது. குற்றாலச் சாரல் மாதிரி பன்னீர் தெளித்தது. பொதிகைத் தென்றலாய் ஜவ்வாது வீசியது. சரம்சரமாய்ப் பிச்சிப்பூ வாசம் பூசியது.

''ச..... ர.... சு...''

குரல். அவரின் குரல். நிஜமாகவா? நிஜமாகத்தானா? நிஜமாகவே அவரின் அழைப்புதானா? பாவமன்னிப்பு கேட்கும் அழைப்பா? என் பெயர் அவரின் குரலில் காதலோடு கொலுவிருக்கிறதா?

''சர... சு...''

ஐயோ... போதுமே. இது போதுமே. இன்னும் நூறு ஜென்மத்துக்கு இந்தக் குரலே சுவாசமாய்ப் போதும். எத்தனை வழிப்பறிக் கொள்ளைகள் நடந்த போதும் இந்த நிமிஷம் என் பெயர் தானே ததும்புகிறது. நாமுழுக்க, மனசு முழுக்க, கண்முழுக்க - நானும் என்

பெயரும் தானோ? கடவுளே... கடவுளே... இதற்கு மேலும் நெகிழ முடியாது என்னால் அதேகுரல். முதலிரவுக்குரல். காதல், பிரேமம், பாசம், நேசம், வேகம் எல்லாமுமான கலவைக்குரல்.

''சரசு...''

எத்தனை வருஷம் கழித்து அவரின் வாயிலிருந்து வருகிறது எனது பெயர்? நீண்டத்தகாதனை - இப்போதாவது மனசில் பதித்துக் கொண்டாரே... போதும் கடவுளே.... போதும். குழைந்தே போனாள் சரசுவதி. மெல்லக் கையெடுத்து அவளின் கையைப் பிடித்தார். அவ்வளவுதான். உச்சியிலிருந்து ஏதோ கழன்று விட்டது சரசுவதிக்கு. கட்டுப்பாடு கழன்றே விட்டது. அந்தக் கை அழுத்தல் - ஆயிரமாயிரம் வார்த்தைகள் பேசின. கைகூடச் சில சமயம் வாய் ஆகலாம் தானே? பேசாமலே பேசலாம்தானே? வார்த்தை என்பது நாக்கில் ஜனித்து, ஒலி வடிவமாய் வாயிலிருந்துதான் வரவேண்டும் என்பது நியதியா என்ன? வார்த்தைகள் இல்லாமலே கூடப் பேசலாம்தானே? வார்த்தைகளும் ஒருவழியான பேச்சுதானே தவிர - அதுமட்டுமே பேச்சாகி விடுமா என்ன? முப்பத்தி மூணு வருஷப் பேச்சை மூணே விநாடியில் பேசி முடித்த திருப்தியை அந்தக் கை அழுத்தம் காட்டியது. வினாடிமுள் நகர நகர - அழுத்தம் ஒவ்வொரு புள்ளியாகத் தளர்ந்து கொண்டே வந்தது.

வயிறு பசித்ததோ?

தெரியவில்லை.

இப்போது - வயிற்றில் குடியிருக்கும் உணர்ச்சி பசிதானா? வேதனையா? என்கிற பாகுபாடு பார்த்தல் மறந்து போயிருந்தது. மரத்தும் போயிருந்தது.

இதே இடத்தில் நான் இருந்தால் - அவர்-டீயாவது குடித்திருக்கக் கூடும். சாயங்கால டிபனுக்குக் கொத்து பரோட்டாவாக இல்லாமல் - ஒன்றுக்கு நாலு இட்லியாவது உள்ளே சென்றிருக்கக் கூடும். செய்திருப்பாரோ? ம்... ம்.. ஆண்களுக்கு - உணர்வும் உணர்ச்சியும் தோல்வரைதானே? வியர்வை துடைப்பது மாதிரி, சட்டை மாற்றுவது மாதிரி உதறி விடுவார்கள் தானே? இவர் அப்படித்தானே செய்தார்.

ஒட்ட ஒட்ட ஒன்றுமே குடிக்காமல் பயணிக்கவா? வண்டியோட்டி ஒருமணிக்கொருதரம் ஓரம்கட்டி ஏதாவது உண்ணப் போகும்போது அவளைக் கேட்பதும், சரசுவதி மறுப்பதுமாகப் பயணம் மூணு மணி நேரமாகிறது...

''இந்த நம்பருக்கு விஷயத்தைச் சொல்லிடுப்பா...'' கொடுத்த எண்களை எடுத்துப் போனான். சேதி தெரிவிக்க வேண்டும் என்று

கிளம்பும் போது-மனசுக்குள் கெவுளி அடித்ததுதான். ஆனாலும் வீம்பு. வீராப்பு. இந்தத் தடவையாவது தனிமை எனக்கு மட்டுமே சொந்தமாகட்டும் என்று உரிமை நிலை நாட்டும் வீம்பு, பிடிவாதத்தில் வண்டி ஏறினாலும் கூடப் பொம்பளை மனசு நொய்ந்துதான் விடுகிறது.

இருட்டில்-விர்விர்ரென்று மினுக்கிமினுக்கித் தூரத்து விளக்குகள் மறைந்தன. காற்று காதைக் கிழித்தது. குளிர்ந்தது. இந்தக் குளிர்ச்சி இவருக்கு ரொம்பவும் பிடிக்கும். அமைதி. நிசப்தம். வண்டி ஓடும் சப்தம் மட்டும்தான் சம்பாஷணை. புது அனுபவம் இது. வித்தியாசமான பயணம்.

ராத்திரித் தூக்கத்தில் இவர்மீது கால்போட்டுக் கொள்ளலாமா? கையை எடுத்து என் இடுப்பில் அணைத்துக் கொள்ளலாமா? முகத்தோடு முகம் சேர்த்துப் பக்கமாய்ப் படுத்துக் கொள்ளலாமா? இத்தனையும் இந்த நிலையில் இவரைப் பண்ணலாமா? மிருகம் என்பார்களா என்னை? கேவலமான பிறப்பு என்பார்களா? ஆனாலும் என்ன பண்ண? இந்த ஒரு ராத்திரிதானே சாசுவதம்? இந்த ராத்திரி - இந்தப் பயணம் - இதுமட்டும்தானே எனக்கும் அவருக்குமானது? ஊர் மண்ணைத் தொட்டுவிட்டால் சகலரின் உடைமையாகி விடுவாரே? இந்த நிமிஷம் இந்த வினாடி எனக்கே எனக்கானது தானே? இழந்து போன தனிமை வினாடி கிடைக்கும் என்று இத்தனை வருஷம் தவமாய்க் காத்திருந்தது - இப்படி முடியும் எனத் தெரியுமா என்ன? ஏதோ - விதத்தில், வேண்டிய தனிமை கிடைத்திருக்கிறதே...

முகத்தை, மூக்கை, மீசையை, உதட்டை, கழுத்தை, மார்பை, வருடினாள் சரசுவதி. யப்பா. ஐம்பத்தாறு வயசுப் பிடிவாதத்தின் வெளிப் பாடாய்த்தான் ஒவ்வொரு துளியும் இருந்தது. அழுத்தம். பாறையின் இறுக்கம். அசைக்கவே முடியாத ஸ்திரத் தன்மை உச்சிமுதல் ஓடியது. மீசை... இந்த மீசை... இத்தனை வயசுக்கும் கம்பீரம் குறையாமல். அதுதானே எல்லாரையும் மயக்கிவிடும் அஸ்திரம். லேசாய்க் கிள்ளி இழுத்துவிட்டாள் சரசுவதி.

மறுவீடு முடித்து - ராவோடு ராவாய்க் கிளம்பின சமயம். பட்டுப் புடவை, தாழம்பூ வைத்துக் கட்டின பூச்சடை, குஞ்சலம், வாயில் குதப்பிய வெற்றிலை பாக்குத் தாம்பூலம், சந்தன வாசனையுமாய் சரசுவதி. பட்டுவேட்டி சட்டை, தோளில் கம்பீரமாய்க் குடியிருந்த துண்டுமாய் அவரின் மேலும் ஜவ்வாது வாசனை. உயிர் வாசனை ததும்பிய பயணம் அது. குதிரை வண்டி குலுங்கும் போதெல்லாம் இவர் மீது உரச - புல்லரிப்பை மறைக்கப் பட்டுப்புடவை முந்தானையை இன்னும் இழுத்து விட்டுக் கொண்டிருப்பாள் சரசுவதி. குதிரை

வண்டியின் ரெண்டு பக்கமும் திரை. வண்டிக் கூரை உச்சியிலிருந்த சதுர வெட்டு வழியாக உள்ளே வழிந்த நிலவு வெளிச்சமும், வண்டிக்குள் இருந்த இருளுமாகப் புதுமாதிரி அனுபவம் அது. இருளும் ஒளியும் புணர்ந்து முகத்தில் பூரிப்பு பூட்டிய புண்ணிய நேரம் அது. வண்டியில் பரத்தியிருந்த புல்விரிப்பின் குளுமையும் வாசனையும் இப்போதும் கூட மூக்கைத் துளைக்கிறது. இவரின் சில்மிஷத்தில் இந்த நிமிஷமும் உடம்பு சிலிர்க்கிறது. குலாவல், கொஞ்சல், வார்த்தைப் பொழிவு இல்லாமல், வசதியில்லாமல், அஞ்சுக்கு மூணு நீள அகலத்தில் வண்டிப் பயணம் சொர்க்கத்தின் முகவரியாயிருந்தது. முதலும் கடைசியுமான தனிமைப் பயணம் - சந்தோஷப்பயணம் அதுதானே?

'என்ன மருமவளே... இன்னுமா குளிச்சிட்டிருக்க? எங்க பரம்பரைல தாலி கட்டின மறுமாசமே உண்டாயிருவமே... டாக்டர்கிட்ட காட்டணுமா உன்னை?'

'ஏனாம்? ஆம்பளைங்களையும் டாக்டர் கிட்ட காட்டலாமே...?'

-தவறி விழுந்தன கேலி வார்த்தைகள். அவற்றில் ஏதோ துர்தேவதை தொத்திக் கொண்டிருந்தது போலும். அவளுக்கு விளையாட்டுத் தனமானது - அவருக்கு விஷமானது. கருமைச் சாயலோடு ஜனித்த அந்த வினாடியில் சகலத்துக்கும் முற்றுப்புள்ளி விழுந்தது. வாழ்க்கை அதற்கப்புறம் - நகராமல் ஸ்தம்பித்து உறைந்து விட்டது. முகமுறிவும், மனக விலகலும், பாதாளப்பிளவும் வாழ்க்கை முறை என்றானது. அப்புறம் எல்லாமே அற்றுத்தான் போனது. பிறத்தியார் கண்ணுக்கு வித்தியாசம் தெரியாத இல்லறம். கம்பீரமும், கனத்த குரலும், கண்ணுக்குக் கண் தொத்திக் கொள்ளும் சிரிப்பும் தவிர வேறேதும் கண்டிராமல் பழகும்ஆளைத் தப்பாய் நினைக்கவும் யாருக்காவது முடியுமா என்ன? இந்த நிமிஷம் வரைக்கும் எனக்கும் அவருக்கும் மட்டுமே தெரிந்த ரகசியப் பனிப்போர். பனிக்கத்திகள், தனிமையில் வேலியாய்ச் செருகப்படும். மூணாம் மனித நடமாட்டத்தின் போது அருபக்கத்திகளின் இருப்பு அவர்களுக்குப் புரியாது. மூணாம் உயிருக்குத் தெரியாது. இந்த ஜென்மம் வரைக்கும் கத்தியோடே சுவாசம் நகர்ந்தாயிற்று. இல்லறம் நடந்தாயிற்று.

இந்த மனுஷனைக் கட்டிப்போட, காலைப் பிடிக்க, மடியை நனைக்க, மீசை இழுக்க, ஒரு புழுபூச்சியையாவது பெற்றுப் போட்டிருந்தால் எரிமலை வெடிப்பு தவிர்க்கப்பட்டிருக்குமோ என்னமோ? ப்ச, என்ன பண்ண? மூச்சுக் காற்றைப் பங்கு வைக்க, முந்தானை இழுக்க, மார்பைச் சப்ப, மடியை நிரப்ப என்று ஒரு ஜீவனும் ஜனிக்கவில்லை. சிக்கென்று பூட்டியவயிறு பூட்டியேதான் இருக்கிறது. அவரின் ஆண்மைக்கான கத்திக்குத்து தானே இது?

பலதும் யோசித்தபடி போர்த்தியிருந்ததை நகர்த்தி அவரின் கை விரலை இறுக்கிப் பிணைத்துக் கொண்டாள் சரசுவதி. மெதுவாக நீண்டேயிருந்த விரலை நீவிவிட்டாள். முதல் ராத்திரியில் எனக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுத்து, என்னுடைய கால் பிடித்துச் சொடக்குப் போட்ட புண்ணிய ஆத்மா இவர்... எந்த மனுஷன் பொண்டாட்டி காலைப் பிடிப்பான்? எல்லாமே ஆணவத்தின் உடன்பிறப்பாகத் தானே அலைவான்கள்? யோசிக்காமல் விட்ட வார்த்தைதானே எனக்குச் சத்ரு ஆனது? ஹ்ும். பார்க்கலாம் அடுத்த ஜென்மத்திலாவது வார்த்தைகளை அளந்தே பேசவேண்டும்...

அவரின் மூக்கில் கையை ஓட்டினாள் சரசுவதி. மீசை குத்தியது. மனுஷனின் நெஞ்சுரத்தை வெளிப்படுத்திய மீசை. போட்டோவில் கூட இந்த மீசைதான் கம்பீரமாய்க் கண்ணைக் கட்டிப் போடும். அவரின் புகைப்படம்தானே ஒரே துணை? தாம்பத்யத்தின் தனிமை யுத்தத்தை, நீண்ட பொழுதுகளைக் கழிக்கவும், நிமிஷங்களைத் தள்ளவும், நாள்களை வெல்லவும் அவளிடமிருந்த ஒரே ஆயுதம் புகைப்படம் தானே? கல்யாணத்தன்று எடுத்தது. மாலையும் கழுத்துமாய் சரசுவதி மீது இடித்து, அவர் நெருக்கி நின்றபடம். கறுப்பாய்க் கூர்மீசையும், நெற்றி நிறையத் திருநீறு பட்டையும், கதர்வேட்டி சட்டையுமாய் நெகுநெகு என்ற உயரமும் நேரிலேயே நிற்பது போன்ற படம்... அதோடு கெஞ்சுவாள், கொஞ்சுவாள். குலவுவாள், உலவுவாள். மீசையைக் கிள்ளுவாள். மார்பைக் குத்துவாள். அவர்மீது புகைப்படத்தில் வீசும் கல்யாண வாசனையை முகர்வாள். அவரை மடியில் போட்டுக் கொள்வாள். அவரின் மடியில் தன்னைப் போட்டுக் கொள்வாள். எல்லாமே ஒருவழிப்பாதை என்று தெரிந்தும் புகைப்பட விளையாட்டு. இது மட்டுமாவது எனக்கு வாய்த்ததே என்கிற ஆதங்கம். கோபம், ஆற்றாமை, வெளிப்படுத்தும் தாம்பத்ய விளையாட்டுகள்.

அதே மாதிரியான ஒருவழிப்பாதைதான் இப்போதும் சாத்தியமாகி இருக்கிறது. லேசாகச்சரிந்து அவரின் இடுப்பை அணைத்துக் கொண்டாள் சரசுவதி. யப்பா... நரம்பை ஊடுருவும் சில்லிப்பு அவளுக்குள் இடமாற்றம் ஆனது. முப்பத்து மூணு வருஷத்துக்கு அப்புறமான ஸ்பரிசம். இளமை தொலைத்து, தாபங்கள் கலைத்து, மெல்லிய நரை முடியும், கண்ணோரத்தில் காக்காய்ச் சுருக்கமுமாய் முதுமையின் படையெடுப்பு துவங்கியிருக்கும் பொழுதுகளிலான ஸ்பரிசத்தில் - கிளர்ச்சிகள் இல்லைதான். ஆனாலும் ஒரு பரவசம். பரபரப்பு. இவர் என்னுடையவர். இவரின் ஒவ்வொரு அணுவும் எனது என்பதான உரிமைப் போராட்டத்துக்கு அந்த அணைப்புதான் பதிலான மாதிரி

இருந்தது. முப்பத்தி மூணு வருஷத் தோல்விக்குக் கிடைத்திருக்கும் ஆறுதல் அணைப்பு. போதும். கடைசி சுவாசம்வரைக்கும் இந்த அணைப்பே போதும். அவரைத் தொட்டாயிற்று. சுண்டுவிரல் கூடப் பட்டிருக்காத தாம்பத்ய தாகம் தீர்ந்தது. ராவாய்ப் பகலாய் வடித்த கண்ணீருக்கும், குருதிக்கும், காத்திருத்தலுக்கும் கிடைத்த ஸ்பரிச அறுவடை. மனசு தளும்பியது சரசுவதிக்கு. நாடிநரம்பெல்லாம் நடுக்கம். புல்லரிப்பு. எச்சிலைக் கூட முழுங்க முடியாத பரிதவிப்பு. இந்த ஜென்மத்துக்குப் போதும் என்பது மாதிரி இறுக்கியதும் கண்-தானாகச் செருகியது. முப்பத்திமூணு வருஷத்துக்கு முந்தைய முதலிரவு நிம்மதியோடு.

இருட்டைக் கொஞ்சம் கொஞ்சமாய் விரட்டிய அதிகாலை படாரென்று சொடக்குப் போட்ட ரீதியில் - வெள்ளை வேட்டியாய் வெளிச்சத்தை விரித்தது. ஊரின் முகம் தூரத்திலேயே தெரிந்தது. வண்டி நுழைந்ததுமே, மண்வாசனை மூக்கைத் துளைத்தது. தாமிரபரணியின் தாய்மைத் தழுவலில் தலையோடு காலாய் அவரிடம் சிலிர்ப்பு ஓடியது மாதிரி சரசுவதிக்குத் தோன்றியது. இருக்கவே இருக்காது என்று புத்திக்குப் புரிந்தும், நினைப்பை நகர்த்த முடிகிறதா என்ன?

வண்டி நிற்கும் முன்பே - வாசலில் மனிதத் தலைகள். மனிதத் தளைகள். முதலில் ஓடிவந்தவள் அவள் தான். எத்தனை வருஷமாய்க் காதுவழி கேட்ட உருவம்... முதல் தடவையாக - இப்போதுதான் நெருக்கமாய்ப் பார்க்கிறாள் சரசுவதி. இத்தனை வருஷமும் மனசில் வட்டியும் முதலுமாய்ச் சேர்ந்திருந்த துவேஷமும், கோபமும், கசப்பும், ஏமாற்றமும், எரிச்சலும் பீறிட்டுக் கிளம்புமோ? கைக் குண்டாக வெடித்துச் சிதறுமோ? சரசுவதியிடமிருந்து சீரழிக்கும் அம்புகள் கிளம்புமோ?

எல்லோரின் கண்களிலும் எதிர்பார்ப்பு மிதந்தது. சரசுவதியைக்கூட அந்த எதிர்பார்ப்புதான் வழிநடத்தியது. அரங்கேற்றத்துக்கான அந்த நிமிஷத்துக்கான காத்திருத்தலில்தான் - கண்ணாடி மாதிரி மனசு நழுவி நொறுங்கியது சுக்கு நூறாக.

''ஐயோ அக்கா... இப்பிடி ஆயிருச்சே... ரெண்டு பேரும் அனாதையா நிக்கோமே...''

அவளின் மாரடிப்பில் - மளுக்கென்று உள்ளுக்குள் ஏதோ ஒன்று முறிய - முகத்தைத் திருப்ப முடியவில்லை சரசுவதியால். அவளை மார்போடு அணைத்துக் கொண்டாள்.

"தனியாவா போனீஹ மெட்ராஸுக்கு? தனியாளாவா ராத்திரி முழுசும் பிரயாணம் பண்ணீஹ? ஐயோ அக்கா... என்னா பயம் பயந்தீஹளோ? என்னையும் அழைச்சுட்டுப் போயிருக்கலாமே... கடைசியாய்ப் பார்த்திருப்பாரே என்னையும்?"

பயமா? எனக்கா? எதற்காக? என்ன பயம்? நீ புழுவாய் அவர் பக்கத்தில் நெளியும் நிலை இல்லாத அவரின் அருகாமை வேண்டித் தானே - தனியாகவே சிகிச்சைக்கு அழைத்துப் போய், அழைத்து வந்திருக்கிறேன்? தனிமை. தனிமை. தனிமை. நீ காவுகொண்ட என் தனிமை. என்னவரும் நானுமான ஏகாந்தத் தனிமை. போகவர இரண்டு முறை பயணத்தில் கிடைத்த தனிமை. பேசியதும், படர்ந்ததும், முத்தம் பொழிந்ததும், மூர்க்கமானதும் ரெண்டு முறையுமே நான்தான். முதல்முறை உணர்வில்லாத அவருக்கு... வரும்போது அதைவிட மோசமாக. ஆனாலும் தவமிருந்த ஏகாந்தத் தனிமை... எனக்கான பொழுதுகளெல்லாம் இவள் அனுபவிக்க என்று பட்டாஎழுதித் தராத குறையாகப் பிடுங்கப்பட்டனவே. தொலைத்த அந்தப்பொழுது கிடைத்துவிட்டது. அந்த நிமிஷத்துளிகளின் நழுவலில் என் பெயரும் என் முகதரிசனமும் தானே சொட்டின? சுகம். பரசுகம். பரமசுகம். தனிமை. ராத்திரித் தனிமை. இறுதி நிமிஷத் தனிமை. பயணத் தனிமை. நானும் அவருமான உலகம், பிறஜீவன்களின் ஊடுருவல் இல்லாத தனிமை. நான் மட்டுமே பேசி, ஸ்பரிசித்து, முத்தமிட்டு, தலைமுடி கலைத்து, உதட்டில் விரல் ஓட்டி, மார்புமுடியில் கையால் விளையாடி... எல்லாமே ஒருவழிப் பாதைதான். அதனாலென்ன? என்னவரோடு பயணத்தில் எனக்கென்ன பயம்? அவர் - அவர்தானே எந்தமாதிரி நிலையிலும்?

புலம்பலைத் தாண்டி அவர்மீது விழுந்து அணைத்து அவள் அழுததைப் பார்த்தால் - பொறாமையாகக் கூட இருந்தது. எத்தனை முறை ரெண்டுபேரும் பரஸ்பரம் தின்றிருப்பார்கள்? எனக்கு மறுக்கப்பட்ட அணைப்புகளும், முத்தங்களும், சில்மிஷங்களும் விளையாட்டுக்களும் கிடைத்திருக்குமே... பாவி, கொடுத்து வைத்த பாவி, எத்தனையெல்லாம் அனுபவித்திருப்பாய்... எப்படியெல்லாம் சுகித்திருப்பாய்... என்கிற நினைப்பை உதறமுடியவில்லை. அந்தரங்கம் பற்றி நினைப்பது தப்புதான் என்பது தெரியாதா பாவி மனசுக்கு? அநாகரீகம் தான் என்பதும் தெரியாதா பாவிமனசுக்கு? ஆனாலும் தப்ப முடியவில்லை. முதலை மாதிரி மனசைக் கவ்வி விழுங்கியது நினைப்பு.

''அக்கா... நா என்ன பண்ணுவேன்? மரியாதையா ஊருல நடக்க முடியாதே... ரெண்டு புள்ளைங்களை வச்சுக்கிட்டு என்ன பண்ண? நாண்டுகிட்டுச் சாகவேண்டியதுதா... உங்களை மாதிரி தலைநிமிந்து நடக்கவா முடியும்? மருவாதியா இருக்கவா முடியும்?''

மாரடித்தாள். பயம். ஜீவன பயம். கௌரவம் குறித்தான பயம். சொடக்குப் போட்டு அழைக்கப்பட்டு விடுவோமோ என்பதான பயம். இது நாள் வரை, முப்பத்தி மூணு வருஷமாய் சரசுவதியைக் குடைந்த ஜீவபயம் - நிமிஷமாய் - அவளின் மனசுக்குக் குடியேறியது. இத்தனை வருஷமாய் அணுஅணுவாய் வளர்ந்திருந்த வெறுப்பும் பூகம்பமாய் நொறுங்கிப் புதைந்தது. உள்ளுக்குள் ஏதோ ஒன்று முறிந்தது. குருதி கசிய ஆரம்பித்தது சரசுவதிக்கு. நானாவது தனிக்கட்டை. அவள்? இவ்வளவு பெரிய பிரபஞ்சத்தில் வெளியே சொல்லிக் கொள்ள முடியாத உறவுநிலை. ரகசியத் தாம்பத்யம். பூமிப்பரப்பின் ஒவ்வொரு அங்குலமும் மனிதர்களின் சஞ்சாரம் தான் என்றாலும் என் உரிமை என்று யாரையும் புள்ளிகுத்திக் காட்ட முடியாத கையறு நிலை. இந்தத் தோள் என்னுடையது. இந்த விரல்கள் என் கண்ணீரைத் துடைப்பவை. இந்த மார்பு என் சோகம் தாங்கும் சுமைதாங்கி என்று சொல்ல முடியாத அனாதை ஜீவனம். உலகம் முழுமையிலும் உரிமை இல்லாமல் அந்தரத்தில் ஊசலாடுகிறாள். எனக்குத் தனிமை நரகம் - கௌரவத்தையாவது மிச்சமாய்க் கொடுத்திருக்கிறது. இவளுக்கு? இவளுக்கு வாய்த்த இல்லறம்?

பக்கத்தில் நிற்கும் ரெண்டையும் பார்த்தால் அவரைச் சின்னதாய்ப் பிடித்துவைத்த மாதிரி இருந்தார்கள். இவர்கள் - அவரின் நீட்சிதானே? எனக்கும் அவளுக்கும் தான் ஆள்பிரிவினையே தவிர - இவர்கள் அவரின் முழுமைதானே?

இவர்களின் தப்புக்குப் பிள்ளைகளுக்குப் பிரம்படியா? பெண்மைக்கேயான தாய்மை இளகலில் முழுசுமாய்க் கரைந்து போனாள் சரசுவதி.

''இந்த சந்தர்ப்பத்துல 'வா'ன்னு அழைக்கக் கூடாதுதான். இப்ப அழைக்கலேன்னா - நா மனுஷியாயிருக்கிறதுல அர்த்தமே இல்ல... ம்... ம்... உள்ள வா...''

சரசுவதிக்குள் முப்பத்துமூணு வருஷமாய்க் குடியிருந்த அவளின் எதிரியை அவளது வார்த்தைகளாலேயே கொன்று போட்டாள். வார்த்தைகள் வாத்சல்யம் சுமந்தன. சோகத்திலும் கூடச்சில சமயம் உறவுகள் ஜனிக்கலாம்தானே? உறவு ஜனிக்கக் கட்டில் மட்டும்தான் சாஸ்வதமா என்ன? பாடைகளும் கூடத்தானே...? ◎

# அப்பா வாசனை

இன்றைக்காவது அவன் வருவானா? தினமும் - நூற்றுக்கணக்கான முகங்களில் அவனுடையதைத் தேடித்தேடி அலுப்பாயிருந்தது மணிக்கு. நிதமும் நூறு ரூபாய் கூலியாமே. நிஜமாகவா? அப்படியானால் மாசம் மூவாயிரமா? அது போதுமே. அம்மாவின் கடுதாசிக் கண்ணீருக்கு வழிகிடைக்குமே...

''பாஞ்சு நாளா நடவு இல்ல. கூலி இல்ல. வூட்டுல நொய்யரிசி கூட இல்ல. மிச்சமிருந்த சீமெண்ணெய் தீந்து, ரெண்டு நாளாப் பொழுது எறங்கினாவுட்டு, வூட்டுல இருட்டுத்தான். இந்தக் கடுதாசி கூடக் கடன் சொல்லி வாங்கினதுதான். உன் அக்காவும் தங்கச்சியுமாப் பசியும் அழுகையுமா இருக்காளுங்க. உன்னைத்தான் நம்பிருக்கோம். பொங்கல் கடனைத் திருப்பலேன்னு - மிராசு கழுத்தைப் புடிக்கான். வட்டி ஏறிடுச்சாம். தவணையா - அக்காவ அனுப்பச் சொல்லுதான் பரதேசி. தெரு நாயி. ஐநூறு ரூவா பணம் அனுப்பு. பசிக்குது ரொம்ப. எம்புட்டு நாளுக்குத்தேன் தண்ணியே குடிக்க? பணம் அவசரம். அப்பா நு வழி காட்டுவாரு. சௌக்கியமா இருக்கியா மணி?'

கண்ணீரால் குளிப்பாட்டிய கடிதத்தின் கடைசியில் இவனுக்காக மூன்று வார்த்தைகள் - அம்மா கரிசனம் பூசி. பத்துவயசுச் சின்னப் பையனின் தோளில் மூன்று பெண்களின் கவலைச் சுமை. கண்ணீர்ச் சுமை. பசிச்சுமை.

தகதகவென்று எரிந்தது அடுப்பு. அகலமான வாணலியின் வெளியே பரவிய தீப்பிழம்பு - மணியின் கையைப் பதம்பார்த்தது. எண்ணெய் காய்ந்து கடுகு வெடித்தது. வேகவைத்த அஞ்சுகிலோ கொண்டைக் கடலையைப் பாத்திரத்தோடு தூக்கி வயிற்றை எக்கிப்பிடித்து வாணலியில் போடுவதற்குள் - மூச்சு இற்றுப் போனது. வாணலிச் சூட்டின் புகை - மேகமாய்ச் சுழன்று மேலே கிளம்பியது. நாலைந்து கடுகு தெறித்துக் கண் எரிந்தது. புகைச்சூடு அடித்து - முகமே வெந்து

போன மாதிரி காந்தியது மணிக்கு. இவன் வயசுப் பொடியனுக்கு இந்தச் சூடு ஜாஸ்திதான். இதுமட்டுமா? இந்தச் சுண்டைக்காய் வாழ்க்கைக்குள்ளாக அவனுக்குக் கிடைத்த காயங்களின் சூடும் ஜாஸ்திதான்.

'பீச்லதான் வேலை. கூவ வேணாம். சுத்தவேணாம். சுளுவா முடிஞ்சுரும். கைமேல நூறு ரூவான்னாரே... எம்புட்டு சொகம்...' கிறங்கினான் மணி. ஒரு நாளைப் போல் - பீச் முழுசும் சுற்றிச் சுற்றிச் சுண்டல் விற்பதற்குள் - ஆடு சதை வீங்கிக் கன்றிப் போகும். நீட்ட மடக்கமுடியால், கால் முட்டி வலி பின்னி எடுக்கும். வென்னீர் ஊற்றி, மருந்து தேய்க்க நாதியில்லாத அனாதையாய் அலையும் தனிமை ரணம் அவனுக்குள்.

ரெண்டடி உயரக் கோட்டை அடுப்பு மீதிருந்த வாணலி எட்டாமல் - கட்டை விரலால் எக்கி, எம்பி, அழுந்தி நின்று கரண்டியால் சுண்டலைக் கிளறுவதற்குள் கை இற்றுப்போனது. கைப் பிடித்துணி நிமிஷமாய் நழுவ - கை - வாணலியை அழுத்திப்பிடிக்க, சுதாரிப்பதற்குள் உள்ளங்கையும், விரலும், வழண்டு போயின. மேலும் கிளற முடியாமல் - குனிந்து மடங்கிக் குத்த வைத்தான் மணி.

''என்னலே? சுண்டலைப் பொரட்ட முடியாம - ஐயாவுக்கு ரெஸ்ட்டு கேக்குதோ?''

புலியின் உறுமல்.

''ரெஸ்ட்டு இல்ல மொதலாளி. கை பொத்துடுச்சு...''

''ஆமாலே. கை பொத்துக்காத அடுப்பு வேலை ஒண்ணு கண்டுபுடிக்கேன். வேலை கேக்கறப்ப - சிரிப்பாண்டியா வர்றீக. சேந்தப்புறம் - சூடு, காந்தல்னு சால்ஜாப்பு. எந்திரிலே...''

காலால் எத்தினார். தடுமாறி எழுந்தான் மணி.

''நத்தையாட்டம் சுணங்கறியே? ஓடுலே. முழுசும் வித்துட்டு வரணும். விக்கலேன்னு மிச்சம் கொண்டு வந்தன்னா - அம்புட்டுதான். கூலி கெடையாது. ராவுக்குச் சோறும் கெடையாது. ம்... ம்... வெரசாப் போடு டேக்ஸால. கூட நாலு தரம் பீச்சைச் சுத்து. இதெல்லாம் ஒரு சோலியா? குளுகுளுன்னு பீச்சு மணலு. ஓசி சினிமாவாட்டம் இளசுங்க. வேடிக்கை பாத்துட்டே வித்தாப் போறுமே? ம்? உடம்பு வணங்கி உழைக்கணும்டா... தண்டச் சோத்துப் பயலே...''

முதலாளித்துவத் தொந்தியை அசைத்து அசைத்து நகர்ந்தார் அவர்.

''மொதலாளி... ஒரு ஐநூறு ரூவா. அம்மாக்கு முடையா இருக்காம். அவசரம்...''

''உனக்குக் குடுத்தா - எனக்கு முடையாயிரும்லே. ஏன்டா... கேணப்பயலா நானு உனக்குக் கடன் தர?ம்?''

வார்த்தைகளைத் தூக்கி எறிந்து போனார் அவர்.

வாயே திறக்காமல் - 'தம்' பிடித்து வாணலியை இறக்கினான் மணி. சுண்டல் முழுசும் விற்காததால் - நேற்றுராத்திரியே பட்டினியைத் தின்ன வைத்தார் முதலாளி. இதுவரைக்கும் பத்துத்தரம் தண்ணீரே குடித்ததில் - கைகால் கொளகொள வென்று ஆட்டம் காட்டியது மணிக்கு. கண் இருண்டு பூச்சி பறந்தது. மயக்கமாய் வந்தது. சுண்டல் வாசனை தமட்டியது. மரக் கரண்டியால் அள்ளிப்பாத்திரத்தில் போட்டு, துருவிய கேரட், கொத்தமல்லித் தழை, மாங்காய்த் துண்டுகளை மேலே தூவினான். சுண்டலின் வெப்பம் - பளார் பளாரென்று முகத்தில் அறைந்தது.

''சாமி... அந்த ஆள் வரணும். புதுவேலைல கை நிறையச் சம்பாதிக்கணும். உனக்குப் பத்துப் பைசா உண்டியல்ல போடறேன். அந்த வேலை கெடைக்கணும் சாமி...''

வேண்டும் போது - கண்ணீர் பொங்கியது. சுண்டலில் வழிந்து - போதுமான உப்புச் சுவை சேர்த்தது.

திருவல்லிக்கேணியின் குறுக்குச் சந்திலிருந்த இருட்டு அறையிலிருந்து வெளியே வந்ததும் - சிலீரென்று காற்று முகத்தில் நிறைந்தது. ஐ.ஜி. அலுவலகம் பக்கம் ஸிக்னல் விழுந்ததும் சாலையைக் கடந்து ஓடினான் மணி. கையில் சுண்டல் பாத்திரம். மனசில் - அவனைச் சந்திக்கும் நம்பிக்கை. கண்ணில் தேடல் சுமந்து காலை விசிப் போட்டான்.

'எங்கே இருப்பான் அவன்? பிளாட்பாரத்திலா? மிளகாய் பஜ்ஜி கடையிலா? ராட்டினம் பக்கத்திலா?' மனசு தேடியது.

கவலையேயில்லாமல் காற்று அலைந்தது. சிவப்புக் கல் பதித்த நடைபாதை - வெப்பம் தெரியாமல் - இதமாயிருந்தது. இன்னமும் கூட்டம் சேரவில்லை.

'சனங்களைக் காணமே... இன்னிக்காச்சும் சட்டி காலியாவுமா? விக்கலேன்னா எங்கூலி? அம்மா, அக்கா பசி? பொங்கல் கடன்? சாமி. காப்பாத்து'

- கவலை மென்று தின்றது அவனை.

'ஆந்த ஆள் வந்ததும் - சரி சொல்லவேண்டியது தான். அஞ்சு நாள் சம்பாதிச்சு - அம்மாக்குப் பணம் அனுப்பனும்... சுண்டல் வித்துட்டே செய்துடலாம்னாரே... மவராசன்...'

அவனைத் தேடியபடியே 'அண்ணே சுண்டல்' 'அம்மா சுண்டல்' ஒவ்வொரு கும்பலிடமும் கெஞ்சலை விநியோகித்தான் மணி.

இருட்டிக் கொண்டு வந்தது. எந்நேரமும் வானம் கிழிந்து கொட்டக்கூடும். அங்கங்கே தூவின மாதிரி மனிதர்கள். வழக்கமான கூட்டம் - கால்வாசியாய்க் குறைந்திருந்தது. சுண்டல் சாப்பிடும் ஆசை - எல்லோருக்கும் மரத்துப்போனதோ என்னவோ ஒரு ரூபாய்ப் பொட்டலம் அளவுக்குக் கூடச் சுண்டல் குறையவில்லை.

எதிர்க்காற்றைக் கிழித்துக் கொண்டு, மணலில் புதையப் புதைய நடப்பது பிரம்மப்பிரயத்தனமாய் இருந்தது மணிக்கு. 'இன்னிக்கும் விக்கலேன்னா - நேராக் கடல்ல போயி விளுந்துட வேண்டியதுதான். மொதலாளிகிட்ட பேச்சு கேக்கமுடியாது. இதுக்கு மேல பட்டினி கெடக்கவும் முடியாது...' திரும்பத் திரும்பக் கண்ணீர் அவனைக் கரைத்துப் பார்த்தது. நைந்து நூலாய்த் தொங்கிய சட்டை நுனியில் துடைத்தான். சூரியனை வானம் தின்னத் துவங்கியது.

''என்னா மணி? இன்னிக்கும் போணியாவலியா?'' திடீரென்று அவனைத் தொட்ட ஆளில்லாத குரலால் தடுமாறிப்போனான் மணி. படாரென்று திரும்பியதில் கால் பிசகிக் கை நழுவி - சுண்டல் பாத்திரம் கவிழ்ந்து விழுந்தது. அத்தனை சுண்டலும் மணலோடு ஐக்கியமானது. சிதறியது.

''ஐயோ... அம்புட்டுதான் மொதலாளி கொன்னுடுவார்...'' மணியின் கண்ணீர்ப் பையும் உடைந்தது. மணல் சுண்டலை அளைந்தான்.

''கோவிந்தா கோவிந்தா... நூத்தியம்பது ரூபா சரக்கைத் தாரை வார்த்தியா? உன் கூலி புட்டுக்கிச்சா? இன்னிக்கும் ஈரத் துணிதானா?''

காற்று - குரல் மட்டும் சுமந்து வந்தது.

''எங்க? எங்க இருக்கீங்க?''

''இங்க. இங்க பாருப்பா...''

படகு மறைவிலிருந்து வந்தான் அவன். ஒடுங்கிய கன்னம். எலும்பும் வற்றிய உடம்பு. உள்ளங்கைக்குள் பொத்திய சிகரெட்டை உள்ளிழுத்து வெளியேற்றிய புகை. அவன் தான். அன்றைக்கும் கூட - விற்காத சுண்டலோடு அல்லாடிய போதுதான் கூப்பிட்டு ஆசை வார்த்தைகளை விதைத்தான் அவன்.

'பொழைக்கத் தெரிஞ்சுக்க தம்பி. அவனவன் புள்ளி வச்சா, தடுக்குல பாயறானுவ. கோலத்துல நுழையறானுவ. ரோடு போட்டுக் குடுத்தாக் கூட - நீ இம்புட்டு யோசிக்கறியே... யோசிச்சு வையி... நூறுரூவா கூலி மறந்துடாத...'

என்று அவன் வலையை விரிக்க விரிக்க - மணியின் கண்களும் ஆர்வத்தில் விரிந்தன. நிஜமாகவா?

நிஜம்தான் என்கிறான் இப்போதும். அவனின் பார்வை அதைச் சொல்லியது. 'நீ நிச்சயம் ஒத்துக் கொள்வாய்' என்பதான பார்வை. 'நிச்சயமாய் என் வழிக்கு வருவாய்' என்பதான பார்வை. 'உன் வறுமை என் கூலிக்கு மண்டியிடும்' என்பதான பார்வை.

மணலில் கொட்டின சுண்டலை அளைந்தான் மணி. பசி மயக்கம், முதலாளி பயம், அம்மா கவலையும் சேர்ந்து சுண்டலோடு கொட்டியிருந்தன. கண்ணீர் வழிந்து, தொண்டை வலித்தது. தலை கனத்தது. மனசு கிழிந்தது.

''கவலைப்படாதே. இனிமே உனக்கு நல்ல நேரம்தான். சுண்டலு வாழ்க்கை முடிஞ்சுபோச்சுன்னு வச்சுக்க. அம்மா - பணம் கேட்டிருக்கால்ல? இந்தா ஐநூறு ரூபா அட்வான்ஸ்...''

ஒற்றை ஐநூறு ரூபாய் நோட்டு - வரவேற்புப்பத்திரம் வாசித்தது.

''அம்மா கடுதாசி... எப்... எப்படித் தெரியும்?''

''சாமிக்குத் தெரியாதது கூட இந்த ஆசாமிக்குத் தெரியும். வாங்கிக்கோ. அடுத்த வருஷம் நீயே மொதலாளி ஆயிடணும்...''

நீட்டிய கையில் - குட்டிக் குட்டியாய் பாலிதீன் பொட்டலங்கள்.

''போலீஸ் காரனுங்க உன்னைத் தோண்டித் துருவிக் கேள்வி கேக்க மாட்டானுவ. நிதமும் சோலி, நிதமும் கூலி. சரக்கு உன்கைக்கு வரும். உன்கையிலேர்ந்தும் போயிடும். சுண்டல் டேக்ஸாவுல பொட்டலத்தை வச்சுக்கறதுதான் உன் வேலை... ம். இந்தா...''

வெள்ளைச் சர்க்கரையாய்ப் பொட்டலங்கள் மின்னின.

''எ... என்னது இது?''

''ம்? பிரசாதம். சொர்க்கத்துக்குப் போகப் பிரசாதம். எங்கூட சுமுகமா இரு. மூவாயிரம் சுளையாக்கெடைக்கும். அம்மாவ சொகமா வச்சுக்க. மிராசு கடனை ஒழிச்சுக் கட்டு.''

மணியின் தலை ஆடியது.

''எங்கப்பா - எனக்குத் தொளிலு கத்துக் குடுக்கலே. உங்கப்பாவும் உனக்கு ஏதும் தொளிலு கத்துக் குடுக்காமத்தான் பூட்டாரே... நா கத்துத் தாரேன்...''

சகலமும் தெரிந்தது அவனுக்கு.

வானம் முழுசுமாய் இருண்டுவிட்டது. எந்நேரமும் உடைப்பெடுக்கக் கூடும்.

''மீனு வித்த காசு நாறாது. கஞ்சா வித்த காசு கெறங்காது. சுண்டல் வித்ததுன்னு நூத்தியம்பது ரூபாவ முதலாளிட்ட குடுத்துரு. இனிமே ஹோட்டல்ல நல்லாச் சாப்பிடு. இந்தா...''

சட்டைப் பையில் ரூபாயைத் திணிக்க வந்தான். மணிக்குக் கண்ணெல்லாம் காட்சியின் ஓட்டம். அம்மா, அக்கா, தங்கச்சி மூணுவேளை அரிசிச் சோறு திங்கலாம். கடனை அடைக்கலாம். குடிசைக் கூரை மாற்றலாம். நானுமே கூட நாலு சினிமா, பரோட்டா இப்படிச் சுகமாயிருக்கலாம்....

கனவுகள் சூல்கொண்டன.

''இந்தா. பொட்டலத்தைப் புடி, போலீஸ் காரங்கிட்ட புடிபட்டா - செத்தாலும் என்னைக் காட்டித்தரக் கூடாது...''

அழுத்தி வைத்து வியாபாரம் துவக்கினான்.

''நீயும் மாட்டிக்கக் கூடாது. நானும் மாட்டிக்கக் கூடாது. உங்கப்பாரைக் கும்பிட்டுக்க...''

அவனுக்குள்ளும் சில நம்பிக்கை விதைகள். கண்ணை மூடி முணுமுணுத்தான். சட சட வென்று மழைத்தூறல் - நிமிஷமாய்க் கடலை நனைத்தது. காதைக் கிழித்த இடிச் சத்தத்தில் - அப்பாவின் குரல் இறங்கி வந்ததாய்ப் பட்டது மணிக்கு. சரம்சரமாய் இடியும், மின்னலும், மழையும்.

''சரக்கு பத்திரம். ஓடியா, மரத்தடில நின்னுக்க...''

ஓடினான் அவன்.

கள்ளச் சாராயம் விற்றுப் போலீஸால் பிடிபட்ட அண்ணனை - நாய் மாதிரி தரதரவென்று இழுத்துப் போனதை ஊரே வேடிக்கை பார்க்க, அதிர்ச்சியில் உறைந்து இவனின் மடியில் உயிரை விட்ட அப்பா சொன்னது - வானத்திலிருந்து மழையோடு இறங்கியது.

''நாறத் தொளில்ல சம்பாரிச்சுக் கஞ்சி ஊத்தறதை விட - ஒருவா வெஷம் குடுத்திருக்கலாம். சொகமாச் சாகலாம்...'

தப்பான அரிசி தின்றதால் - வாய்க்கரிசிக்குப் போன அப்பா. என் அப்பா. தொண்டை அடைத்தது மணிக்கு.

'நீ தொழிலு கத்துத்தரல்ல... எந்தத் தொழிலு வேணாம்னுதான் கத்துத் தந்தியே...'

பசியும், கண்ணீரும் நிரந்தரமாகும். பரவாயில்லை. நாளைய சூரியன் ஏதாவது சேதி கொண்டுவரும். வழிகாட்டும்.

''சீக்கிரம் ஓடியா... சரக்கு பத்திரம்...''

''ம்ஹீம் நான் வரல்ல...''

''பைத்தியமா புடிச்சிருக்கு? கஷ்டம்லாம் விடிஞ்சுரும்...''

''ஆனா - மனசு கஷ்டப்படும்...''

வெற்றுப் பாத்திரத்தோடு வேறு திசையில் ஓடினான் மணி. சுண்டலோடு, பொட்டலங்களும் மணலில் புதைந்தன.

மணி உடம்பு முழுசும் நனைந்தது - அப்பா வாசனையோடு பெய்த மழையில்.... ●

# தீ நாக்குகள் சரசுவைத் தின்றபோது...

தீயின் நாவுகள் சரசுவின் பேனாவைத் துரத்திப் பிடிக்கப் பாய்ந்தன. பேனாவைத் திறக்கும் போதெல்லாம் இப்படித்தான் ஆகிறது. மெதுவே வளரும் நீள நிழலாய்ப் பின்னால் தீயின் ஆக்டோபஸ் கரம் தவழ்கிறது. நகர்கிறது. பாய்ந்து வளைத்துப் பிடிக்கப் பார்க்கிறது. தப்பிக்கத் தப்பிக்கத் தொடர் பாய்ச்சல்.

நெருப்புக்குப் பசி. எப்படியாவது பேனாவை எரித்து விட வேண்டுமென்ற வெறி. தாகம். கோரப்பசி. சரசு கூட எல்லாவற்றையுமே நெருப்புக்குப் பறி கொடுத்திருக்கிறாள். சகலத்தையும் பலி கொடுத்திருக்கிறாள். பேனாவை மட்டுமாவது காப்பாற்றி விட வேண்டுமென்று பதைபதைப்பு அவளிடம். மிச்சமிருக்கிற ஒரே நிஜமுகம். ரொம்பவே நேசிக்கும் முகம் கூட....

முன்பெல்லாம் முருகன் மாதிரி, இராவணன் மாதிரி சரசுவுக்கும் சில எக்ஸ்ட்ரா முகங்கள் இருந்தன என்பது நிஜம்தான். ஒவ்வொன்றாய் வெட்டப்பட்டன. படுகின்றன. படும்.

இந்த வீட்டின் பல சாமான்களில்- வெட்டப்பட்ட இவளின் முகங்கள் ஒட்டிக்கொண்டன. ஒவ்வொரு மளிகை டப்பாவிலும் சரசுவின் முகம் இருக்கிறது - லேபிள் தாளாய். கடுகு டப்பா, மிளகாய்ப் பொடி டப்பா, மிளகு, வெந்தய டப்பாக்கள், புளி, ஊறுகாய், உப்பு ஜாடி எல்லாவற்றிலுமே.......

ஒவ்வொரு பாத்திரத்திலும் கூட.

அன்னக் கரண்டி, பால் கரண்டி, குழம்புக் கரண்டி, கீரை மத்து, அரிவாள் மணை, கத்தி, அரிவாள், சொளவு. கைப்பிடித் துணியின் பிசுபிசுப்பும் முடை நாற்றமும், அழுக்கும் அவளின் அடையாளமாய்த் தான் இருக்கின்றன. கைப்பிடித் துணி வாசம் சுமந்தே சகல வாழ்க்கையும் நகர்கிறது. பூஜை, புனஸ்காரம், குழந்தை, கட்டில் சகலமும். எந்நேரமும் - உடம்புத் தோலாய் இந்தத் துணியும் துணி

சார்ந்த வாசமும். எத்தனை சோப்பு போட்டாலும் போகாத வாசம். இவளோடு இரண்டறக் கலந்து விட்டது. ஆறாம் விரலான தீக்குச்சி மாதிரி.

உரசிப் பற்றவைக்கும் போதெல்லாம் தன் மண்டையிலேயே உரசிக் கொள்வது மாதிரிஇருக்கும். அடுப்பின் இரண்டு பர்னரும் இரண்டு கண்கள். நீள் செவ்வகமான இவளின் முகம். காலையில் கண் விழித்த வினாடியில் தரிசனம் ஆரம்பித்தால் பள்ளியெழுச்சி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் நாலுகாலப் பூஜையும் முடித்துப் பிரசாதம் விநியோகிக்க வேண்டிய கட்டாயம். அடுப்புச் சுழல். சமையல் புதைமணல். தப்பித்தலே இல்லாத ஆயுள் தண்டனை. உப்பும், புளிப்பும் துலாக்கோல் துல்லியமாய் இருந்தாக வேண்டும். தராசுக்கோல் முன்னே பின்னே மாறினால் குறைபாடுள்ள பொருளாலேயே இவளுக்கு அபிஷேகம். இவளின் தட்டிலும் வெறுமை தான் பரிமாறப்படும். அதனாலேயே கட்டாயக் கவனம். தினம் தினம் அடுப்பில் இவளும் வெந்தாள். வேறு வழியில்லை.

ஆய்ந்து ஓய்ந்து மூளையும் துவண்டு போகும் களைப்பு நேரத்தில் பேனாவைத் திறந்தால் ராக்காலப் பூஜைக்கு அழைப்பு வரும். கட்டிலின் நெருப்பு ஜுவாலை இவளை சுவீகரிக்கும். தலையோடு காலாய்ப் புடம் போடும். நெருப்பின் தீட்சண்யம் தீரும் வரைக்கும் எரிக்கும். இவளே ஆஹுதி. இவளே சாம்பல். தினசரி பூஜை-நித்தியக் கடமை.

கால் மிதியடி, துடைப்பம், வீடு துடைக்கும் துணி, பாத்ரூம், கக்கூஸ் கழுவும் பிரஷ், டெட்டால், சோப்புத் தூள் சகலமும் அவளின் பிரதிகள் தான். சரசுவின் முகமே அதிலெல்லாம் தெரியும். இவளின் சிறுதேவதை அவதாரம்.

பேனாவில் மட்டும்தான் இல்லை. எப்படியாவது அதில் ஒட்டிவிட வேண்டுமென்று இவளின் பிரயத்தனம். தாகம். தவிப்பு. ஒட்ட விடுவேனா என்கிற சவாலின் வீர்யத்தில் இன்னமும் எரிகின்ற தீநாக்குகள். இந்தத் தீயின் துரத்தல்கூட ஹோமத் தீக்கு அப்புறம்தான்.

'நல்ல வரன். முடிச்சிடலாம்....'

அவ்வளவுதான். புத்தகங்களையே புதை குழியாக்கிக் கல்யாண மேடை. கட்டாயமாய்க் கழுத்தில் தாலிச்சிலுவை. மூன்றாவது நாளில் உயிர்த்தெழுதல் இல்லாதது. கடைசிச் சுவாசம்வரைக்கும் முதுகெலும்பை முறிக்கும் சிலுவைச்சுமை.

ஹோமத் தீ கூடச் சிதைத் தீயாய் எரிவதாய்த்தான் சரசுவுக்குப் பட்டது. ஸ்மிருதிக் குச்சிக்குப் பதிலாக இவளின் எலும்பையே

உருவியெடுத்து உடைத்துப் போட்டு, ரத்தத்தை நெய் விழுதாக ஊற்றி முடிச்சுப் போட்டாயிற்று.

1. லட்சியத்தின் விலாசத்தைநெரிக்க....

2. சிந்தனையின் நீள அகல விசாலத்தை நெரிக்க.....

3. கதை, கவிதை, ஓவியம் என்றெல்லாம் கனவுப் பெண்ணாக வளர்சிதை மாற்றம் பெறாமலிருக்க....

மூன்று முடிச்சுப் போட்டுத்தூக்குத் தண்டனை நிறைவேற்றம். அந்த வினாடியிலிருந்தே சுவாசம் மட்டுப்பட்டு, ஓரளவு மனசும் உடம்பும் கூட ஸ்மரணை அற்றுத்தான் போனமாதிரி இருந்தது.

பாலும் பழமும் தின்றவன், வாய் நிறையத் திணித்துக் கொண்டு, 'அதையெல்லாம் கொண்டுபோய் உடைப்புலபோடு. கனவுலேர்ந்து நிஜத்துக்கு வா...' என்று இவளைத் தின்றான். நிதர்சனத்தை நிர்வாணமாக்கினான். குரூர நிஜம். நரக நாவுகளின் தீண்டல் உச்சி முதல் பாதம் வரை.

வண்ணங்களைக் காதலித்த சரசுவுக்கு அப்புறமாய் உதயங்கள் கறுப்பில் மட்டும்தான். இவளின் வானவில் கூட நீர்த்துப் போய், மங்கிப்போய், இறப்பின் முந்தின கட்டம் மாதிரி நோஞ்சானாய்த்தான் இருக்கிறது.

'பெயிண்ட்டா வாங்கி அடுக்கறாடா....அந்தக் காசுல நாலு மளிகைச் சாமான் வாங்கிப் போட்டா வயிறாவது ரொம்பும்.'

மேலிடத்து உத்தரவின் பேரில் சரசுவின் தூரிகை செத்துப் போனது. ஒவ்வொரு மயிரிழையும் இவளைத் துரத்திய நெருப்பு ஜுவாலைக்குக் காலை உணவாக, மதிய உணவாக, இரவு உணவாகப் படையலிடப் பட்டது. வண்ணங்களை மொத்தமாய்க் கொட்டிக் குழைத்துச் சாக்கடையில் ஊற்ற, அந்தக் குழம்பிய, உருவமில்லாத அழுக்குவர்ணம், தொலைந்த தன் முகத்தின் பிரதிபலிப்பாய்ப் பட்டது சரசுவுக்கு.

அதேமாதிரிதான் வலைப் பின்னலும்.

'காசைக் கரியாக்கணுமின்னே சங்கல்பமா? இதைப் பின்னி மாட்டாமத்தான் சுவரெல்லாம் கோவிச்சுக்குதாக்கும்? தூக்கிப்போடு நூலெல்லாம். பின்னல் போடற நாழியில் பரணை ஒழிச்சுப் போடு. ஒட்டடை அடி. புண்ணியமாப் போவும்...'

என்றானது உத்தரவு.

ஒவ்வொரு க்ரோஷா நூல்கண்டாய் இவளின் முகத்தில் வழிந்து, கழுத்தில் இறங்க-உறவுக் கும்பல் ரெண்டு பக்கமும் நின்று கயிறு இழுத்ததில் நாக்கு வெளித் தள்ளி, கண் முழி பிதுங்கி அவளின் அந்த முகமும் செத்துப் போனது.

'ஃப்ளாட்ல என்னாத்துக்குக் கோலம்? கோலப் பொடிக்குப் புடிச்ச கேடு. பைசாவைக் கண்டா என்னா குஷியோ உனக்கு?'

ரங்கோலி வண்ணப் பொடிகளில் விஷம் கலக்கப் பட்டது. எல்லாமே கறுப்பாயின. கறுப்புப் பொடிகள். கறுப்புக் கோலங்கள். மாவுக்கோலம் என்று கொத்திய கோழிகள் விஷப்பொடி தின்று ஒவ்வொன்றாய்ச் செத்து விழுந்தன.

ஏதாவது கேட்டால், வாக்குவாதம் பண்ணினால் மொழியின் நாலாந்தரச் சாக்கடை வார்த்தைகள் அவளைச் சூழ்ந்து இம்சைப்படுத்தின. நாற்றமடித்து மூக்கைத்துளைத்தன. குடலை உருவி வெளியே போட்டன.

அந்தப் பாரதியைத்தான் நையப் புடைக்க வேண்டும்.

அவனால்தான் இத்தனை பிரச்னையும். தூக்கமும், விழிப்பும், சமையலும் மையலுமாய் நிம்மதியாய் இருந்தவளைக் கெடுப்பதற்கென்றே அவதாரம் எடுத்தானோ? இருப்புக்கும் இறப்புக்கும் அதிக வித்தியாசம் இல்லாமல் இருந்தவளை- விழிக்க வைக்கிறேன் என்று புலம்ப வைத்துவிட்டான். அவனின் புதுமைப் பெண்ணைக் குப்பையில் போட வேண்டும். விழிப்பதற்கும்கூட - மற்றவர்கள் விட்டால் தானே?

ஒவ்வொரு இமையிலும் ஓர் உறவு. கணவன் ஓர் இமையில், குழந்தை ஓர் இமையில், மாமியார் மாமனார் ஓர் இமையில், அடுப்பும் கட்டிலும் ஓர் இமையில் இறுக்கிப் பிடித்துத் தொங்கும்போது எப்படிக் கண் திறக்க? இற்றுக் கீழே விழுவது மாதிரி, இமையெல்லாம் சுமையின் ஆகர்ஷணம்.

'எனக்கு வழி இல்லம்மா. மூச்சடைக்குது. எனக்கே எனக்கான சுவாசம் காணாமல் போயிடுச்சும்மா. எனக்கான சுவாசம் தீர்ந்து போயிடுச்சும்மா. எனக்கான காத்து- காலியாப் போயிடுச்சும்மா. நீ எப்படிம்மா சமாளிச்சே? எப்படிம்மா தப்பிக்க? எப்ப முடியும் இந்த நரகம்? எப்ப முற்றுப் புள்ளி கெடைக்கும்?

'மூச்சை நெரிக்கற புதைமணல்னு தெரிஞ்சேதான் அம்மாக்கள் மகளைத் தள்ளி விடறோம். தப்பித்தல் உண்டு. முற்றுப்புள்ளி நிச்சயம் உண்டு மகளே...'

'எப்பம்மா..?'

'நம்ம மூச்சு நின்னப்புறம். சரி. இதை விட்டுத் தள்ளு. ஏதாச்சும் விசேஷம் உண்டா?'

அம்மாக்களின் யுகாந்திரக் கவலை பாணத்தை எதிர்கொண்டாள் சரசு. ஜீபூம்பா என்றவுடன் குழந்தைகள் உதித்துவிட்டால் எவ்வளவு சௌகர்யம். மந்திரவாதியின் தொப்பியிலிருந்து புறாக்கள் ஜனிப்பது மாதிரி குழந்தைகளும் பிறந்தால்- என் நாள்கள் காப்பாற்றப்படும். பொழுதுகள் மிச்சமாகும். அவனுக்கென்ன? இறக்கிவிட்டுக் கலைத்ததில் களைத்துப் போய் உருண்டு படுத்துக் கொண்டான். சுமந்து சுமந்து களைப்பை மறந்து, களைப்பையும் சுமந்து, இடுப்பு நொந்து, நொய்ந்து பெற்றுப் பிழைத்து, உருண்டு,புரண்டு வருவதற்குள் பாதி வாழ்க்கை முடிந்து விட்டது. இப்போது இன்னுமொரு அடையாளம் கிளை பரப்பியிருக்கிறது.

குழந்தைக்கான கிண்டி, ஸெரிலாக் கோப்பை, சங்கு, டயாபர்ஸ், பீத்துணி, வசம்பு உரைக்கும் குழிக்கல், பாட்டில் கழுவும் நைலான் பிரஷ் எல்லாமே இவளின் முகத்தைச் சுமந்தபடி. குழந்தை முகத்தை விடவும் அதிகமாய் இவளுடையதைச் சுமக்கின்றன.

இதற்கப்புறமாவது- பேனாவில் முகத்தை ஒட்ட வைத்து விட வேண்டுமென்று சரசுவின் தாகம். ஒட்ட விடுவேனா என்கிற சவாலின் வீர்யத்தில் இன்னமும் வேகமாய்த் துரத்துகின்றன தீ நாக்குகள்.

இருள்- பூமியில் காலூன்றிச் சவாரி செய்யும் பொழுது, கொஞ்ச நஞ்சம் ஒட்டியிருந்த சக்தியைத் தேக்கி வைத்துத் தூக்கத்தை விரட்டியடித்துப் போனாவில் நம்பிக்கை ஊற்றி எடுத்தாள்.

அதற்குள்ளாகவே புருஷனின் உள்ளாடை-தத்தித் தவழ்ந்து நடந்து வந்து அவளுடையதை அழைக்கும் ரகசிய சப்தம்.

''ப்ச... மறுபடியுமா. ?''

நிமிஷத்து எரிச்சலில் தயக்கமாய் எழுந்தாள் சரசு. அந்தத் தயக்கம் கூடக் கோபமூட்டப் போதுமான காரணமாய் இருந்தது அவனுக்கு.

''என்னடீ கிழிக்கப் போறே? நீ எழுதாமத்தான் அவனவன் வீங்கிட்டுக் கெடக்கானா? இலக்கிய உலகம் ஸ்தம்பிச்சிடுதாக்கும்? தூங்கணும் வா...''

பேனாவைப் பிடுங்கித் தூர எறிந்தான். 'கிய்ய்ய்ங்' என்கிற கூவலோடு முனை முறிந்தது அது.

அவனின் வார்த்தைகள் வலிமையாய்க் கட்டிப் போட்டன சரசுவை. கைகால் முகம் அசைக்க முடியாத மாதிரி நேர்க்கோட்டுப் படிவமாய் அவள். மேலே முழுவதும் அவன். சிலுவையாய் அவள். ஆழமாய் உள்ளிறங்கும் ஆணியாய் அவன். எதிர்நீச்சல் போடத் தேவையான

பிராணவாயு முழுசையும் உறிஞ்சி எடுத்துக் கொண்டு சக்கையாய்த் துப்பினான் அவனை.

வலியில் சகலமும் மரத்துப் போனது அவளுக்கு. மறந்தும் போனது. குழந்தையின் அழுகையும் காதில் விழ நொறுங்கினாள்.

''ப்ச். அப்படி என்ன எதிர்நீச்சல் கேக்குது? ம்? இந்தச் ஜென்மத்துக்கு இம்புட்டுதான். விட்டுத்தள்ளு...போ...''

பாதாளத்தில் - நிமிஷமாய் மனசு நழுவ - தீ நாக்குகள் சரசுவை முழுதுமாய் எரித்து முடித்தன. அவளின் எல்லா எக்ஸ்ட்ரா தலைகளும் வெட்டப்பட்டு, உருண்டு காணாமல் போயின. இருக்கும் ஒற்றைத் தலையும் - உயிரில்லாமல், வெறுமையாய், காலியாய், உள்ளீடற்று....

களைப்பில் வாய் பிளந்து, காலை அகட்டிக் குறட்டை விட்டபடி அவன். இவளும். மூணாவதும் பிறந்து சப்பியபோது மார்பிலிருந்து காற்றுதான் வந்தது. அதற்கப்புறம் தீ நாக்குகள் இவளைத் துரத்துவதில்லை. நல்ல வரனான ஆளோடு, எந்தவித அரிப்பும், நமைச்சலும், எரிச்சலும், சொறியலும் இல்லாமல் சுகமாய் வாழ்ந்தாள் சரசு. வயிறு தளர்ந்து தொப்பையாகி, மார்பு தளர்ந்து முதுகு கூன் போட்டு, கையும், தொடையும் சதை போட்டு, 'புள்ளக்கி ஆசைப்பட்டாரு. மூணும் பொட்டையாப் போச்சி. இதுங்களைக் கரைசேத்து, ஒருத்தன் கையில புடிச்சுக் கொடுத்தாப் போறும். எங்ககாலம் முடிஞ்சிரும்..''

யுகயுகமான வசனத்தோடு - கும்பலில் அடையாளம் தொலைத்துக் கரைந்தே போனாள் சரசு. அடையாளம் தேடவும் முயற்சி செய்ய முடியவேயில்லை. வீட்டிலிருந்த சமையல் பாத்திரம், கடுகு டப்பா, கைப்பிடித் துணி எல்லாமே - அவளோடு - மக்கி, அழுக்காகி, நசுங்கி, நெளிந்து, உருவம் தொலைத்து....

மகள் ஆரம்பித்தாள்....

''பாரதியார் கவிதை வேணும்மா. போட்டி இருக்கு...''

''அடி செருப்பால...''

சரசுவின் வார்த்தைகள் - தனக்கென்று மகள் முகம் சுருங்க... அந்த பாரதியை நோக்கிப் படையெடுத்தன அவை... ◎

# அக்டோபர் - 2



ஒரு புழுவைப்போல மெல்லிசாய் மூக்கினுள் நுழைந்தது அந்த வாசம். சரசுக்கு ரொம்பப் பரிச்சயமான வாசம். பத்துவருஷப் பழக்க வாசம். முத்து - பக்கத்தில் வரும்போதெல்லாம் - அறைவது மாதிரி முகத்தை நசுக்கும் வாசம். சுவாசம்போல கூடவே இருக்கும் வாசம். அடிவயிற்றிலிருந்து குடலைப் பிய்த்தெடுத்து வாய்வழியே வெளியே தள்ளும் வாசம். அதிகமாய் ரெண்டு தரம் சுவாசித்துவிட்டால் தள்ளாட்டம் தானாகவே வரவழைக்கும் வாசம். கூலிவாங்கின முத்து - கையோடு அங்கே வந்து இரும்புக் கிராதிக்குள் கை நுழைத்து, வாங்கி, வாயில் கவிழ்த்துக்கொண்டு, ரத்தப்பொரியலை நொறுநொறுவென்று நொறுக்கித் தின்னும் வாசம். அந்த இடத்துக் காற்றுக்குச் சாசுவதமாய் இருக்கும் வாசம்.

கொஞ்ச நேரம் வெளியேயிருந்த கும்பலில் தேடினாள் சரசு. முத்துவைக் காணவில்லை. செல்லியையும்தான். எங்கே போனார்கள் ரெண்டு பேரும்? பதைபதைப்பு தளும்பியது அவளுக்குள்.

''தலை முழுகுய்யா. நாத்தம் புடிச்சத்த விட்டுத் தொலை. கூலிய முழுசாக் குடு. செல்லிக்கு வைத்தியம் பார்க்கலாம். ஒரு வேளையாச்சும் சோறாக்கலாம். வாய்க்கு ருசியா வெஞ்சனம் வச்சுத்திங்கலாம். எப்பப்பாரு உன் ருசி, உன் பசின்னு இருக்கியே, பொட்டப் புள்ளைக்கு நாளைக்கு என்ன ஜவாப்பு? நாலுகாசு சேத்து வக்க வேணாமா?''

''அட, எவடி இவ? பொலம்பாதடி. முன்னாடியே கடுதாசி அனுப்பித்தான் கடவுளு சோத்துக்கு வளி காட்டறானாக்கும்? நடக்கறது நடக்கும். நா முச்சூடும் கலவை போட்டு ஒடம்பு நோவுது. ஒரு வாயாச்சும் ஊத்தினாத்தான் வலிபோவும்...''

சரசுவின் - பத்துவருஷப் புத்திமதிப் பேச்சைக் கேட்காமல் பாட்டிலோடு இன்னமும் ஒருவாய் ஊற்றிக் கொள்வான் முத்து. சரசுவுக்கு ஆச்சர்யம் பின்னியெடுக்கும். அதெப்படி - நாற்றமும் வீச்சமும் நெருப்புக் கங்காக எரியும் திரவத்தை அமுதமாய் நினைத்து, முழுங்க அத்தனை பேரும் நாயாய் அலைகிறான்கள் என்று.

அதுவும் தவிர அவனுக்குத்தான் வலியா? அவனுக்குத்தான் உடம்பு நோவா? அவனுக்குத்தான் வேதனையா? இவளுக்குக் கிடையாதா? காலையில் ஆறுமணிக்குத் தொடங்கி, தொடர்ச்சியாக ஐந்து வீடுகளில் பாத்திரம் கழுவி, வீடு பெருக்கித் துடைத்து, துணிதுவைத்து, கடை கண்ணிக்குப் போய்ச் சகலமும் பண்ணி, ரெண்டுமணி வாக்கில் குடிசைக்குத் திரும்பி, ஒரு மணிநேரம் சொந்த வீட்டு வேலை செய்து, வீடுகளில் தந்த மிச்சம் மீதியைக் கலவையாய் உருட்டி - மூலையில் சுருண்டிருக்கும் செல்லிக்குப் பதறப் பதறத் தந்து, தானும் ஒருவாய் அள்ளிப்போட்டு, மறுபடியும் மூணுமணிக்குப் போய் ஐந்து வீட்டுக்கும் ரெண்டு குடம் தண்ணீர் எடுத்து, மூணு மாடி ஏறி இறங்கி ஊற்றி வீடு திரும்பும்போது - சூரியன் கூடக் களைத்துப் போயிருக்கும். உடல் நோவு, ஜுரம் என்று 'அக்கடா' என்று உட்கார முடியாது. அத்தனை வீட்டுக்காரர்களும் துளைத்தெடுத்துவிடுவார்கள். உடம்பைப் பற்றிய பிரக்ஞையே இல்லாமல் ஓடும் சரசுவுக்கு வலி கிடையாதா? முறுக்குப் பிழிவது மாதிரி உடம்பைப் பிழிந்தெடுக்கும் நோவு கிடையாதா? இத்தனை ரோதனையும் பொறுத்துப் பிழைப்பது எதற்காக? செல்லிக்காகத்தானே. அந்தப்பிஞ்சுக்காகத்தானே? கழுகுகளிடமிருந்து அந்தப் பெண்குஞ்சை மானமாய்க் காப்பாற்ற வேண்டுமென்ற பதைபதைப்புக்காகத்தானே? அவனது வலி மட்டும் ஏன் சாராயம் கேட்கிறது? தெனாவெட்டு திமிருக்குப் பெயர், வலியா?

சேதி சொல்லியனுப்பிய ஆட்கள் - யாருமே வெளியே வந்து முத்துவைப் பற்றி சரசுவுக்குப் பதில் சொல்லவில்லை. கடையின் ஒதுக்குப்புற வாசலைப் பார்த்துக் கண் பூத்துப்போனது சரசுவுக்கு. மகளை அழைத்துக்கொண்டு எங்கே போய்த் தொலைந்தான்? இது என்ன புதுப் பழக்கமாய்ச் செல்லியைக் கூட்டிப் போயிருக்கிறான்? என்கிற இந்த நிமிஷத்துக் கோபத்தில் - கையில் இடுக்கியிருந்த ஆஸிட் பாட்டில் பெரிய இடைஞ்சலாயிருந்தது.

சம்பளத்தைக் கொடுத்து - ஜாஸ்தியாய் முப்பது ரூபாயைத் திணித்த வீட்டுக்கார அம்மாள் காலையிலேயே சொல்லியிருந்தாள்.

'சம்பளத்த பத்திரமா வையி. புருஷங்காரன் குடிக்கப் புடுங்கிட்டான்னு பொலம்பாதே. ஏற்கனவே வாங்கின கடனே ஆளை முழுங்குது. சரியா?' என்றவள் நினைவு வந்து சொன்னாள் 'மறக்காம ஆஸிட் வாங்கிக்கோ. நாளைக்குக் காலைல அஞ்சு மணிக்கெல்லாம் வந்துரு. நாளைக்கு ஒருநா லீவு. தலைக்கு மேல வேலை இருக்கு. பாத்ரூம், டாய்லெட்டெல்லாம் கழுவணும், ஒட்டடை அடிக்கணும்... மறந்துடாத...'

விடுமுறைக்கான வேலைப்பட்டியலை ஒப்பித்தாள். 'ஒரு காந்திதான் பொறந்தாருன்னு கஷ்டமாயிருக்கு. ரெண்டு மூணு காந்தி இருந்தா - ரெண்டு மூணு நாளு லீவு கெடைக்கும்...'

கழிவறைப் பணி அந்தம்மாவைப் பேசச் சொன்னது.

'லீவுன்னா - என்னால அக்கடான்னு சாயமுடியாதே! எல்லார் வீட்டுலயும் ஜாஸ்தி வேலை பின்னி எடுத்துரும்...'

'நீ வாங்கி வந்த வரம் அது...'

நடந்ததை நினைத்துப் பார்த்தாள் சரசு. வாங்கினவரம் சரியாய்த்தான் இல்லை. வருவோரும் போவோருமாய்க் கூட்டம் அதிகமாகிக் கொண்டிருந்தது. அவமானமாயிருந்தது அவளுக்கு. அத்தனைபேரும் தன்னைத்துளைத்துப் பார்ப்பதாய் அசூயையாயிருந்தது. கையிலிருந்த ஆஸிட் பாட்டிலைக் கையிடுக்கில் செருகிக் கொண்டு, கால்மாற்றி நின்று பார்த்தாள். செம்பட்டைத் தலைமுடியை வறட்வறட்டென்று தட்டிக் கோடாலி முடிச்சிட்டாள். குவித்திருந்த மணல் திட்டில், கால் ஓய்ந்து போய் உட்கார்ந்தாள்.

'செல்லியவுமா உள்ள கூட்டிட்டுப் போயிருக்கான் நாயி...?'

மனசு தேடியது. முத்துவை நினைத்தாலே முகம் ஜிவுஜிவுத்தது. சொந்த வீட்டிலேயே கன்னம் வைக்கும் திருட்டு நாய்... வாங்கின சம்பளத்தைப் பத்திரமாய் எங்கே முடிந்து வைக்க? ஒளித்து வைக்க? முத்துவின் கழுகுப் பார்வையிலிருந்து தப்புவதுமாதிரி எங்கே வைக்க? அரையடி ஓலைக்குச்சு வீட்டில் மறைப்புகளைவிட ஓட்டைகளும் விரிசல்களும்தான் ஜாஸ்தி. காலியான மண்பானை, அலுமினியச் சட்டிகள். ராத்திரி கட்டையைச் சாய்ப்பதற்கென்றே இருக்கும் குடிசையில் எப்படி ஒளிக்க? டிரங்க் பெட்டியில் வைத்த பணத்தை இப்போது பார்த்தால் காணவில்லை. எப்படியோ மோப்பம் பிடித்து எடுத்திருக்கிறான் முத்து. எப்போதும் மூலையில் சுருண்டிருக்கும் செல்லியையும் காணவில்லை. வயிறுமட்டும் பெருத்து, கையும் காலும் குச்சியாய், எட்டுவயசுக்கான வளர்ச்சியேயில்லாத செல்லியையும் காணவில்லை. தானாக வெளியே போகத் தெரியாத செல்லி, சோறு தின்பதும் தூங்குவதும் விழிப்பதும் தவிர வேறேதும் தெரியாத செல்லியைக் காணாது பதைபதைப்பின் உச்சம் சரசுவிடம்.

'யக்கோவ்... செல்லிக்கு பிஸ்கோத்து குடுத்தேனா, அவுக்கு அவுக்குன்னு தின்னுச்சு. அப்ப பாத்து உங்காளு வந்துச்சா? செல்லிய வெளீல இட்டுப் போறேன்னுச்சு. எங்கேன்னு தெரியல்ல...'

பக்கத்து வீட்டுக்காரி சொல்லியிருந்ததால் - வழக்கமான கடைக்கு வந்து காத்திருக்கிறாள் சரசு. பணத்தைத் திருடுவது சகஜம்தான்.

செல்லியைவெளியே அழைத்துப் போவதென்ன புதுப்பழக்கம்? உச்சபட்ச எரிச்சல் வார்ப்புபது சாகஸை. குப்பையும், நாற்றமுமாயிருந்த ஆட்களைத் தாண்டி கடைக்குள் போய்த் தேட லாமா என்றும் கோபம் சுறுசுறுத்தது.

''சரக்குக்குச் சொல்லி விட்டிருக்கியா? நீயாவே போய் வாங்கிக்க... அவமானமாயிருக்கா?'' பஜ்ஜிக்கடைக்காரி இளக்காரமாய்க் கேட்டாள். இவளின் பதைபதைப்பு பார்த்து இளக்காரம் அவளுக்கு.

''த்தூ... நா ஒண்ணும் நாறப் பொறப்பு இல்ல...'' மிளகாய் பஜ்ஜியைவிடக் காரமாய் வார்த்தைகளைப் பொரித்தாள் சரசு.

''இன்னா சரசு? இங்கருந்திருக்கா முத்துவை தேடுறியா?''

யாரோ குடிமகன் அடையாளம் கண்டு புண்ணியம் கட்டிக் கொண்டான்.

''ம்''

''எங்கூடத்தான் ஊத்திக்கிட்டான். இப்ப - குப்பம் தாண்டிப் போயிருக்கான். அங்கதான ஊறல்கெடைக்குது. கூட இட்டாந்தது யாரு? உம்மவளா? சோறு குடுக்கவே மாட்டீங்களோ? எலும்புந் தோலுமா கெடக்கா... ஆனா மூஞ்சி உன்னை மாதிரி களையா இருக்கு... வயசுக் காலத்துல கண்ணுல ஒத்திக்கலாம்...''

அவள் எதிர்பார்த்துப் பயந்த மாதிரியே இடி. கவலை காளானாய்ப் பூத்தது சரசுவுக்கு.

**ஊ**றலின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த முத்து, டம்ளரிலிருந்து திரவத்தைத் தொட்டுத்தொட்டு செல்லியின் நாக்கில் தடவினான். சப்புக்கொட்டி நக்கி நக்கி நாக்கை நீட்டியது செல்லி.

அவளுக்கென்ன தெரியும்?

ஏதோ ஒரு வித்தியாசமான சுவை. லேசான தித்திப்பு, சுர்ரென்று நாக்கைச் சுண்டும் காரம், கலவைச் சுவை. இன்னும் வேண்டுமென்று ஆசையாய் டம்ளரைப் பிடுங்கியது செல்லி.

''இன்னொரு கிளாஸ் ஊத்துய்யா... எம்மவளைப் பாரு, குடிச்சுக் குடிக்கறா... என் ரத்தம்கா(ர்)னே... சாராயம் புடிக்காமப் போயிடுமா என்ன?''

மறுபடியும் டம்ளரை நீட்டினான் முத்து.

''ம்மா... ப்பே... ப்பே...''

கைநீட்டிக் கேட்டது செல்லி. அதற்குள் கிறக்கத்தின் சாயல் அவள் கண்ணில். இதுவரை ருசிக்காத சுவைமயக்கம்.

டம்ளரில் வாங்கி அவள் வாயில் ஊற்றினான் முத்து.

''எனக்குப் போட்டியா வந்துருவா போலிருக்கே...''

சந்தோஷச் சிரிப்பு முத்துவிடம்.

தூரத்திலிருந்து பதைத்துத் தேடி ஓடிவந்த சரசுவுக்குள் பூகம்ப வெடிப்பு. தலையோடு காலாய்த் தீப்பற்றினமாதிரி காந்தியது. கண்ணுக்குள் நெருப்புக் கட்டையச் செருகினதுபோல் துடித்துப்போனாள்.

''யோவ்... உருப்புடுவியா நீ? கட்டைல போறவனே... நாசமாய் போ. பேதில போ. உனக்கொரு சாவு வரமாட்டேங்குதே... பாவி...''

படபடத்து ஓடிவந்து - செல்லியின் கையிலிருந்த டம்ளரைப் பிடுங்கினாள். திரவத்தைச் 'சளப்'பென்று முத்துவின் முகத்தில் வீசினாள். டம்ளர் பறிபோன வருத்தத்தில் ''ங்மா... ஙேமா...'' என்று வினோதமாய்க் குரல் எழுப்பியது செல்லி. அவளை வாரி எடுத்துத் தூக்கினாள்.

''த்தூ... நீயெல்லாம் ஒரு அப்பனாய்யா? பெத்த பொண்ணுக்கே ஊத்திக் குடுக்கறியே... நீ - ஒரு அப்பனுக்குப் பொறந்தவந்தானா...?''

சரசுவின் வயிற்றெரிச்சல் வார்த்தையாய்ப் பிரளயமெடுத்தது.

சேரிக்காற்றில் கலந்திருந்த கூவத்தின் நாற்றம் பழகின லாவகத்தில் நடந்தாள் சரசு. இருள் கூடையாய்க் கவிழ்ந்து விட்டது. ஹ ங்... ஹ ங்... என்று கொசுக்களின் ரீங்காரம். நாய்களின் மோப்பப் பின்தொடரல். நடக்கும்போதே - மனசு கொள்ளாத கவலை முத்துவுக்கு.

''நாளைக்குக் கடைய மூடிருவானுக நாசமாப் போறவனுக. காந்தி பொறந்த நாளாமே... அதுக்கு எங்க வயத்துல அடிக்கணுமா? கடைய என்னாத்துக்கு அடைக்கறானுவ அண்ணாவி? போலீசுங்க நாயா அலையும். அதுங்க கண்ணுல மண்ணு தூவிட்டுக் கள்ளச்சாராயம் வாங்கியாரணும். நா போனா சந்தேகப்படுவானுவ. அரெஸ்ட்டு பண்ணி உள்ள போடுவானுவ. ரவுஸா புடிச்சதுங்க. அதாங்காட்டியும் நம்ம செல்லிய இந்த லைனுல இளுத்துவுடறேன். எச்சி வடிச்சிட்டுப் பேந்தப் பேந்த முழிச்சிட்டு இது நின்னா - எந்த நாய்க்கும் சந்தேகம் வராது. அப்பன் குடிக்க பொண்ணு வாங்கியாரட்டுமே... ஹக்காங்...''

குழறிக்கொண்டே வார்த்தை விதைத்துத் தள்ளாடினான் முத்து. அவனுடைய கவலை அவனுக்கு. அவிழ்ந்த வேட்டியை அவன் இடுப்பில் சொருகி, கைத்தாங்கலாய் நடத்தினாள் சரசு. பேந்தப்பேந்த முழித்து கூடவே வந்தது செல்லி.

இதென்ன புதுப்பழக்கம் என்று கோபமும் வருத்தமும் பொங்கின சரசுவுக்கு. மகளுக்கு ஒருவாய் பால் வாங்கித் தராதவன் - சாராய ருசி காட்டுகிறானே?

''எம் மவளுக்கு ஏன்யா குடுத்தே? நீதான் செத்தொழியட்டும்னு தலைமுளுகிட்டேன். இந்த நரகத்துல கெடந்து அளுகிப்போ... செல்லிக்குக் குடுக்கிறியே என்னா புண்ணாக்கு?''

''த்தே பொத்திக்கிட்டுக் கெட. நீ வச்சிருந்த கண்டைக்காருவாய்க்கு - முழுப்பானையா குடுப்பானுவ? இம்மாத்தூண்டு ரெண்டு மடக்கு முளுங்க வைக்கறதுக்குள்ள உம்பாடு எம்பாடுன்னு ஆச்சு. சப்பிச் சப்பி குடிச்சா பாரு. மனசு கலீர்னு ஆடிப்போச்சி. எம்பொண்ணு. சாராய ருசி புடிக்காத இருக்குமா?''

நரகலை நக்குவதற்குப் பெருமைப்படும் நாய் ஜென்மம். தூத்தேறி. இவன் அப்பனா? அரக்கனா?

''இனிமே நா குடுக்கலேன்னாத்தான் கோலிச்சுக்குவா. கனவாட்டம் மொதக்கறா பாரு...''

ம். வாஸ்தவம்தான். இதுவரை இல்லாத சந்தோஷச் சிரிப்போடு, கண்ணில் கிறக்கத்தோடு வந்தது செல்லி. இது புதுச் செல்லி. சாக்கடைச் சுகத்துக்குப் பழகின புழு. சகதியில் சுகம் காணும் தவளைக் குஞ்சு. நாற்றத்தில் உயிர் வளர்க்கும் நரகஜென்மம். அப்பன் கழிசடையாவது போதாமல் - மகளையும் விஷத்துக்குப் பழக்குகிறானே? புதைமணலில் - மகளையும் இழுத்து விடுகிறானே? கடவுளுக்கே பொறுக்காது இது. பெற்ற தாய் வயிறு பற்றி எரிந்தது.

ரெண்டுபேரையும் குடிசைக்கு இழுத்து வருவதற்குள் மலையைப் புரட்டுவது மாதிரி துவண்டுபோனாள் சரசு. வழியெல்லாம் குப்பமே வேடிக்கை பார்த்தது.

''என்னடி சரசு? பொண்ணுக்கும் சாராயமா?''

''தொணைக்கு ஆளு சேக்கறானா முத்து? பொண்டாட்டி, பொண்ணு, புருஷங்காரன் மூணும் நல்ல செட்டுதான்...''

அத்தனை பேரும் எறிந்த வார்த்தைகளில் எரிந்தாள் சரசு.

முடிச்சுப் போட்டிருந்த கயிற்றை அவிழ்த்துத் தட்டிக் கதவு திறந்தாள் சரசு.

''இனிமே நீ மச்சுவீட்டுக்காரிதான் சரசு. உம்புருஷன் ஒனக்குக் காரு வாங்கித் தருவாம்பாரு. வீட்டு வேலையத் தலைமுளுவிடு. ராணியாட்டம் சொகவாசி ஆயிருவ...''

கால் நகராமல் - வாசலில் சுருண்டவன் - போதைக் கனவுகளைச் சரம் கோர்த்தான்.

''வயசாவுது, பாண்டுதூக்க ஏலாது. தள்ளாட்டமாக்கீது. கள்ளச் சாராயம் தான் தோதுப்படும். விக்கப் போறேன். போலீஸ்காரனுவ கைல மாமூல் அமுக்கிட்டு, அவனவன் கொளிக்கறான். நானும் பூந்துடப் போறேன். விக்கறதுக்கு செல்லிதான் லாயக்கு. ஒரு பய சந்தேகப்பட முடியாது. சுளுவாச் சம்பாதிக்கலாம். நாளைக்குப் பாரு, கூட்டம் மொய்க்கும். சுளுவா சரக்கு தீந்துடும். ஒரே நாள்ல பணக்காரந்தான். நாளைக்கு நானும் ஆரம்பிக்கப்போறேன். செல்லிதான் சாமி. போலீஸ்ல மாட்டிக்காம காப்பாத்தற சாமி. காசுடி இனிமே... பணம் தான்...''

கையைச் சுண்டினான் முத்து.

ஒருத்தரும் நாக்குப்போட்டுப் பேசமுடியாத மாதிரி மகளும் நானும் மானமாய் இருப்பதில் மண் அள்ளிப் போடுகிறானே? இந்த ஆளுக்குப் போதைப் பேச்சு, போதை தெளிந்த பேச்சு என்று கிடையாதே... உச்சக்கட்ட போதையிலும் - உள்மனசு சொல்வதை அட்சரம்பிசகாமல் சொல்வான்... இப்போது - சாராயம் விற்க வைப்பவன் - பணம் ஜாஸ்தி வருமென்று - நாளைக்கு மகளை வைத்து வேறுதொழில் பண்ணுவானே? சாக்கடைப் பன்னி.

பாட்டிலை மெதுவாய்த் திறந்தாள். நாற்றம் குப்பென்று வீசியது. வாந்தி வருவது மாதிரி குமட்டியது. இதையா? இதையா செல்லிக்குக் கொடுக்கிறான்? இதையா செல்லி மூலம் விற்கப் போகிறான்? இதை வைத்தா உயிர்பிழைக்கக் கனவு காணுகிறான்? இந்தப் பிழைப்பிலா வீடும் காரும் வாங்கித் தளுக்க ஆசைப்படுகிறான்? உடம்பு நெளிந்தது சரசுவுக்கு. இந்த மானம்கெட்ட பிழைப்பு தேவையா?

அமில பாட்டிலைத் திறந்தாள். அந்த மூடியைக் கழற்றும் போதே வயிறு பிசையும் நெடி மூக்கைப் பிசைந்தது. கையில் ஒரு துளி பட்டாலே நெருப்புக்கங்காய்த் தோலை அரித்துத் துவம்சம் செய்யும் அமிலம். வாயில்நுழைந்து, தொண்டைக் குழாயில் இறங்கி, உணவுக் குழாய் போய்ச் சேருவதற்குள் எத்தனை சவ்வுக்கோளங்களை எரித்துப் பொசுக்கிக் கூழாக்கிவிடும்? உயிர்ப்புள்ளியைச் சிதைத்துவிடும்? உள்ளங்கை நீளச் சாராயக் குடுவைக்குள் அமிலத்தைச் சரித்தாள். சரசு. சர்ரென்று சப்தத்துடன் பொங்கியது திரவம். பாட்டிலின் குறுகிய வாய்வரை ததும்பி நின்றது நுரை. குமிழிகள் அடங்கட்டும் என்று அதையே வெறித்துப் பார்த்தாள். சப்தம் குறைந்து குறைந்து, நுரையும் குறைந்து அமுங்கியது திரவம். அமிலம், சாராயத்துடன் சங்கமமாகியது.

''ஏய் குட்டி... செல்லிக்கும் தானும், நாக்கை நீட்டிக் கேக்கறா பாரு...''

காற்றை நாற்றப்படுத்தி, அழுகல் வார்த்தைகளால் கறைப்படுத்தி, தள்ளாட்டத்தின் விளிம்பிலிருந்தவனைக் கையால்மடக்கிப் பிடிப்பது சுலபமாய்த்தான் இருந்தது.

''இந்தாய்யா... வாயத்தொற, நானே ஊத்தறேன்...''

''புருசனுக்கே ஊத்திடுக்குடுக்கற பொண்டாட்டி! குடிச்சி வச்சவன்டி நானு, தெய்வம் நீ... எஞ்சாமி...''

கையெடுத்துக் கும்பிட்டவனின் வாயில் பாட்டிலைச் சரிக்கப் பார்த்தாள் சரசு. வித்தியாசமான நிறத்துடன் இருந்தது திரவம். உயிரின் நிறம், மானத்தின் நிறம்.

கையும் காலும் சுருண்டு, முதுகு வளைத்து, கர்ப்பத்துக்குள் இருக்கும் குழந்தை மாதிரி கிறங்கியவனை மடியில் தூக்கிச் சாய்த்தாள் சரசு.

''வாயத் தொறய்யா... இந்தா... நீகேட்ட சாராயம்...''

கட்டாயமாய் வாயைத் திறக்க வைத்தாள்.

அத்தனை போதையிலும் காக்கா குஞ்செனவாய் பிளந்தான் முத்து.

'நீ கெட்டுப் போனதைப் பத்திக் கவலையில்ல... எம் பொண்ணையும் நாறத் தொழிலுக்கு இழுக்கறியே... நீ இருந்தும் என்ன பிரயோசனம் அப்பன்னு பேரை வச்சிக்கிட்டு...'

வயிறெரிந்த கோபத்தில் மனசு குமுறியது. ஆசிட் சாராயத்தைத் துளித்துளியாய் அவன் வாயில் சரித்தாள் சரசு.

சூரசம்ஹாரம் சாமிக்கு மட்டும் தான் சொந்தமா என்ன? 

# மரத்தைக் கர்ப்பம் சுமந்தவள்...

"வெட்டாதேயேன் அம்மா என்னைக் காப்பாத்து..." தீனமான கதறல் கேட்டது. பெரிசு பெரிசாய்க் கையும் காலும் முளைத்து விஸ்வரூபமெடுத்துக் கை கூப்பிக் கெஞ்சுவது மாதிரி இருந்தது. இலைகள்-அப்படி இப்படியுமாய் அசைய, கிளைகள் வெறியாட்டம் போட்டது மாதிரி இருந்தது. மரத்தின் இலைகள் ஒவ்வொன்றுக்கும் வாய்முளைத்துக் கெஞ்சிக்கேட்டன. கிளைகளைக் கைகளாக்கிக் கும்பிட்டுக் கேட்பதுமாதிரியும் பட்டது. சலசல சப்தம் கூட 'சரசுவதிம்மா.. காப்பாத்துங்க...' என்பதான இறைஞ்சுதலின் எதிரொலியானது.

மொத்தத்தில் முப்பதடி உயரமான வேப்பமரம் அரையடியாய்க் குறைந்து உயிர்ப்பிச்சை கேட்பதாய்ப் பட்டது சரஸ்வதிக்கு. காதைத் துளைத்த குரலின் சோகம் - மனதை அறுத்துக் கூறுபோட - விலுக்கென்று உதறிப்போட்டு எழுந்தாள். காதை இறுக்கிப் பொத்தினாலும் கூடக் குரல் விடாமல் கேட்டது. ஹ்ருதயம் இயங்காமல் அப்படியே ஸ்தம்பித்த மாதிரி இருந்தது. மூச்சடைத்தது. அக்கடா என்று நீட்டிப் படுக்க முடியவில்லை. மனசு வலித்துக் கையும் காலுமாய் உதறிப் போட்டது. ஜன்னல் வழியாகக் குளுகுளுவென்று வீசின வேப்பமரக் காற்றிலும் வியர்த்துக் கொட்டியது. பொதுவாக அந்த ராத்திரிக்கு வேப்பங்காற்று சுகந்தமாய்த்தான் இருக்கும். அன்றைக்கு அப்படி இல்லை. இனி என்றைக்குமே இருக்காதோ என்பதான வேதனையும் மனசை அறுத்தது.

என்ன சொன்னார்கள் அவர்கள்? சாயங்கால வார்த்தைகள் அவளைக் கடித்துக் குதறிக் கூறுபோட்டன.

மரத்தை வெட்டவா? வேப்பமரத்தையா? உயிரோடு நிற்கிற மரத்தையா? இரும்புத் தூணாய்ப் பாறையின் உறுதியாய், தாயின் பாசமாய்க் குழைந்து நிற்கிற மரத்தையா? இந்தக் குழந்தையையா? இந்தத் தாயையா? ஓங்கு தாங்காய்ப் புசுபுசுவெனக் காயும், பூவும், இலையும், கொத்துப் பழமுமாய் உற்சாகம் காய்த்துத் தொங்கும்

மரத்தையா? இதுவெறும் மரம்மட்டுமா? இலை, மொட்டு, பூ என்று சர்வமாய் வியாபித்திருக்கும் இவளின் ஸ்நேகிதியும் தானே? காதில் ஒலித்த குரலின் சோகம் மனசை அறுத்துக் கூறுபோட - விலுக்கென எழுந்து உட்கார்ந்தாள். எழுந்து சில்லென்றிருந்த ஜன்னல் கம்பியில் முகம்வைத்துப் பார்த்தாள். மரம் - அவளையே பரிதாபமாய்ப் பார்ப்பதாய்த் தோன்றியது. ரெண்டு கண்ணோடும், புலம்பும் வாயும், பிச்சை கேட்கும் கைகளும் ஹீனமான குரலுமாய்த் தெரிந்தது.

வயிறு பிசைந்தது சரஸ்வதிக்கு. பிரசவ வலியின் சமானமான நோவு உடம்பில் வியாபித்தது. முப்பது வருஷத்துக்கு முன்னால் வேர் மண்ணோடு எடுத்து வந்த வேப்பங்கன்றை நட்டுப் பராமரித்துப் போஷித்து - ரெண்டு பெண் குழந்தையோடு மூணாவதாய் வளர்த்த நாட்கள் நினைவில் புரண்டன. விச்ராந்தியான ராத்திரி நிசப்தத்தில் இருபதடி தள்ளி நின்ற மரம் - 'கேட்டியாம்மா?' வருத்தமாய்க் கிசுகிசுத்த மாதிரி பட்டது.

வானத்திலிருந்த நிலவும், ஒற்றை நட்சத்திரமும் கூட இந்த வருத்தத்திலேயே பிரகாசமாய் இல்லாமல் மங்கலாய் ஒளிர்வதாயும் மனக்கிலேசம். மரத்தடியில் ரெண்டு மூணு நாய்கள் - இதுதான் மரத்தடியில் கழிக்கக் கூடிய கடைசி ராத்திரி - என்கிற புரிதலோடு பெரிசாய் ஊளையிட்டுச் சுற்றிச் சுற்றிவந்தன. பிச்சைக் காரர்கள், வழிப்போக்கர்கள் என்று ஒருகும்பல் நிச்சலனமாய்த் தூங்கியது. நாளைய தூக்கத்துக்கு இவர்கள் எந்த மரத்தடி தேடுவார்கள்? கவலை சரஸ்வதியைப் பூதாகாரமாய் அமுக்கியது. அவர்களின் தூக்கம் குறித்தான கவலையில் அவளது இமைகளின் தூக்கம் தொலைந்தது. மரத்தில் கவலையில்லாமல் தூங்கும் குருவி, காக்கா, அணில் இதெல்லாம் கூடு தொலைத்து - நாளை எங்கே போகும்? விஸ்வரூபக் கவலைகள்.

''நடு ராத்திரில அல்லாடற... தூங்கலியா?''

''காலைல ஆரம்பிச்சிருவாங்களே. என்னங்க பண்ணலாம்?''

அத்துவானக் காடு. நகரத்துக்கு மூக்கு முளைத்தது போலிருந்த பிரதேசத்தில் குடியேறினபோது - துணையாயிருக்கட்டுமென்று அந்த வேப்பங்கன்றை நட்டு வைத்திருந்தாள். தனித்தனியாய், தூரமாய் வீடுகள் கோபித்துக் கொண்ட மாதிரி பொட்டை வெளியில் ஒற்றை மரம். அம்மன் கோயிலும் அப்படித்தான்.

'நம்ம தெரு, ஊரு சகலமும் தழைக்கணும். நாமளே கோயில் கட்டலாமா?'

முதல் காசு சரஸ்வதி போட்டாள். ஒவ்வொருத்தரும் முடிந்ததைத் தந்து ஒவ்வொரு கல்லாய்ப் பார்த்து எழுப்பின கோயில். சரஸ்வதி

சொன்ன மாதிரியே ஊர் தழைத்தது. நாள் கிழமைகளில் பொங்கலும், படையலுமாய் ஆர்ப்பாட்டமாயிருக்கும். இன்றைய தேதி வரைக்கும் முதல் மரியாதை சரஸ்வதிக்குத்தான். இத்தனை ஏன்? அவள் - குழந்தைகளைப் பிரசவித்தது கூடக் கோயில் வாசல் மரத்தடியில் தான். ஆட்டோ, வாடகைக் கார் என்று வாகனம் கிடைக்காத அந்தக் காலத்தில் - ஓடிப்போய் வண்டி பிடித்து வருவதற்குள் - ரெட்டைப் பெண்களைப் பெற்று விட்டாள். அம்பாளுக்கான அபிஷேக நீரில்தான் - அம்மை வார்த்த குழந்தைகளுக்கு முதல்குளியல் செய்தாள். மகள்களின் கல்யாணம், வளைகாப்பு, பிரசவம் சகலத்துக்கும் மரமும், அம்பாளும்தான் துணை, சாட்சி சகலமும்.

இப்போது ஊர் முகமே மாறிவிட்டது. நிறைய வீடுகள். வாகனங்கள். மனிதர்கள். போக்குவரத்துகள். இத்தனை வருஷத்தில் முப்பதடி உயரமும், பதினைந்தடி அகலமுமாய் விரிந்துவிட்டது மரம். எல்லா நேரமும் காக்கா, குருவி, நாய்கள், மனிதர்கள், பூக்காரிகள், பழக்காரர்கள் - இப்படிச் சகலருக்கும் நிழல்வீடு மரம் தான். கோயிலும் அப்படியே. மரமும், மரம் சார்ந்த வாழ்வும், கோயிலும் கோயில் சார்ந்த வாழ்வும் தான் சரஸ்வதிக்கு. உணர்வு பூர்வமான பந்தம். கோயிலைப் பிரசவித்தவள் என்பதான மரியாதையில் - நல்லது கெட்டது சகலமும் சரஸ்வதியின் ஒப்புதலோடுதான்.

''என்னங்க பண்ணலாம்?''

''மரம்தானே? விட்டுரு, கோயிலு முக்கியமாச்சே...''

நிஜம்தானா? மரத்தை விடக் கோயில் அத்தியாவசியமாயிற்றே. ஊருக்கே காவல் தெய்வம் வேம்புலி அம்மன் தானே? மரம் தெய்வமாகாதே...

''மரம் மட்டும் தான் உசத்தியா? நான் உன் அம்மா இல்லையா?'' மரத்தடியிலிருந்த அம்மன் அசரீரியாய்க் கேட்பது மாதிரி இருந்தது.

அம்மா வீட்டுக்குப் போவதுமாதிரி காலை, மாலை ரெண்டு வேளையும் கோயிலுக்குப் போயாக வேண்டும் சரஸ்வதிக்கு. அபிஷேக நீரும், பிரசாதமும், குங்குமமும், பூவும் வாங்கினால் தான் அன்றைய விடியலுக்கு அர்த்தமிருப்பதாய்ப்படும். இத்தனை வருஷமும் - எத்தனை ஆயிரம் தரம் தரிசித்திருப்பாள் என்ற கணக்கு சரஸ்வதிக்கும் தெரியாது. அம்மனுக்கும் தெரியாது.

'எனக்கு நாலு பொண்ணுங்க' என்பாள். கேட்பவர் குழம்பினால் - 'பெத்ததுரெண்டு. நட்டுவச்சது கோயில் வாசல்ல. கும்பிட்டுவச்சது கோயில் கருவறைல...'' என்பாள்.

''கொஞ்சம் வாங்களேன் மரத்தடிக்குப் போயிட்டு வரலாம்...''

''இந்த ராத்திரிலயா?''

''ம். மகமாதிரி மரம். எந்நேரமானா என்ன?''

''ஏன் இப்படிக் குழைஞ்சுபோற? இந்த மரம் இல்லேன்னா இன்னொண்ணு. கோயில் இது ஒண்ணுதான...?''

பதில் சொல்லாமல் - மரத்தடிக்குப் பறந்தாள் சரசுவதி. அங்கிருந்த பெஞ்ச் கூட - இவளாகவே கைக்காசு போட்டுக் கட்டினதுதான். சில்லென்று கையை ஊடுருவியது பெஞ்ச் குளிர்ச்சி. உட்கார்ந்ததும் என்னவென்று புரியாமல் மனசு பொங்கிப் பொங்கி நொய்ந்தது.

காலையிலிருந்து பொங்கல் படைத்திருந்ததால் - அந்தக் கல் அடுப்பு வாசனை, பொங்கல் வாசனை, நம்பிக்கை வாசனை என்று கதம்ப மணமாய்க் கம்மென்றிருந்தது காற்றும், சூழலும்.

மரத்தை நீளவாக்கில் மடியில் படுக்கவைத்துத் தலை கோதிவிடுவது மாதிரி, இலைகோதி விட வேண்டும் போலிருந்தது. மடிபரபரத்தது. மார்பு குறுகுறுத்தது. முப்பதடி உயர மரத்தை போன்சாய் ஆக்கி, மடிக்குள் புதைத்துக்கொள்ள முடிந்தால் நன்றாயிருக்கும் போலிருந்தது. வேலியாய் மூங்கில் போட்டு, தலையெடுக்கும் வரை தினமும் தண்ணீர் ஊற்றி ஆசையை உரமாய்ப் போட்டாள். ஒவ்வொரு அடியாய் மரம் வளரவளர இவளின் சந்தோஷம் வளர்ந்தது நினைவு வந்தது. அதில் மொட்டு விட்ட முதல் வேப்பம்பூ, வேப்பங்காய் எல்லாமே ஞாபகம் இருக்கிறது. கசந்தாலும் கூட முதல் கொத்து வேப்பங்காயைக் கடித்துச் சுவைத்து முழுங்கிய கசப்பு-இந்த நிமிஷமும் நாக்கில் தங்கியிருக்கிறது.

'அம்மாடி... அம்மாடி... உன்னையா வெட்டிச்சாய்க்க? உன்னையா நிர்மூலமாக்க? எந்தாயி... எஞ்செல்லம்... நீதானே அம்மனுக்கே குடை. உன் காற்றைச் சுவாசித்துத்தானே அவளோட முகத்தில் கூட ஒரு ஜொலி ஜொலிப்பு. விடிந்தால் உனக்கு அஸ்தமனமா? நிஜமா? நிஜமாகவா?'

நாள் கிழமையில் - படையல் போடக் கூட்டம் வருமுன்பே சுத்தமாய்ப் பெருக்கித் தண்ணீர் தெளித்துக் கோலம் போட்டு மரத்தின் அடிப்பட்டையில் குங்குமமும், மஞ்சளும் அப்பி வைப்பாளே... இனி-இது கனவில் மட்டும் தானோ?

அழிக்கம்பி வழியாக சுரஸ்வதியின் பரிதவிப்பை வேடிக்கை பார்த்தாள் அம்மன்.

'அம்பாளுக்கு ஒண்ணுன்னா - நீங்கதான முதல்ல நிப்பீங்க. இதுக்கும் நீங்கதாம்மா. முதல்ல தொடங்கி வைக்கணும். வேப்பமரம் வேரோடி, கோயிலோட சுவரு பொளந்துக்கிச்சு. விட்டுவச்சா - கோயிலே

ஆட்டம் கண்டுக்கும். அதான்-மரத்தை வேரோட பொளந்தெடுக்கப் போறோம். அம்மனைக் காப்பாத்தறதுதானே முக்கியம்...?'

கேட்ட நாழியிலிருந்து - மனசுக்குள் இன்னமும் கூட அணுகுண்டு வெடித்ததன் அதிர்வு. புகைமூட்டம். அதிர்ச்சி. பிளவு. இறுக்கம். மயான அமைதி. தகிப்பு. தவிப்பு. அம்மா, தாயே... உன்னையா வெட்டப் போகிறார்கள்? உன் கையையா? உன் தலையையா? உன் முலையையா? உன் வேரையா? உன்னையா? உன்னையேவா? மரத்தைக் கண்ணுக்குள் ஸ்வீகரித்து நெஞ்சிலேயே கருண்டாள் சரஸ்வதி.

''ஏலேய் முத்து ரம்பம் நல்லா சாணை புடிச்சிருக்கேல்ல? தாம்புக் கயிறு வாங்கிட்டியா? முளை அடிச்சு நாலுபக்கமும் இழுத்துக்கட்டு. பக்கத்துக் கடை, வீடுங்க எதுவுமே சேதமாகப் படாது. சரியா? சோலி கச்சிதமா முடியணும்லே... ஒவ்வொரு துண்டும், நல்ல விலைக்குப் போவும். வயிரம் பாய்ஞ்ச மரம். வித்துவர்றதைக் கும்பாபிஷேகத்துக்கு வச்சுக்கலாம்...''

மரத்தின் மரணத்தைக் கணக்கு பண்ணினார்கள். இறப்பை வைத்துக் கும்பாபிஷேகத்துக்குப் பிள்ளையார் சுழி போடக் கனவு பண்ணினார்கள். கூலியாட்கள் - சகல உபகரணங்களோடு வந்திறங்கினார்கள் சூரியனுக்கு முன்பாகவே.

''உதவிக் கெல்லாம் ஆளுங்க வந்தாச்சா?''

''ஆமாய்யா...''

அதிகாலை நாலரைக்கே - கோயில் அதிகாரி, குருக்கள், கூலியாட்கள் என்று சூழ்நிலை பரபரப்பைச் சூட்டிக் கொண்டிருந்து.

''பூஜை ஒண்ணு பண்ணிட்டு, சோலிய ஆரம்பிச்சிடலாம்...''

முஸ்தீபுகள் மும்முரமாயின. இருளும் ஒளியுமாய்ப் புணர்ந்திருந்த அதிகாலை. குளுகுளுவென்றிருந்த காலைவேளைக்கு நேர்மாறாய்ச் சூடான அக்கினி வார்த்தைகள். சரஸ்வதியை எரிப்பது மாதிரி அவளை எதிர்கொண்டன. நீண்டகோடாலி, அரிவாள், கடப்பாறை, தடிமனான தாம்புக்கயிறு இன்னபிற தன்னையே குறிவைத்துத் தாக்கத் தயாராக இருப்பதாய்த் தோன்றியது அவளுக்கு.

''சரஸ்வதிம்மா வந்துட்டாங்க. கற்பூரம் காட்டுங்க. அவங்க ஆரம்பிக்கட்டும்...''

உபகரணங்களுக்குப் பூஜை. மரத்தின் அடித்தண்டுக்குக் குங்குமம் அப்பினார்கள். ஊதுபத்தி ஏற்றி வைத்தார்கள்.

''ம்... ம்... இன்னியோட கடைசி. இந்த மரத்துக்கு ஆயுசு முடிஞ்சு போச்சு. இன்னொரு மரம் வளர்த்துடலாம். நீங்களே நட்டு வைங்கம்மா. நமக்கப்புறம் வாரவக வளர்க்கட்டும்...''

சொல்லியபடியே நொறுக்கப்பட்ட சிதறு தேங்காய், தனது மண்டையில் நொறுக்கப்பட்டதாயிருந்தது சரஸ்வதிக்கு. தெறித்த இளநீருக்குப் பதிலாகக் குருதியே சிதறியதாகவும் பட்டது.

நாலுபக்கமும் முளையடித்துத் தாம்புக்கயிறு இழுத்துக் கட்டப் பட்டது. கூர்மையான கோடாலிக்குக் குங்குமம். அரிவாளுக்கு மாலை. மரத்துக்கு மஞ்சள் நீர்த்தெளிப்பு என்று முஸ்தீபுகள் பிரமாதமாயின.

வேம்புலி அம்மன் முன்னால் கும்பிட்ட கையும், பொங்கிய மனசுமாய் நின்ற சரஸ்வதிக்குள் ஆயிரம் பிரளயம். எரிமலை. வெடிப்பு.

என் நிழல் - எல்லோர் வெயிலையும் தாங்குகிறதே... மண்ணுக்கும் குடை நான் தானே? மரம் கெஞ்சியது.

என் வீடு முக்கியம்தானே? என் இருப்புதானே உங்கள் நிம்மதி? எல்லோரின் கண்ணீரும் கவலையும் என்தோளில்தானே? -அம்மன் வியாக்கியானம் பேசினாள்.

தீர்த்தமாக மரத்தின் ரத்தமும், பிரசாதமாகக் குறுக நறுக்கிய இலையும், அட்சதையாகச் சின்னத் துணுக்குகளாய் வெட்டப்பட்ட கிளையும் விநியோகிக்கப்படுவதாய்த் தோன்றியது. அதுவரைக்கும் சாந்த சொரூபியாய் உட்கார்ந்திருந்த வேம்புலி அம்மனின் கடைவாயில் - ரெண்டு சிங்கப்பல் வெளியே நீண்டு, நாலுகைகளிலும் வேப்ப மரத்தைத் தூக்கிப் பிடித்து உக்கிரமாய்த் தாண்டவம் ஆடுவதாயும் பட்டது. இதுஎன் வீடு என்பதான பிடிவாதம்.

வேப்பமரம் ரெண்டாய் மடிந்து முழங்காலிட்டு உட்கார்ந்து - உயிர்ப் பிச்சை கொடு தாயே எனக் கையேந்திக் கதறுவது மாதிரியும் பட்டது. இந்த மண் என்னுடையது என்று அக்கினித் திராவகம் வீசினாள் அம்மன்.

''வாங்கோம்மா... நீங்கதான் முதல்ல...''

சரஸ்வதியின் கையில் கூர்மையான கோடாலி தரப்பட்டது.

''வேற மரம் வளர்த்துக்கலாம்மா. தயங்காதீங்க. ஆகி வந்த அம்மன் தழைக்கணும். நாமளும் செழிக்கணும். ஊரும் அமோகமா இருக்கணும்...''

''ம். ஆரம்பிங்கம்மா...''

அத்தனை வாய்களும் உச்சரித்தன ஏக காலத்தில். கோடாலியைத் தூக்கிய சரஸ்வதியின் கைகள் குழைந்தன. நரம்புகள் சுண்டியிழுத்தன.

வியர்வைச்சுரப்பிகள் கடலாய்ப் பொங்கின. ஹ்ருதயம் - லப்டப் என்று துடிக்காமல் - சடாரென்று ஸ்திரமானது. நின்று போனதாய் உணர்ந்தாள்.

'நிஜமா? என் குழந்தையை வெட்டும் நேரம் வந்து விட்டதா? என் மகளைக் குருதிக் காடாக்கவா? என் மூத்தவளை நிர்மூலமாக்கவா?'

ம். ஆமாம். மரத்தைச் சாகடிக்காவிட்டால் அம்மாவின் கூரை நிர்மூலமாகும். அவளின் வசிப்பிடமும் ஈறலாய்க் கிழியும்.

''தயங்காதீங்கம்மா. நாழியாகுது. ஐயா... உங்க வீட்டம்மாவுக்குச் சொல்லுங்கய்யா. கையைப் புடிச்சி ஆரம்பிங்கய்யா...''

''சரசு. தயங்காதே. ஊரு நல்லதுக்குத்தானே பண்ற?'' அவளின் கையை இறுக்கிப் பிடித்துக் கோடாலியை உயர்த்தினார்.

''ம். போடு...''

''இல்... இல்லங்க. விட்ருங்க. முடியல என்னால. எம்மகளைக் கொல்ல முடியாது...''

அடிமரத்தை ஆதுரமாய்த் தடவிக் கொடுத்தாள். மேடுபள்ளமான மரப்பட்டையில் முகத்தை உராய்ந்து கொண்டாள். அந்த உராய்வு சுகமாயிருந்தது. இதமாயிருந்தது. அம்மனின் காலடி தராத சௌகர்யத்தைத் தந்தது. சுகம். பரமசுகம். சௌஜன்யத்தின் உச்சம்.

''கோயில் நிலைக்கணும்னு தானே பண்றோம்?''

''அதுக்காக ஆடுகோழி மாதிரி-பூவா நிக்கிற மரத்தைப் பலி குடுக்கணுமா?''

''ப்ச, என்ன சரசு நீ? தேவையில்லாத சமாச்சாரம்லாம் பேசிட்டு? கோயில் முக்கியமாச்சே. மரத்தை வேற இடத்துல கூட வளர்த்துக்க முடியுமே...''

''ம்ஹூம். வேற எடத்துல அம்மனைப் பிரதிஷ்டை பண்ணலாமே...''

''என்ன உளர்றே? புத்தி கலங்கிடுச்சா என்ன?''

''அம்மா... இதுதான் பொறுமையோட எல்லை. வருஷக்கணக்கா கோயிலுக்கு உபகாரம் பண்றவங்கன்னு உங்களுக்கு மரியாதை குடுத்தோம். இனிமே அவ்வளவுதான் ஏலேய். ஆரம்பிங்கலே... நேரமாகுது. வெத்து மரத்துக்காக அம்மனை அவமானப் படுத்தணுமா? ம்? வெட்டுங்கலே...''

ஆக்ரோஷக் கத்தலில் அதிர்ந்தது அதிகாலை.

''ம். வெட்டுங்க.... நல்லா வெட்டுங்க. ஆனா அரிவாள் முதல்ல என் உடம்புல இறங்கிட்டுத்தான் மரத்துக்குள்ள இறங்கும். நா இந்த மரத்தை விட்டு விலக மாட்டேன்....''

கைக்கெட்டிய தூரம் வரைக்கும் கையைக் கோத்து மரத்தின் அடிப் பகுதியை இறுக்கிக் கட்டிப்பிடித்தாள் சரஸ்வதி... அம்மனைவிடச் சிவுசிவு வென்று சிவந்து ஆக்ரோஷமாயிருந்தது அவளின் முகம்.

''என்னம்மா அழிச்சாட்டியம் இது? இத்தனை வருஷமா ஆகிவந்த அம்மனைக் கேவலப்படுத்தறீங்களே... என்ன பெரிய மரம்? எங்க நட்டு வச்சாலும் தான் வளருமே...''

''ஒரே வருஷத்துல வேற கோயில் கட்டலாம். ஒரே வருஷத்துல மரம் வளர்ந்துடுமா? நட்டுவச்சது தழைக்கறதுக்குப் பத்துவருஷமாகும். பதினைஞ்சு வருஷமாகும். அதுவரைக்கும் ஊரு வெயில்ல வாடணுமா? அம்மனை நம்பறவங்க உண்டு. தேவையே இல்லேன்னு சொல்றவங்களும் உண்டு. ஆனா... ஆனா மரம் நிஜம். கண்ணுமுன்னாடி உயிரோட இருக்கற நிஜம். அம்மன் இல்லாம ஊரு வாழ்ந்துரும். மரம் இல்லாம? சாமி கும்பிடாம இருந்துடலாம். சுவாசிக்காம இருக்க முடியுமா?''

நேற்றிலிருந்து அவளின் மனசைப் பிசைந்த வருத்தமெல்லாம் வார்த்தையாய் இறங்கின.

''மனுஷ சாதியும் தெய்வ சாதியும்தான் உசத்தின்னு நினைக்கணுமா? மர சாதிதான் எல்லாத்தையும் விட உசத்தி. சாமி நமக்கு நல்லது பண்ணும்னு எதிர்பார்ப்புல கோயிலுக்குவர்றோம். நம்ம குடும்பத்துக்காக. புள்ளைங்களுக்காகச் சம்பாதிக்கறோம். சேர்த்து வைக்கறோம். ஆனா மரம் சுயநலமே இல்லாம இருக்கு. நிழல், பழம், பூ, இலை சகலமும் சாதிசமயம் பார்க்காம தருது. தனக்குன்னு சேத்துவச்சிக்கல்லே. சந்ததிக்குன்னு சேத்துவச்சிக்கல்லே. அம்மனை வெறும் கல்லாவும் பார்க்கலாம். ஆனா மரத்துக்கு உசிர் இருக்கு. வளர்ச்சி இருக்கு. உணர்வு இருக்கு. அம்மன் உசத்திதான். மரம் அதைவிட உசத்தி. மரத்தோட இடத்தை ஆக்கிரமிக்க யாருக்குமே உரிமை இல்லை. அம்மன் உட்பட... அப்புறப் படுத்த வேண்டியது அம்மனைத்தான். வேற இடத்துல பிரதிஷ்டை பண்ணவேண்டியது அம்மனைத்தான். மரத்தை வெட்டினா-ஊரு மூளியாகும். ஊரு வறண்டு போகும். அம்மன் இல்லாமலும் ஊரு இயங்கும். மரம் இல்லாம ஜீவிக்குமா...?''

மரத்தைக் கட்டியணைத்து மரத்தோடு மரமாய்ச் சரிந்தாள் சரஸ்வதி. அவளைக் குறுக்கு வெட்டாய்க் கடந்து மரத்தைத் தீண்ட கோடாலிகளுக்குத் தைரியமில்லை. அப்போது வீசிகாற்றில் உதிர்ந்த வேப்பம் பூக்களின் நாவுகள் - சரஸ்வதியை அம்மா அம்மா என்று ஆயிரம்தரம் அழைப்பதாய்ப் பட்டது...

# கரீஷ்மா

அன்றைக்குத்தான் புதிதாக உலகம் கண்முன்னே விரிந்தது மாதிரி உணர்ந்தாள் கரீஷ்மா. நீண்ட விடுப்புக்கு அப்புறம் மனசு சமனப்பட்டதும் அலுவலகப் பயணம். புதிய பூமி, புதிய காற்று, புதிய வானம், புதிய சூரியன், புதிது, புதிது... எல்லாம் புதிது.

''நானேகூட இன்னிக்குப் புதுசாப் பொறந்த மாதிரிதான் இருக்கு...''

அவளையுமறியாமல் வாய்விட்டு வழுக்கி நழுவின வார்த்தைகள். வார்த்தைகளென்பது வக்கீலின் குறுக்குக் கேள்விக்குப் பதிலாகவும் உறவுக்காரர்களின் குற்றச்சாட்டுக்கு விளக்கவுரையாகவும் அலுவலகத்தில் ஒற்றைப்படைப் பிரயோகங்களாகவும் ஆகிப்போன சூழலில் - இன்றைய இந்த வார்த்தைப் படையெடுப்பு - ஒராயிரம் ஆழ்கிணறு அர்த்தத்தோடு.

தீர்ப்பு சொல்லப்பட்ட அன்றைய தினத்தில்கூடப் பீறிட்டுக் கிளம்பி, முட்டி மோதிய வார்த்தைகளை அமுக்கி நசுக்கிவிட்டிருந்தாள். ஜனிப்பதற்கு முன்பே கருச்சிதைவு மாதிரி, நரேன் அவளை நசுக்கிப் பார்ப்பதே வார்த்தையால்தான். குரூரமாகக் குதறுவான் வார்த்தைகளை அனுப்பி. அக்னித் திராவகத்தை ஊற்றுவான் - வார்த்தைகள் மூலமாக. எரிமலை வெடிக்க வைப்பான், வார்த்தைகளின் உக்கிரத்தால். கோபமும் ஆங்காரமும், எரிச்சலும் அவற்றால் கிளப்ப முடியாதமாதிரி நிச்சலனமாக அவள் இருப்பதுதான் - அவனை இன்னமும் உக்கிரமாக்கின, வக்கிரமாக்கின.

எங்கே, எது பிசகியது? தெரியவில்லை.

எங்கே, எது தவறியது? தெரியவில்லை.

இவளே சகலமும் என்று பித்துப் பிடித்தவன் மாதிரி சத்தியம் செய்துதான் இவளைக் கரைத்தான். 'நேற்றுகள் பற்றிக் கவலையில்லை. நாளைகளின் நேர்மை எனக்கு முக்கியம்...' என்று மூங்கிலாக இருந்தவளை - ஏதோ ஒரு பலவீன சமயத்தில் பெண்மன இளகலைக் குறிவைத்து இவளுக்கு வேலி கட்டினான். ஆனாலும் - நாய்வாலின் தலைவிதி சுருளல்தான் என்பது அப்புறம் புரிய ஆரம்பித்தது.

தலைவிதி சுருளல்தான் என்பது அப்புறம் புரிய ஆரம்பித்தது.

'ஒழுங்கா இருப்பேன்னீங்களே...?'

'இல்லியா? புருஷனா இல்லியா? புடவை, நகை, வீடு, ஏ.ஸி. கார்... இதெல்லாம் தரல்லியா?'

இதுவா? இதுமட்டும்தானா? இவற்றால் வீட்டை நிரப்பிவிட்டால் தாம்பத்யம் நிறைந்துவிடுமா? ஒருவருக்கொருவர் முழுசாக வேண்டாமா? உடம்புரீதியாக...? உணர்வுரீதியாக...? சகலமுமாக?

'வேணாம். விட்டுருங்களேன். நம்ம பொண்ணுக்கும் இப்படியாச்சுன்னா சும்மா இருப்பமா?'

'ப்சு. என்னடீ நீ? அஞ்சு வயசுப் பொண்ணுபத்திக் கதையளக்கறே? உன் பொசிஷன் பத்திதானே உன் கவலை? நீதான் நிரந்தரம். உன் இடம் ஸ்திரமாயிருக்கு. இதெல்லாம் பொழுது போக்குதான். முடிஞ்சவரை அனுபவிச்சுடணும். என் பாலிஸி அதுதான்...'

ஸ்திரமும் இடமும் குறித்தானதா அவளின் கவலை? நம்பிக்கை குறித்தல்லவா? நாய்வால் சுருண்டு கொண்டது. நிமிர்த்த முயற்சித்த இவளின் முகத்திலேயே பளாரென்று வால் அறைந்தது.

'இருட்டிருச்சே ரொம்ப. அப்பா வரல்லியாம்மா?'

'லீவு நாள்ல அப்பாவை வீட்டுல இருக்கச் சொல்லும்மா.'

'அந்த ஆன்ட்டி யாரும்மா? அப்பாவோட பைக்ல போறாங்க?

பிஞ்சு மொழியில் சாட்டையாக விளாசும் கேள்விகள். புரியாமலே சங்கடத்தைக் கர்ப்பம் சுமக்கும் கேள்விகள். உணர்வுகளின் தாக்கமின்றி, தூசியாகத் தட்டிப்போன அவனுக்குப் பதிலாக அவள் வலிசுமந்து எதிர்நோக்கிய கேள்விகள்.

அலுவலகத்துக்குள் நுழையும் போதே விதவிதமான பார்வைகள் அவளைத் தாக்குவதை உணர முடிந்தது. பூமராங் பார்வைகள், அவளின் கழுத்தில் மோதித் திரும்பிச் சென்றன. மெல்லிய சங்கிலி மட்டுமே அணிந்திருந்த கழுத்தைக் குறித்துக்கொண்டு - சேதி தேவைப்பட்டவர்களுக்கு விஷயத்தைச் சொல்லின. அன்றைக்குக் கழுத்திலிருந்து இறக்கியபோது கண்கள் இருண்டு, கைகால் வெலவெலத்துப் போனது. பத்து வருஷமாகப் பொதிந்திருந்தது அவளின் கழுத்துக்குள். கழற்றாமல் எல்லா நேரமும் அணிந்து அணிந்து கறுப்பாகக் கழுத்து வடம்கூட உண்டாகிவிட்டது.கழற்றிய உடனே பாலைவனம் மாதிரி - கழுத்து வெறிச்சோடிப் போனது. ஆனால், மனசுக்குள் ஓராயிரம் தாமரைகள் நெருக்கி அலையடித்தன. வண்டின்

ரீங்கரிப்போடு சோலைகள் குளுகுளுத்தன. தோள் சுமந்த மலையை இறக்கி வைத்த சுகம்.

''செயினை நகர்த்து. கழுத்துல பவுடர் போடணும்...'' ஒப்பனைப் பெண்மணி சுவாதீனமாகத் தானே நகர்த்தினாள். பவுடர் ஒத்தினாள். சுரப்பஞ்சினால் ஃபௌண்டேஷனைக் கழுத்தில் பூசினாள். 'அதைக் கழட்டிடலாம். ஆனா, இந்த வடம் மறையாது. நெதமும் உறுத்தும்...'

அவளின் வார்த்தைகளும் நிஜம்தானே? இழப்பெல்லாமே பெண்மைக்குத்தானோ? கிளம்பும் சமயத்தில் கூட - உள்பாவாடை அணிகையில் வரிவரியாகப் பச்சை குத்தினதாக அடிவயிற்றில் ஓடின பிரசவவரிகளைத் தடவினாள். அவன் தின்று தீர்த்த என் இளமை - யௌவனம் திரும்பக் கிடைக்குமா? தளர்ந்த மார்பும் வரிபடர்ந்த வயிறும் பருத்த தொடையும் கழுத்து வடமும் இந்த ஜென்மம் முடியும் வரைக்கும் கூட வருமே...

அவனுக்கென்ன நஷ்டம்? உணர்வு ரீதியாக? உடம்புரீதியாக? ம்ஹூம்... ஒன்றுமேயில்லைதான். அவமானச் சிலுவைகள் எல்லாமே பெண்ணுக்குத்தானே? அடையாளச் சீரழிவுகளும் பெண்ணுக்குத்தானே? அகம்சார்ந்து, புறம்சார்ந்து - சகல அடையாளமும் கழற்றி, வெறும் நானாக, ஒரு பிண்டமாக, பிரஜையாக, வெற்றுக் கோளமாக, அடையாளப் பூச்சு இல்லாமல் உலவ முடியுமா? இதுதான். இதுதானே எனக்கெதிரான எமோஷனல் பிளாக்மெயில்? அவனுக்கு என்ன இருக்கிறது? தாலியா? செந்தூரமா? உடல் அடையாளமா? எதுவுமே இல்லாமல் தானே அவன் - மேய்ச்சல் நிலங்களை விஸ்தாரமாக்கிக் கொண்டே போகிறான்?

ஒப்பனை அறையிலிருந்து வெளியே பார்த்தாள். அலுவலக வாசலின் மின்விளக்கு வெளிச்சத்தில் அவனின் கார் வந்து நின்றது. கல்லூரி மாணவனின் துள்ளலோடு இறங்கிய அவன் - துடிப்பும் குதூகலமுமாகப் பாய்ந்து - அந்தப் பக்கக் கதவைத் திறந்தான். அவளின் கையை மென்மையாகப் பிடித்துச் சந்தோஷமாக நடப்பது தெரிந்தது.

''நம்பர் ஒன் டி.வி. பெர்சனாலிட்டியா உன்னை ஆக்கிக் காட்டறேன் பாரு...'' வார்த்தைகளை அவளுக்குள் விதைப்பதும் காதில் விழுந்தது.

எனக்கும் கூட இதே மாதிரியான போதை சொட்டும் வார்த்தைகளைத் தானே விநியோகித்தான். எதற்குமே கிறங்கி விடாமல் மூங்கிலாக இருந்தவளைச் சறுக்கவும் சரியவும் வைக்கத்தான் ஆதர்சப் பெண்மணி, தெய்வீகக் காதல் என்றெல்லாம் மூளைச்சலவை செய்தானோ? நான் பலியானதால் தான் சகலமும் இழந்திருக்கிறேன்.

மூச்சடைப்புகளும் முகச்சுளிப்புகளும் முதுகுத் துளைப்புகளும் முகக்களை இழப்புகளும் எனக்குத்தானே?

இப்போதும் அதேதான். அடுத்த பூ. அடுத்த தேன். அடுத்த மகரந்தச சேர்க்கை. சாக்கடையில் ஜீவிக்கும் பிறவியாக அவனிருந்தும் குற்றச்சாட்டுக் கைமரத்தை இவளின் பக்கமாகத் திருப்பின அன்றைக்குத்தான் என்றைக்குமில்லாமல் மூச்சடைத்தது கரீஷ்மாவுக்கு.

'யாருடீ அவன்? நெருக்கமா இருக்கே?' இப்படி ஒரு கைக்குண்டு வீசினான்.

'மணிக்கணக்கா பேசறியாமே... ஆபீஸே சிரிக்குது...' இப்படி ஒரு நாட்டுக்குண்டு வீசினான்.

'நான் அலுத்துட்டேனா? வெரைட்டி தேடுறியோ?' இப்படி ஓர் அணுகுண்டு வீசினான்.

செத்துப்போன அக்காவின் சாயலோடு இருப்பதாகச் சொல்லிக் கண்ணீர் வழியப் பேசும் அந்தப் பையனைத் தள்ளிவைக்கவா முடியும்? தீக்குளித்தா இவனுக்குப் புரியவைக்க?

'எல்லாம் முடிஞ்சாச்சா? பேச்சு மட்டும்தானா? படுக்கையுமா?'

விஸ்கி நாற்றத்தில் வீச்சமடித்த கேள்வி முடியும் முன்னாலேயே மளுக்கென்று சகலமும் முறிந்தது அவளுக்குள். அவ்வளவுதான். அது நாள் வரைக்கும் அந்த நிமிஷம் வரைக்கும் கூடப் பழைய பழக்கத்தின் சாயலில், பிரேமையின் வாசனையில், நப்பாசையில் ஒட்டின மனசு தனியே கழன்று விழுந்தது. ஒட்டவே முடியாத சில்லுகளாக உடைந்து விழுந்தது. மகளுக்குத்தான் சூழல் மாற்றம் புரியவில்லை.

'நம்ம வீட்டுக்கு எப்போம்மா போவோம்?' என்கிறது இப்போதெல்லாம்.

'அப்பா ஏம்மா வேற வீட்டுல?' என்கிறது அப்பா ஏக்கத்தில்.

'அப்பா மேல கால் போட்டுத் தூங்கணும்மா...' என்கிறது கண்கிறங்கி, மனசு மயங்கி.

இந்தக் குருத்துக்குப் புரியுமா? குழந்தைமை ததும்பும் மனசுக்குக் குரூரத்தின் வீச்சு புரியுமா? அம்மாவின் மனசை ஆயிரம் குத்தீட்டிகள் குத்திக் கிழித்துப் பார்த்த வேதனையின் விதை புரியுமா?

பெரியவளானதும் 'நீ சரியாத் தாம்மா பண்ணினே' என்பாளா?

'அப்பாவோட நீ கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிருக்கணும்மா. உன் பிரச்னைக்கு நான் பலிகடா ஆயிட்டேன். இதுமாதிரி, அப்பா வாசம் தெரியாம வளரணும்னு வரமா எனக்கு' என்பாளா?

இப்படிச் சொல்லமாட்டாள் என்று என்ன உத்தரவாதம் இருக்கிறது? சமூகத்தின், அவளின் புரையோடின அழுகல் ரத்தம்தானே மகளின் உடம்பிலும் ஓடுகிறது? என்னுடைய ஸ்நேக தர்க்கம் அவளுக்குப் புரியுமா? தப்பென்றால் தப்புதான். இழைப்பவர் யாராயிருந்தால் என்ன என்கிற நியாய உணர்வுதான் அத்தியாவசியம் என்கிற தர்க்கம் புரியுமா அவளுக்கு?

''மேடம்... காண்ட்ராக்ட்ல கையெழுத்து...'' உதவியாளர் நீட்டினார்.

கையெழுத்துப் போட்டாள். வழக்கமான சுலபத்தன்மையோடு வெண்ணெயாக பேனா ஓடியது.

''ஓ... இதை மாத்தல்லியா? சேர்த்துத் தான் எழுதறீங்களா?''

ஒப்பந்தத்தின் கையெழுத்தில் கண்ணை ஓட்டினாள். பத்து வருஷ அனிச்சைச் செயல். இன்றைக்கும் அனிச்சையாக. என்ன பண்ணலாம்? குறிகளையும் அடையாளங்களையும் நிர்ப்பந்தமாகத் துடைத்து, வெட்டி, நிர்மூலமாக்கியாயிற்று. இது மட்டும் எதற்கு?

''இனிமே பாரு. அவ சுக்குநூறா உடைஞ்சு போகணும். நடைபிணமாத் தான் சுருண்டு கெடக்கணும். இந்த மாதிரிப் பொம்பளைங்களுக்கு நம்ம ஊர்ல தெருநாய் மரியாதைதானே? லைசென்ஸ் இல்லாத வண்டி. எவன் வேணுமானாலும் ஓட்டுவான்.''

அந்தத் தொகுப்பாளர் பெண்ணோடு நெருக்கமாக நடந்து இவளின் அறையைக் கடந்து போனான் அவன். அவன் சிந்திய வார்த்தைகளின் வீச்சம் உயிரையே பிடுங்கியது. இவனிடமிருந்து இதைவிட நாகரிகத்தை, நாசூக்கை எதிர்ப்பார்ப்பதுதான் தவறு. இவனின் உயரம் அவ்வளவுதான்.

''ஜீவனாம்சம் கூட வேண்டாம்னுட்டாங்களாம்...''

''ம்... அவளுக்கெதுக்கு என்னுது? கொட்டறதுக்கு நிறைய ஆளுங்கதான் இருக்கானுங்களே சகலத்துக்கும்.''

த்தூ...

''கொடுங்க அதை.''

உதவியாளரிடமிருந்து ஒப்பந்தப் படிவத்தை வாங்கி மீண்டும் புதிதாகப் பரபரவென்று அடித்தாள். உடம்பின் ஒரு பாகத்தை உணர்வோடு வெட்டி, நறுக்கி எறிந்தது மாதிரி இருந்தது. எரிந்தது. குமுறியது. கொதித்தது.

இவளின் பெயர் மட்டும் தனியாக. பக்கத்தில் நீளமான கறுப்புச் செவ்வகம். மூளியாகத் தெரிந்த மாதிரி இருந்தாலும் தனித்த பெயரிலும் முழுமை இருப்பதாகப் பட்டது. வாய்விட்டுச் சொல்லிப் பார்த்தாள். தன் பெயரே தனியாக, அந்நியமாக ஒலிப்பதாகப் பட்டது. இத்தனை வருஷமாக ஆயிரக்கணக்கான தரம் அவனின் திருமதி என்று அறியப்பட்டது. இனி அவசியமில்லை. இவளின் நிஜப்பெயர் ஞாபகத்துக்கு வரக்கூடக் கொஞ்ச காலம் பிடிக்கலாம். ஆனால், அடையாளம் அது தான். சுய அடையாளம் நிரந்தரமாக.

''பெயர் போடும்போது - என்னுடையது மட்டும்தான் இருக்கணும்னு சொல்லிடுங்க.''

செய்தி அறிக்கைத் தாளோடு கிளம்பினாள்.

''ஒரு சூரியன், ஒரு சந்திரன் மாதிரி அம்மா, அப்பா, புருஷன், பொண்டாட்டி, ஒண்ணே ஒண்ணு தான் கண்ணம்மா. இல்லைன்னா நாமளும் நாய் மாதிரி நாலு கால்ல நடக்கலாம்.''

மகளுக்கு - எதிர்காலத்துக்கான பதில் - இப்போதே தயாராகி, மனதில் பெட்டகத்துக்குள் புதைந்து கொண்டது.

செய்திகள் 'மான்டேஜ்' முடிந்து சமிக்ஞை கிடைத்ததும் - ''வணக்கம் விரிவான செய்திகள்.''

- புன்னகைத்தாள். தெளிவாக. விஸ்தாரமாக.

அவளின் அதலபாதாள வீழ்ச்சி குறித்தான அவனின் பலமான எதிர்பார்ப்புகளை நொறுக்கும் வத்திக் கழியாகத் தூது சென்றது அந்தச் சிரிப்பு. ®

# தோஷம்

ஒரே நாளின் மூன்று காட்சிகளின் தொகுப்பு இது.

கதாநாயகி : கல்யாண லட்சுமி

களம் : தனியார் மருத்துவமனை, அலுவலகம், வீடு.

பிரச்னைகள் : இரண்டு.

## காட்சி ஒன்று

"இது - கலாச்சார அதிர்ச்சி தரக்கூடியது. நீங்கள் சந்திக்க வேண்டிய சமூகப் பிரச்னைகள் ஏராளம். காறி உமிழ்வார்கள். வார்த்தையால் விளாசுவார்கள். ஊர்ப்பிரஷ்டம் செய்வார்கள். அது தரும் மன அழுத்தம் உங்களையே சிதைக்கக் கூடும். எல்லாவற்றையும் நினைப்பில் வையுங்கள். வாழ்த்துக்கள்..."

காலையிலேயே வந்திருந்த கல்யாணலட்சுமியிடம் சொல்லப்பட்ட வாசகம் இது - நூறாவது முறையாக. ஆலோசனை சமயங்களிலெல்லாம் மந்திரமாக ஓதப்பட்ட விஷயம்தான். சகலத்தையும் நிறைவேற்றி இன்று மொத்தமாகச் சொன்னபோது, சிரிப்பைத் துணைக்குச் சேர்த்துக் கொண்டாள் கல்யாணலட்சுமி.

"இத்தனை வயதுவரை என்னைத் துரத்தாத சமூகப் பிரச்னையா டாக்டர்? சமூகம் துளைத்துப் பார்த்தே என் உடம்பு முழுசும் சல்லடையாகி விட்டது. அது தராத மன அழுத்தமா? சமூகத்தைக் குப்பைத்தொட்டியில் போடுங்கள். காறி உமிழும் அதன் எச்சில் காய்ந்து விடும். குதர்க்க வார்த்தைகள் ஓய்ந்துவிடும். ஆனால், இந்த வரம் - ஜென்ம சாபல்யமல்லவா? மரித்துப் போயிருந்த எனக்கு உயிரூட்டி இருக்கிறீர்கள்... நன்றி டாக்டர்..."

ஒற்றை வளையல் தவழ்ந்த மருத்துவரின் கையை எடுத்து முத்தமிட்டாள் கல்யாணலட்சுமி.

# காட்சி இரண்டு

அந்தக் கல்யாண அழைப்பிதழிலிருந்த நாகஸ்வர கோஷ்டியினர் சகலரும் குட்டி குட்டியாகக் கீழிறங்கினர். சுண்டுவிரல் அளவுக்கு நாகஸ்வரம். மேளம். தவில். சகலத்தையும் மூச்சைப்பிடித்து வாசித்தனர். ஊர்வலத்தின் முன்னால் நடந்தனர். சுட்டுவிரல் நீளத்தில் பெட்ரோமாக்ஸ் விளக்கேந்தினவர்களின் கம்பீர நடை. உள்ளங்கை நீள ஊர்வல காரில் - பெண்ணும் மாப்பிள்ளையும் பிடிப்பிள்ளையார் மாதிரி - ஒரு இன்ச் உயரத்தில் வெட்கமாக இருந்தார்கள். கல்யாணத்துக்கு விலாசம் சொல்லும் கலாட்டா, சிரிப்பு, கதம்ப வாசனை எல்லாமே லில்லிபுட் அளவில்.

போன மாசம்தான் பணியில் சேர்ந்த டைப்பிஸ்ட்டின் கல்யாணப் பத்திரிகைஅது. கல்யாணலட்சுமி அதைக் கண்கொட்டாமல் பார்த்தாள். பார்க்கப் பார்க்க, சுவாரஸ்யம் வலைபின்னியது. மேஜையில் கன்னத்தைச் சரித்து - அழைப்பிதழை ஐம்பதாவது முறையாக வாசித்து முடித்தாள். சகலவாசகங்களும் மனப்பாடம். இதுமாதிரியான நூற்றுக்கணக்கான பத்திரிகைகளை ரசித்து ஏங்கிய முன் அனுபவம். ஒவ்வொரு தரம் வாங்கும்போதும் 'நானும் ஒரு நாள் இதுமாதிரி விநியோகிப்பேன். திருமணக்களை சொட்டச்சொட்ட, வெட்கம் இழையோடப் பத்திரிகை தருவேன். குடும்பத்தோட வந்துருங்க. இருந்து சாப்பிட்டுத்தான் போகணும்... இன்னபிற கல்யாண அழைப்பிதழ் வசனங்களைச் சொல்லுவேன்...' இப்படியான கனவு சுவாசம்... பதினெட்டு வருஷமாகக் கனவிலேயே குடியிருக்கிறது. அவளின் காலத்தில் ஒரு வசனத்தைக்கூடப் பிரயோகிக்கும் சம்பவம் நிகழாத விசனம். நம்பிக்கை இழை உயிரிழந்து கொண்டிருக்கிறது நாளுக்கு நாள். இனி? முற்றுப்புள்ளி தான்.

தேவாங்கு மாதிரி குட்டிகளுக்குக் கூடக் கல்யாணம் சுலபமாக நடக்கிறது - எந்தத் தடங்கலும் இல்லாமல். கல்யாணத்துக்கு அப்புறம், விடுப்பு முடிந்து வரும்போது - அதுகள் மூஞ்சியில் நூறு வாட்ஸ் பல்ப் மாதிரி தேஜஸ் வந்து தொலைக்கிறதே... அது என்ன இழவு ரசவாத வித்தையோ? இதுகூடப் பரவாயில்லை. தேவாங்கும் பிள்ளை உண்டாகிப் பெற்றுப் பிழைத்துக் கையிலொரு குட்டியோடு, அம்மாக்களையோடு வலம்வருமே... கொடுத்து வைத்த நாய்கள். கல்யாண லட்சுமிக்குள் பொறாமை பொறி பறந்தது.

'கண்விழிப்பதும் சோற்றில் கை நனைப்பதும், பேருந்துக் கூட்டத்தில் கூழாவதும், வியர்வை நாற்றத்தில் பாழாவதும், அலுவலக

நாற்காலியைத் தேய்த்து, மாற்றமேயில்லாத மணித்துளியை அடைகாப்பதும், பெண் பார்க்கும் படலத்தில் வெட்கத்தைத் தேடி எடுத்து முகத்தில் அப்பிக் கொள்வதும், மாப்பிள்ளையின் தலையசைப்புக்கு ஏங்குவதும், மறுப்பு சுமக்கும் கடுதாசிகளை வெறுப்புடன் ஜீரணிப்பதும், பெருமூச்சும் பின்னிரவு அழுகையும் பிறரின் கல்யாணத்தில் வயிற்றில் தகிக்கும் பொறாமை அக்கினியில் வெந்து போவதும் தான் என் ஜென்மக்கடனோ? புருஷனின் ஸ்பரிசத்துக்கும் ஆண்மைத்தனமான வருடலுக்கும் மோகம் தரும் முத்தத்துக்கும் பித்தம் தரும் கொஞ்சலுக்கும் ஏங்கியே செத்துப் போவேனோ?' நித்தமும் புழுங்குவாள் கல்யாண லட்சுமி.

'ஒற்றை ஜீவனாகவே மரித்து விடுவேனா? என் அன்பை, என் நேசத்தை, என் பிரேமையை, என் காதலை, என் ஸ்நேகத்தை ஸ்வீகரிக்க ஜீவனே கிடையாதா? கிடைக்காதா? எனக்கான வேர்ப்பிடி மண் இல்லாமல் தரிசாகத்தான் போவேனா? அம்மா, அப்பாவுக்கப்புறம் நானும் நாலு சுவருமாக ஜீவிக்கவா? வீட்டின் பல்லியும் பாசியும் ஒட்டடையும் ஸ்டெனோ குறிப்பேடும்தான் என் சுவாசத்துணையா? உயிரோடு, மனசோடு, உணர்வோடு நெருங்க யாருமேயில்லாத அநாதைப் பிறப்பா நான்?' கண்ணீரில் உருகுவாள் கல்யாணலட்சுமி.

இத்தனை வயசுக்கும் ஒற்றைப் பொம்பளையாயிருப்பதில் இன்னொரு கஷ்டமும்கூட. முப்பது வயசிலேயே கொஞ்சம் கொஞ்சமாகக் குழைவையும் மென்மையையும் தாரைவார்க்க ஆரம்பித்தாயிற்று. முகத்திலும் தாடையிலும் ஆங்காங்கே கனமான ஒற்றை முடியின் ரோம சாம்ராஜ்யம். மெதுமெதுவாக உடம்பு முழுவதும் ஒரு பிளாஸ்டிக் தன்மை. விறைப்பின் ஆக்கிரமிப்பு. தவிர்க்கவே இயலாமல் ஆம்பளைத்தனமான தடதடவென்ற நடை. எந்தக் கொம்பனைப் பற்றியும் கவலையேயில்லை என்கிற தெனாவெட்டான தோரணை. நளினம் தொலைத்த மூங்கில் முதிர்ச்சி. இளமையில் மென்மையாயிருந்த எனக்குள்ளிருந்து இன்னொரு நான் ஜனனம்.

புதுசாகக் கல்யாணமானதுகள் ஸ்கூட்டர், பைக் என்று இளமை ஜொலிக்கப் பறப்பதைப் பார்க்கும் போது மனசு நமநமக்கும். வெறுப்பாயிருக்கும். அப்படி இறுக்கிப் பிடித்துப் பறக்க எனக்கு வாய்க்க வில்லையே! ஆதங்கம். 'வேகமாய்ப் போய் முட்டிமோதிக் கவிழுங்கடா. நாய்களா...' மனசு அனிச்சையாகச் சாபமிடும். கல்யாணத்துக்குப் போனால் 'ஏதாவது பிரச்னை வெடிக்காதா? இந்தப் பெண் வேண்டாம். இதோ, இவளைக் கட்டிக் கொள்கிறேன்...' - திடீர்த்

திருப்பமாகத் தாலி என் கழுத்தில் ஏறாதா? ஆயிரம் எதிர்பார்ப்பு கல்யாணலட்சுமிக்குள் முளைவிடும்.

அவ்வளவு ஏன்? பாத்ரூமில் குளிக்கையில் கையோடு ரகசியமாகக் கொண்டுவந்திருக்கும் மஞ்சள் கயிற்றைக் கழுத்தில் மாட்டிக் கொண்டு, கோத்திருக்கும் மஞ்சள்கிழங்கைக் கண்ணில் ஒத்திக்கொள்வதும், அதை வெற்று மார்பில் படரவிட்டுக் கண்ணாடி பார்த்துப் பூரிப்பதும், வெளியே வரும் போது கழற்றி அலமாரியில் ஒளித்து வைப்பதும்கூட ரகசியக் கடமைதானே? இந்த முப்பத்தெட்டு வயசுக்குத் தேவையா இது மாதிரி திருட்டு சுவாசம்?

''லக்னத்துலேர்ந்து எட்டாமிடம் சுத்தமில்லே...''

''களத்திர ஸ்தானம் நீசமாயிருக்கு...''

''மாங்கல்ய ஸ்தானம் பலமாயில்லியே ஜாதகத்துல. உங்க திசைக்கே ஒரு கும்பிடு...''

சகலரின் வசனமும் இதுதான். முதுகெலும்பில்லாத முட்டாள்கள். பிடரியில் இடித்துப் புறமுதுகிட்டு ஓடினவர்களை இழுத்துப் பிடிக்கவா முடியும்? அவனவன் சோறும் நீரும் ஏற்கெனவே எழுதப்பட்டது தானே? தோஷம் இல்லாத பெண்ணின் புருஷன் எவனாவது நூறாண்டு இருந்திருக்கிறானா? ஜாதகச்சிறை இங்கு மட்டும்தானே? பேசாமல் அமெரிக்கனோ, ஆப்பிரிக்கனோ கிடைத்தால் இழுத்துக்கொண்டு ஓடி விடலாம். இப்படியான நினைப்பில் ஆழ்பவள்தான் கல்யாணலட்சுமி.

பன்னிரண்டு கட்டங்களுக்குள் கையும் காலும் விரித்து அவளை ஆணியடித்து மாட்டியது மாதிரி இருக்கிறது. ஒவ்வொரு கட்டமும் பாம்பாக மாறி, உயிரோடு அவளை விழுங்குவது மாதிரியும் இருக்கிறது. தப்பித்தல் இல்லாமல் எல்லாக் கிரகங்களுமே வேலியாக நின்று தொடர்ச்சியாகத் துரத்துவது மாதிரியும் இருக்கிறது.

''தோஷம் தோஷம்னு சொல்லாதீங்க தரகரே! பொண்ணு, மாசம் நாலாயிரம் சம்பாதிக்கறா... சமையல் அபாரம்...''

''ம்... இருக்கலாம். திருக்கணிதம் வாக்கியப் பஞ்சாங்கம் எப்படிப் போனாலும் செவ்வாய் தோஷம். ஏகதோஷம் - ஜாதகத்தை முன்னப்பின்ன மாத்தி எழுதி முடிச்சுடலாம் தான். தெரிஞ்சுடுத்துன்னா பிரச்னை. ஒரு லட்சம் ரொக்கம் குடுத்தா - ஒப்புக்க வெச்சுடலாம்...'' ஆசை காட்டினார் தரகர்.

களத்திர ஸ்தானத்தைச் சுத்தப்படுத்த ஒரு லட்சமா? புதர் மண்டிக்கிடக்கும் தரிசுநிலமா அந்தக் கட்டம்? அப்படியேனும் ஒரு மீசைக்குப் பொண்டாட்டியாகித் தாசி வேலை பண்ணவா? எவன்டா கண்டுபிடிச்சான் ஜாதகத்தை? தூத்தேறி.

''பொண்ணுக்கு வயசாயிடுச்சே...''

''முகம் முத்திப்போச்சு மாமி உங்க மகளுக்கு...''

''ரெண்டாம் தாரத்துக்குக்கூட இளசைத்தான் கேக்கறாங்க....''

-பருவத்துக்கேற்ற வசனச்சாட்டை செருகல்.

''கல்யாணலட்சுமி மேடம். போன் உங்களுக்குத்தான்...'' உலுக்கப்பட்டாள்.

''ஹலோ...?''

''எப்படி ஃபீல் பண்றீங்க லட்சுமி? கஷ்டமாயில்லியே? சந்தோஷமா இருக்கீங்களா?'' எதிர்முனையில் மருத்துவர்.

''ம். ரொம்ப... ரொம்ப கர்வமாயிருக்கேன்...''

வயிற்றுக்குள் ஐஸ்க்ரீம் மழை ஜிலுஜிலுவென்று நெளிந்தோடியது. சுகமின்னல் ஜனனம். இத்தனை நாளும் உணராத வித்தியாச அனுபவம். கனவை நிஜமென்று ஆக்கிக்கொண்ட கர்வம் - அவளுக்குள் குறுக்கும் நெடுக்குமாகப் பாவு கட்டியது. வேறு யாருக்கும் தெரியாத ரகசியத்தைக் கர்ப்பம் சுமப்பது கர்வமாக இருந்தது. நிஜமா? நிஜம்தானா? என் கனவின் நீட்சியா? விடியலின் சூரியக்கதிரா? எனக்கே எனக்கா?

இப்போதெல்லாம் கடைக்குப் போனால் குழந்தைகள் பகுதியிலேயே குடியிருந்துவிடலாமா என்று மனசு கிறங்குகிறது. அந்த இடத்துக்கே ஒரு பாப்பா வாசனை வீசுகிறது. காற்று கூடப் பூ மாதிரி மெல்லிசாகப் பேசுகிறது. உள்ளங்கை அகலத்தில் பாப்பா ஜட்டி, பாப்பா சட்டைக்குள் சொர்க்கத்தின் முகவரி நெய்திருப்பதாகத் தெரிகிறது.

புருஷன் ஆசையைக்கூடத் தகனம் செய்துவிடலாம். ஆலாகப் பறக்கக் கூடிய அளவுக்குத் தகுதியேயில்லாத ஆசை என்று மனசைச் சமாதானப்படுத்திக் கொள்ளலாம். ஆனால், குழந்தை ஆசை? எனக்கே எனக்கென்று ஒரு குழந்தை. நானே வயிற்றில் சுமந்து அணு அணுவாக ரசித்து, வளர்ச்சியைச் சுகித்து, மசக்கையில் துவண்டு, மூச்சு முட்ட வயிறு பெருத்து, நிறை மாசமாகிப் பெற்றுப் பிழைத்துப் பூச்செண்டு மாதிரி கைநிறையக் குழந்தையை வாரியெடுத்து - அதன் தேவலோக வாசனையை உயிரெல்லாம் ஸ்வீகரிக்கும் வரம். இந்த இப்பிறவியில் கிடைக்குமா? பட்டாம்பூச்சியை - கண்திறக்கும் பாப்பாவைத் தரிசனம் செய்தால் பண்ணிய பாவமெல்லாம் கரையாதோ?

அன்றைக்கொரு நாள் பேருந்தில் கைக்குழந்தையோடு உட்கார்ந்திருந்தவளிடம் தயக்கமாகக் கேட்டு அவளின் குழந்தையை, உடம்பு நெகிழ நெகிழ மடியில் தாங்கிக் கொண்ட அந்த அஞ்சு

நிமிஷத்தில் தலையோடு காலாகப் புல்லரித்தது. தொடைகள் வழவழத்தன. கண்ணீர் பொங்கியது. பரவசத்தில் லேசாய் ஒன்றுக்குக் கூடப் போய்விட்டது எனக்கு. குழந்தை... குழந்தை! என் மடியில் ஒரு குழந்தை என்று சந்தோஷத்தில் ஜுரமே வந்துவிட்டது.

என்னுடைய நினைப்பு தெரிந்த சமீப நாட்களாக அம்மாவுக்கு இந்தக் கவலை வேறு வயிற்றில் புளிகரைக்கிறது.

''அப்படி ஏதும் பண்ணிடாதேடீ. மானமே போயிடும்...'' அம்மா மனசுக்குள் அரற்றுவது - சுவாசம் வழியாக வெளியேறி கல்யாணலட்சுமியின் காதுக்குக் கேட்கிறதுதான். ஆனால், வேறு வழி?

'மதுரை அத்தை பொண்ணுக்கு ரெட்டைக் குழந்தைங்க பொறந்திருக்கே... அவளை வேணும்னா கேட்டுப் பார்க்கலாமா?'

ஆயத்தக் குழந்தையா என் தேவை? தத்தெடுத்ததைவிடப் பெத்தெடுக்கும் சுகத்துக்குத்தானே ஒற்றைக்கால் தவமிருக்கிறேன். நானே கருத்தரித்து, வித்து தாங்கி, மார்னிங் சிக்னெஸ்ஸில் கிறுகிறுத்து, குமட்டி, வாந்தியெடுத்து, வலியெடுத்துப் பெற்றுப் பால் கொடுக்க, முலைக்காம்பை அது கடிக்கும்போது கிடைக்கும் சுகவலியை ஸ்வீகரிக்க, நானே பெற்றெடுக்கும் சுகம்தானே என் தேடல்? பிரசவவலி என்னைப் பிழிந்தெடுக்க வேண்டும். உயிர் ஜனனத்துக்காக உடல் முறுக்கவேண்டும். வியர்க்கவேண்டும். விறுவிறுக்க வேண்டும். வெள்ளை முத்தாகப் பால் சொட்ட வேண்டும். ரோஜா இதழால் குழந்தை சப்பிக் குடிக்க வேண்டும். குளுகுளுவென்று உடம்பு முழுசும் குற்றாலம் குடியிருக்க வேண்டும்.

என்னை நானே தாய்மையில் குளிப்பாட்டிக்கொள்ள வேண்டும். எனக்கு நானே தரும் வரம் அது.எனக்கு நானே சூட்டிக் கொள்ளும் கிரீடம் அது. என் நேசத்தின் நீட்சி அது. என் பாசத்தின் பரப்பளவு அது. என் உயிரைச் சுமந்திருக்கும் ஜீவப் பெட்டகம் அது.

சமூகம் என்னைப் பிய்த்துச் சுவைத்து மென்று தின்று துப்பினாலும் பரவாயில்லை. எல்லா வாசலும் அடைக்கப்பட்ட சமூகக் கல்லறையில் எனக்கான சுவாசக் குழாயை நானே அமைத்துக் கொண்டது நியாயம்தான். மனைவி வரம்தான் மறுக்கப்பட்டது. அம்மா அவதாரம் எனக்கு நானே தரும் வரம். ஒற்றை மனுஷியாக்கி என்னைச் சுண்ணாம்புக் காளவாய்க்குள் தள்ளியவர்களுக்கு நான் தரும் அக்கினிக் குளியல். கட்டங்களுக்குள் சிக்கிய சகதிச் சமூகத்தை நசுக்க வந்த தேவன் என் வயிற்றுக்குள் கோயில் கொண்டிருக்கிறான்.

''என்ன மேடம்? பூரிப்பாயிருக்கீங்க? கல்யாணம் நிச்சயமாயிருச்சா?''

''ம்ஹூம். கர்ப்பம் நிச்சயமாயிருச்சு...''

அதிர்ச்சியில் குளித்தாள் கேள்வியை எழுப்பியவள். நிறைவாகச் சிரித்தாள் கல்யாண லட்சுமி.

## காட்சி மூன்று.

''பொண்ணு கல்யாணம் பத்திக் கொஞ்சம்கூடக் கவலை யில்லாமல இருக்கேளே...''

''என்னடி பண்ணட்டும்? அவ கொடுப்பினை அவ்வளவுதான். களத்திரம் சுத்தமில்ல. தோஷம் நல்லதுக்குதான்னு வெச்சுக்க. அவ சம்பாத்யம் வேணும்டி. ஒரு கால பூஜைகூட இல்லாத கோயில் சம்பாவனைல மூணு ஜீவனம் நடக்குமாடி...?''

பூட்டிய கதவு தாண்டிக் காதுக்குள் நுழைந்த வார்த்தைகளின் குணம், மணம், தன்மை கல்யாணலட்சுமிக்கு அடையாளம் தெரிந்தது. கதவு திறந்தாள் அம்மா.

''வந்துட்டியாடி? பாலைவார்த்தே... பஸ் ஸ்டாண்டிலே வந்து பார்க்கறதுக்கு அப்பா கிளம்பிண்டிருக்கார்...''

''..........''

''முகம் ஜொலிக்கிறதே, பிரமோஷன் கிடைச்ச மாதிரி...''

''பிரமோஷன்தான்...''

''நிஜம்மாவாடீ?''

''ம்... மாமனார் - மாமியார் ஆகாமலே நீங்க தாத்தா - பாட்டி ஆகப்போறீங்க...''

''அடப்பாவி... நினைச்சதைப் பண்ணிட்டியே. குடிமுழுகிடுச்சே. அருவருப்பா இல்லியா? ஏன்னா... இங்க சித்த வாங்கோ...'' - பதறினாள் அம்மா.

களத்திரஸ்தானாதிபதி சரியில்லையென்றால் புத்திரஸ்தானாதிபதி சரியாயிருக்க முடியாதா? சரிபண்ண முடியாதா?

புத்திரஸ்தானத்தை நானே ஸ்புடம் போட்டுக் கொண்டேன். விதை நெல் - கடன் வாங்கி.

நவாம்சம், ராசிக்கட்டம் எல்லாவற்றிலும் ஸ்டெதாஸ்கோப்பும் ஊசியும் உட்கார்ந்திருக்கும் புதுஜாதகம் இது. ஊசியே என் கணவன். டாக்டரே தரகர். வயிற்றில் நீந்தும் இரவல் வித்து... என் உடம்பு முழுசும் சொர்க்கத்தைக் காப்பியம் எழுதுகிறது.

அம்மா, அப்பா என்று இரண்டு முகம் கொண்ட புது அம்மன் நான். ஜாதகமாம் ஜாதகம். பொல்லாத ஜாதகம்.

◎

"...சொல்புதிது -
சுவைபுதிது -
என்றானே பாரதி..?
உங்கள்
கதையின்
நடைபுதிது.
மொழிபுதிது.
சொல்லும்
விதம் புதிது.
எத்தனை
*BOLD ATTEMPT?*

-இளசை அருணா

